உ

கணபதி துணை

கடைச் சங்கப்புலவருள் ஒருவராகிய

மதுரைக்

## கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்

அருளிச்செய்த

# மணிமேகலை

---

இது

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

**டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்**

பலபிரதிகளைக்கொண்டு பரிசோதித்து

நூதனமாக எழுதிய அரும்பதவுரையோடும்

பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களோடும்

அவர்கள் குமாரர்

**S. கலியாணசுந்தரையரால்**

சென்னை

புரசபாக்கம் வீனஸ அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

[நான்காம்பதிப்பு]

ஸர்வதாரி ௵ மார்கழி

 1949 [விலை ரூபா ஏழு

# இப்புத்தகத்திலடங்கியவை.


| | | பக்கம் |
|---|---|---|
| 1 | இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலிய வற்றின் முதற்குறிப்பகராதி .. | v |
| 2 | பிழையும் திருத்தமும் .. | vi |
| 3. | இப்புத்தகத்தில் எடுத்தாளப்பட்ட பலவகை நூற் பெயர்கள் .. | vii-viii |
| 4 | முகவுரை .. | viii-xx |
| 5 | குறிப்பு | xx |
| 6 | நூலாசிரியர் வரலாறு | xxi-xxvi |
| 7 | மணிமேகலையால் தெரிந்த அரசர்களின் பெயர் முதலியன .. ... | xxvii-xxviii |
| 8 | மணிமேகலைக் கதைச் சுருக்கம் ... | 1-64 |
| 9. | மணிமேகலை மூலமும் அரும்பதவுரை முதலியனவும் ... | க - ருகூ௦ |
| | பதிகம் .. | க |
| க | விழாவறை காதை... | கக |
| உ | ஊரலருரைத்த காதை | கசு |
| ௩. | மலர்வனம் புக்க காதை | உஎ |
| ச | பளிக்கறை புக்க காதை | சஉ |
| ரு | மணிமேகலாதெய்வம் வந்து தோன்றிய காதை | ருச |
| சு. | சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதை | சுசு |
| எ. | துயிலெழுப்பிய காதை .. | அரு |
| அ | மணிபல்லவத்துத் துயருற்ற காதை . | கூரு |
| கூ | பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதை .. | க௦க |
| க௦. | மந்திரங் கொடுத்த காதை | க௦எ |
| கக | பாத்திரம் பெற்ற காதை | ககஎ |

| | | பக்கம் |
|---|---|---|
| ௧௨. | அறவணர்த் தொழுத காதை ... | ௧௩௪ |
| ௧௩ | ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை . | ௧௪௨ |
| ௧௪ | பாத்திர மரபு கூறிய காதை .. | ௧௫௨ |
| ௧௫ | பாத்திரங்கொண்டு பிச்சைபுக்க காதை . | ௧௬௩ |
| ௧௬ | ஆதிரை பிச்சையிட்ட காதை | ௧௬௯ |
| ௧௭. | உலகவறவி புக்க காதை | ௧௭௮ |
| ௧௮ | உதயகுமரன் அம்பலம் புக்க காதை . | ௧௮௬ |
| ௧௯ | சிறைக்கோட்டம் அறக்கோட்டமாக்கிய காதை | ௨௦௨ |
| ௨௦ | உதயகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்த காதை , | ௨௧௭ |
| ௨௧. | கந்திற்பாவை வருவதுரைத்த காதை | ௨௨௬ |
| ௨௨. | சிறைசெய் காதை | ௨௪௦ |
| ௨௩ | சிறைவிடு காதை .. | ௨௫௩ |
| ௨௪ | ஆபுத்திரனாடடைந்த காதை .. | ௨௬௫ |
| ௨௫ | ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதை | ௨௭௬ |
| ௨௬. | வஞ்சிமாநகர் புக்க காதை | ௨௯௩ |
| ௨௭. | சமயக்கணக்கர் தந்திறங்கேட்ட காதை . | ௩௦௧ |
| ௨௮ | கச்சிமாநகர்புக்க காதை | ௩௨௬ |
| ௨௯ | தவத்திறம்பூண்டு தருமங்கேட்ட காதை | ௩௪௬ |
| ௩௦ | பவத்திறமறுகெனப் பாவைநோற்ற காதை ... . | ௩௭௫ |
| 10. | மணிமேகலைப் பாட்டுக்களின் முதற்குறிப்பகராதி | ௩௯௧ |
| 11 | மணிமேகலைப் பிரயோகவிளக்கம் | ௩௯௨ - ௩௯௪ |
| 12. | மணிமேகலையில் வந்துள்ள வேறுகதைகள் | ௩௯௫ - ௩௯௬ |
| 13 | புத்ததேவனுடைய பெயர்கள் | ௩௯௭ - ௩௯௮ |
| 14 | மறுப்புக்கள் | ௩௯௯ - ௪௦௦ |
| 15 | அரும்பத முதலியவற்றின் அகராதி | ௪௦௧ - ௫௨௦ |

*

# இப்பதிப்பில் எடுத்துக் காட்டிய நூற்பெயர் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

---

அகநா - அகநானூறு
அடியார் - அடியார்க்கு நல்லார்
அறநெறி - அறநெறிச்சாரம்
ஆசார - ஆசாரக்கோவை
ஆதி - ஆதிபாவம்
இலிங்க - இலிங்க புராணம்
இறை - இறையனாரகப்பொருள்
எ-ம் - என்றும், எனவும்
ஐங்குறு - ஐங்குறுநூறு
ஒ - ஒப்பு
கம்ப - கம்பராமாயணம்
கல் - கல்லாடம்
கலி - கலித்தொகை
கலிங் - கலிங்கத்துப் பரணி
குண்டல - குண்டலகேசி
குறிஞ்சி - குறிஞ்சிப்பாட்டு
குறுந் - குறுந்தொகை
கூர்ம - கூர்ம புராணம்
சமய - சமய திவாகரம்
சிலப் - சிலப்பதிகாரம்
சிவ சித்தி - சிவஞானசித்தியார்
சிறப் - சிறப்புப் பாயிரம்
சிறுபா - சிறுபாணாற்றுப்படை
சீவக - சீவகசிந்தாமணி
சூ - சூத்திரம்
சூடாமணி - சூடாமணி நிகண்டு
சூளா - சூளாமணி
ஞானப் - ஞானப்பிரகாசர் உரை
தக்க - தக்கயாகப்பரணி
தஞ்சை - தஞ்சைவாணன் கோவை
தமிழ்நா - தமிழ்நாவலர் சரிதை
திரி - திரிகடுகம் [வையார்
திருச்சிற் - திருச்சிற்றம்பலக்கோ
திருஞான - திருஞான சம்பந்தமூர்த்தி
திருவந் - திருவந்தாதி [நாயனார்
திருவா - திருவாசகம்
சிவ - சிவப்பிரகாசம்

தே - தேவாரம்
தொல் - தொல்காப்பியம்
ந - நச்சினார்க்கினியருரை
நள - நளவெண்பா
நன் மயிலை - நன்னூல் மயிலைநாதருரை
நன் வி - நன்னூல் விருத்தியுரை
நாலடி - நாலடியார்
நீல - நீலகேசி
நெடுநல் - நெடுநல்வாடை
ப - பக்கம்
பட்டின (பட்டினப்) - பட்டினப் [பாலை
பதி - பதிகம்
பதிற்றுப் - பதிற்றுப்பத்து
பரி - பரிபாடல், பரிமேலழகருரை
பரிமேல் - பரிமேலழகருரை
பழ - பழமொழி
பி - ம் - பிரதிபேதம்
புறநா - புறநானூறு
பு வெ - புறப்பொருள் வெண்பா
பெரிய - பெரியபுராணம் [மாலை
பெரியாழ்வார் - பெரியாழ்வார் திருமொழி
பெருங் - பெருங்கதை [படை
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்
பேரா - பேராசிரியருரை
பொருந - பொருநராற்றுப்படை
மணி - மணிமேகலை
மதுரை - மதுரைக்காஞ்சி
மலைபடு - மலைபடுகடாம்
மு - முற்றும்
முருகு - திருமுருகாற்றுப்படை
முல்லை - முல்லைப்பாட்டு
மூத்ததிருப் - மூத்த திருப்பதிகம்
மேருமந்தர - மேருமந்தரபுராணம்
மேற் - மேற்கோள்
வீர - வீரசோழியம்

---

# இப்புத்தகத்தில் எடுத்தாளப்பட்ட பலவகை நூற்பெயர்கள்

[இவற்றிற் பெரும்பாலனவற்றைப் பற்றிய வரலாறுகளை அரும்பத முதலியவற்றின் அகராதியிற் காணலாகும்.]

அகநானூறு, அங்கம் ஆறு, அங்காகமம், அபிதாமபிடகம், அபிதாமார்த்த சங்கிரகம், அருணசிக்ஷை, அவதானகல்பலதை, அறநெறிச்சாரம், அன்னம்பட்டீயம், அநுமான ஸூத்திரம், ஆக்கினேய புராணம், ஆசாரக்கோவை, ஆசௌச சதகம், ஆசௌசநிர்ணயம், ஆத்திரேயம், ஆதித்திய பரியாய ஸூத்திரம், ஆபஸ்தம்ப கிருஹ்யம், ஆபஸ்தம்பம், ஆர்த்திப பிரபந்தம், ஆரிய பரியேஷண ஸூத்திரம், இசைத்தமிழ்நூல், இரகுவம்சம், இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கம், இலகுஜாதகம், இலிங்கபுராணம், இறையனார் அகப்பொருள், உதயணகுமார காவியம், உபதேசரத்னமாலை, உலோகவசனம், ஏலாதி, ஐங்குறுநூறு, ஐந்திரம், ஓவியநூல், கடகாபாரகாவியம், கண்டபூஷணம், கம்பராமாயணம், கல்பசூத்திரங்கள், கல்லாடம், கலிங்கத்துப்பரணி, கலித்தொகை, காதம்பரி, கார்நாற்பது, காரைக்காலம்மையார் அற்புதத்திருவந்தாதி, ஷை திருவிரட்டைமணிமாலை, ஷை மூத்ததிருப்பதிகம், காவ்யகல்பலதா, காவேரிமாகாத்மியம், கிராதார்ஜுனீயம், கிருத்தகோடி, கிருஹ்யரத்நம், கிருஷ்ண யஜுர்வேதபாராயணம், கிழக்குத்திசைப்பரிசுக்கப் புத்தகங்கள், [illegible], குதாத்தபாயம், குண்டலகேசி, குமாரசம்பவம், குலவூர்[illegible]யம், குலோத்துங்கசோழனுலா, குவலயானந்தம், குறிஞ்சிப்பாட்டு, குறுந்தொகை, கூர்மபுராணம், கோகளசிக்ஷை, கோயிற்றிருப்பண்ணியர் திருவிருத்தம், கோவிந்தராஜீயம், கௌதமதர்மசூத்திரங்கள், சப்தகௌஸ்துபம், சாகுந்தலம், சித்தாந்தத்தொகை, சிலப்பதிகாரம், சிவஞானசித்தியார், சிவஞானபோதம், சிவபோகசாரம், சிறுபாணாற்றுப்படை, சீவகசிந்தாமணி, சூடாமணி நிகண்டு, சூளாமணி, ஞானசாரம், தக்கயாகப்பரணி, தசகுமார சரிதம், தசநிர்ணயம், தஞ்சைவாணன் கோவை, தத்துவபோதினி, தத்வத்ரயம், தமிழ்நாவலர் சரிதை, தருக்க சங்கிரகம், தாயிக சூத்திரம், தானபாரமிதை, திரிகடுகம், திருக்குறள், திருச்சிற்றம்பலக் கோவையார், திருஞானசம்பந்தர் திருக்கலம்பகம், ஷை திருச்சண்பை விருத்தம், ஷை திருத்தொகை, ஷை திருமும்மணிக்கோவை, ஷை திருவந்தாதி, ஷை திருவுலாமாலை, திருக்கண்ணி[illegible]புலா, திருத்தொண்டர் திருவந்தாதி, திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் திருவிரட்டைமணிமாலை, திருநாவுக்கரசர் திருவேகாதசமாலை, திருப்பதிகம், திருப்பல்லாண்டு, திருப்பெருந்துறைப்புராணம், திருமுருகாற்றுப்படை, திருவள்ளுவமாலை, திருவாசகம்,

திருவாதவூரடிகள் புராணம், திருவாய்மொழி நூற்றந்தாதி, திருவாராதனக் கிரமம், திருவிசைப்பா, திருவெங்கைக்கோவை, திருவெண்காட்டுப் புராணம், திவ்யப்பிரபந்தம், திவாகரம், தீக்கநிகாயம், தேவகோச நிகண்டு, தேவாரம், தொல்காப்பியம், நரிவிருத்தம், நவகதிர், நளவெண்பா, நற்றிணை, நன்னூல், நாகானந்தம், நாமலிங்காநுசாஸனம், நாரதசிக்ஷை, நாராயணீயம், நாலடியார், நாற்கவிராச நம்பியகப்பொருள், நீதிப்ரதீபம், நீலகேசி, நூற்றந்தாதி, நெடுநல்வாடை, நைஷதம், ப்ரபஞ்சஹ்ருதயம், ப்ரமேயஸாரம், ப்ராஜ்ஞாபாரமிதை, பகுசுருதியாகமம், பட்டிகாவியம், பட்டினப்பாலை, பதிற்றுப்பத்து, பரதநூல், பரமததிமிரபானு, பரிபாடல், பழமொழி, பன்னிருபடலம், பாகசாத்திரம், பாணினிசிக்ஷை, பாணினீயவியாகரணம், பாரத்துவாசம், பாரத்துவாஜசிக்ஷை, பிங்கலம், பித்ருமேதஸாரம், பிரதாபருத்திரீயம், பிரயோகவிவேகம், பிராகிருதப்பிரகாசம், பிராதிமுக்தக வினய வினிச்சயம், பிராதிமோக்ஷம், பிருஹத்கதை, பிருஹஜ்ஜாதகம், பிருஹத்ஸம்ஹிதை, பிருஹதாரணியகோபநிஷத், புத்தசரித காவ்யம், புத்தஜாதகக்கதை, புறத்திரட்டு, புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை, பூர்வாகமம், பெரிய புராணம், பெரியாழ்வார் திருமொழி, பெருங்கதை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, போதாயன தர்மசூத்திரம், போதாயனீயம், போதிஸத்துவாவதானகல்பலதை, மகாகண்டகம், மகாபரிநிர்வாணசூத்திரம், மகாவம்சம், மகாவாக்கம், மத்தியமநிகாயம், மதிவாணர் நாடகத்தமிழ்நூல், மதுரைக்காஞ்சி, மலைபடுகடாம், மனுஸ்மிருதி, மனோரமா, மஹாபதான சூத்திரம், மஹாஸீஹநாதசூத்திரம், மாகம், மாளவிகாக்கினிமித்திரீயம், மீமாம்ஸா சாஸ்திரம், முப்பத்தாறாயிரப்படி, முமுக்ஷுப்படி, முல்லைப்பாட்டு, மேகஸந்தேசம், மேதாதீயம், மேருமந்தர புராணம், மைத்ராயணீ உபநிஷதம், யதிராஜவிம்சதி, யாப்பருங்கலவிருத்தி, ரத்நாபரணம், வங்காகோவை, வராகம், வான்மீகிராமாயணம், விக்கிரமசோழனுலா, விக்கிரமோர்வசீயம் விம்பசாரகதை, வியாசசிக்ஷை, வியாசபாரதம், வினயபிடகம், வீரசோழியம், வேதாலபஞ்சவிம்சதி, ஜப்பானதேசத்துப் பௌத்தநூல்கள், ஸ்ரீ ஆதிவண் சடகோபஸ்வாமிவைபவம், ஸ்ரீபுராணம், ஸ்ரீவசனபூஷணம். ஸம்ருதிரத்னாகரம், ஸர்வகாலவாதசூத்திரம், ஸப்தகாதை, ஸம்யக் திருஷ்டிசூத்திராந்தம், ஸம்யுக்தநிகாயம், ஸர்வஸம்மதசிக்ஷை, ஸாரஸங்கிரகம், ஸித்தாந்தகௌமுதி, ஸித்தாந்தசிக்ஷை, ஸூக்திவிலோசனம், ஸூத்திரபிடகம்.

---

உ

கணபதி துணை

# முகவுரை

---

அகவல்

நன்றே ஞுக்கி ஞென்றுகைம் மிகூஉம்
களிறுவளர் பெருங்கா டாயினும்
ஒளிபெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே.”

வெண்பா

“காலையு மாலையுங கைகூப்பிக காறெழுதால
மேலை வினையெலலாங கீழவாம—கோலக
கருமானறேல் வெணணீறறுச செமமேனிப பைநதாரப
பெருமானைச சிறறம பலதது”

கட்டுரை

உலகமாா பனனூற் றிலகமா யிலகி
நவையறு மொனபான சுவைபுணாந தினிமைத
திரட்டுறு * மைநது பொருட்டொடா நிலைகளுள
அமிழதினிற சிறநத தமிழெனு மடநதை
அணிமே கலையா மணிமே கலைதான,
நசசும பெருமை முசசங கததுட
கறைமிடற றிறைவ னிறையனா ரெனுமபெயா
வாயநதே † புலமபல வாயநத வாயநத சஙகத
தொலலிசை பலவுறு நலலிசைப் புலவருட்
சீலமாா மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனாரெனனும

புலவாபெருமானால அருளிச செயயபபட்டது, இளம்பூரணா, பேராசிரியா, தெயவசசிலையாா, நசசினார்க்கினியா, பரிமேலழகா, அடியாாககுநல்லாா, சமயதிவாகரவாமன முனிவா, இலக்கண விளக்கவுரையாசிரியா, இலககணககொத்து உரையாசிரியா, திருவொறறியூர் ஞானபபிரகாசா, மயிலைநாதா, சஙகரநமச்சிவாயர்

---

* ஐநது பொருடடொடாநிலைகளாவன —சீவகசிநதாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குணடலகேசி, வளையாபதியெனபன

† புலம் - நூல, இதனை, “புலநதொகுத தோனே” என்னும தொல்காப்பியப் பாயிரததாலுணாக

முதலிய உரையாசிரியர்களால் எடுத்துக்காட்டப்பட்டுள்ள பிரமாண நூல்களுள் ஒன்று; தன்மைநவிற்சியணியும் பாவிகவணியும் இன்னோரன்ன பிறவணிகளுமே ஆங்காங்கு அமைந்திருத்தலால் தன்னுட் கூறப்பட்டுள்ள மலை கடல் தீவு வனம் நாடு நகர் ஆறு முதலியவற்றையும் பிறவற்றையும் நேரில் அறிந்துகொண்டாற் போலப் படிப்பவர்களுடைய மனத்திற்கு நன்றாகப் புலப்படச் செய்யும் நலம்பாடுற்றது; இக்காலத்தில் வேறொருவகையாலும் விளங்காதனவாகிய சில தெய்வங்களுடைய பெயர்களையும், அத்தெய்வங்களை வழிபடுமுறைமையையும், சில சாதியாரையும், அவர்களுடைய உடை முதலியவற்றையும், சில நகரங்கள் தீவுகள் மலைகள் வனங்கள் தோட்டங்கள் அறச்சாலைகள் மன்றங்கள் முதலியவற்றையும், அவைகள் இன்ன இன்னவண்ணமாக இருந்தனவென்பதையும், இன்ன இன்ன சமயங்கள் இன்ன இன்ன இடத்திற் பரவியிருந்தனவென்பதையும், அவற்றின் இலக்கணங்களையும், சில அரசர் சில முனிவர் முதலியோருடைய சரித்திரங்களையும், பிறவற்றையும் இந்நூலால் விளங்க அறிந்துகொள்ளலாம்; இதன்பாலுள்ள சொன்னுட்பம் பொருணுட்பங்கள் நூலவேயாகிய நுண்ணறிவிற் சேறுபவ்விடத்தும் எண்ணப்படுமென்று கூறுவர்; இதனை

"மந்தா கினியணி வேணிப் பிரான்மங்கை மன்னவர்நீ
கொந்தார் குழலணி மேகலை நானுட்பங் கொள்வதெங்ஙன்
சிந்தா மணியுந் திருக்கோ வையுமெழு திக்கொளினும்
நந்தா வரையை யெழுதலெவ் வாறு நவின்றருளே"

என்று கவிஞர் பெருமானாகிய துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச முனிவர் அருளிச்செய்த வெங்கைக்கோவைச் செய்யுளாலுணர்க. பின்னும், "சிந்தா மணியாஞ் சிலப்பதிகா ரம்படைத்தான், கந்தா மணிமே கலைபுனைந்தான்" (திருத்தணிகையுலா) என்று இந்நூற் பெயரையும், "மாதவி பெற்ற மணிமே கலைநம்மை வாழ்விப்பதே" (அம்பிகாபதிகோவை) என இக்காப்பியத் தலைவியாகிய மணிமேகலையின் பெயரையும் தத்தம் நூல்களில் தொனியில் அமைத்து வித்துவான்கள் பாடியிருப்பதும் இதன் பெருமையையும் மணிமேகலையின் பெயரையும் புலப்படுத்தும்.

சிலப்பதிகாரக் கதைத்தலைவனான கோவலன் மகளாகிய மணிமேகலையென்பவளுடைய சரித்திரமாதலின் இந்நூல் சிலப்பதிகாரத்தோடு கலந்தொடர்புடையது

இதில், சோழவளநாட்டுள்ள காவிரிப்பூம்பட்டினத்தில் பெருங்குடி வாணிகர் மரபில் உதித்த கோவலனுக்கு மாதவியென்னும் நாடகக்கணிகையிடம் தோன்றிய மணிமேகலை யென்பவள் தன்னுடைய தாய், கோவலன் மதுரையில் வெட்டுண்டிறந்தது கேட்டுப் பரத்தைமைத் தொழிலை வெறுத்துப் பௌத்தமுனிவராகிய அறவணவடிகளைச் சரணடைந்து வாய்மைநான்கும் சீலமைந்தும் உபதேசிக்கப்பெற்றுப் பௌத்த சங்கத்திருத்தலை யறிந்து அவளோடு பழகிச் சிறுபிராயத்திலேதானே பௌத்த தருமங்களை அறிதற்கேற்ற உணர்ச்சியுற்று ஒருநாள் தாயின் கட்டளைப்படிச் சுதமதியுடன் பூக்கொய்தற்கு மலர்வனஞ்சென்று தன்னை விரும்பிவந்த உதயகுமரனுக்கு அஞ்சி அங்குள்ள பளிக்கறையில் ஒளித்திருந்து அவன் போனபின்பு வெளியே வந்து தன் குலதெய்வதையாகிய மணிமேகலாதெய்வத்தால் மணிபல்லவத் தீவிற்குக் கொண்டுபோகப்பட்டு அத்தீவிலுள்ள புத்தபீடிகைக் காட்சியால் தன்னுடைய பழம்பிறப்பில் நிகழ்ந்த செய்திகளையறிந்து அப்பால் அத்தெய்வம் அறிவுறுத்திய மூன்று மந்திரங்களையுணர்ந்து முற்பிறப்பிற் கணவனாயிருந்த இராகுலனென்பவனே இப்பிறப்பில் உதயகுமரனாக வந்தானென்று அத்தெய்வம் கூறக் கேட்டு அப்பீடிகையின் காவற்றெய்வமாகிய தீவதிலகையினுதவியாற் கோமுகியென்னும் பொய்கையையடைந்து அதிலிருந்த அமுதசுரபியென்னும் அக்ஷயபாத்திரம் தன்கையில் வரப்பெற்றுப் பின்பு காவிரிப்பூம்பட்டினத்தைச் சார்ந்து அறவணவடிகளை யடைந்து ஆபுத்திரன் வரலாற்றையும் அவனுக்கு மதுரையிற் சிந்தாதேவி அமுதசுரபியைக் கொடுத்ததையும் பசித்த உயிர்களுக்கு உணவளித்தலே எல்லாவற்றினும் மேலான தருமமென்பதையும் அவர் கூறக்கேட்டு அவர் கூறியவாறே உணவளித்தற்பொருட்டு அமுதசுரபியைக் கையிலேந்திக்கொண்டு வீதியிற் சென்று சிறந்த பத்தினியாகிய ஆதிரையென்பவள் முதலிற் பிச்சையிடப்பெற்றுக் காயசண்டிகையென்னும் வித்தியாதரமங்கையின் தீராப்பசியை அப்பாத்திரத்திலிருந்தெடுத்துதவிய ஒருபிடியமுதாற்போக்கி அப்பாத்திரத்தில் மேன்மேலும் அமுது வளரப் பெற்று அந்நகரத்துள்ள உலகவறவியென்னும் அம்பலத்தை யடைந்து அங்கேவந்த எல்லாவுயிர்களின் பசியையும்போக்கி அவ்வறஞ்செய்தலையே நித்த நியமமாகப் பூண்டு தன்னை விரும்பி

வந்த உதயகுமரனை அறிந்து கொள்ளாவண்ணம் மேற்கூறிய காய சண்டிகையின் வடிவங்கொண்டு அந்நகரத்துள்ள சிறைச்சாலையை யடைந்து அங்கே பசித்திருப்பவர்களுக்கெல்லாம் உணவளித்து அதனை அறச்சாலையாக்கி, தன்னை மீட்டும் விடாது தொடர்ந்த உதயகுமரன் காயசண்டிகையின் கணவனால் வெட்டுண்டுவீழ்ந்தது கண்டு மனங்கலங்கிப் பின்பு கந்திற்பாவைத்தெய்வத்தின் மொழி களால் தேறுதலுற்று உதயகுமரனுடைய தந்தையாகிய மாவண கிள்ளியாற் சிறையில் வைக்கப்பட்டு, இராசமாதேவியின் முயற்சி யால் அச்சிறையினின்று நீங்கி நாகபுரத்தை யடைந்து அதன் தலைவனை புண்ணியராசனோடு மணிபல்லவஞ்சார்ந்து புத்தபீடி கையைக்காட்டி அதனால் அவனது பழம்பிறப்பை அவனுக்கறி வித்து, காவிரிப்பூம்பட்டினம் கடல் கொள்ளப்பட்ட செய்தியைத் தீவதிலகையாலறிந்துகொண்டு அப்பாற்சென்று வஞ்சிநகர்ப்புறத் தேயுள்ள பத்தினிக்கடவுளாகிய கண்ணகியின் கோயிலையடைந்து தரிசித்து, தன்னுடைய எதிர்காலச் செய்திகளைக் கண்ணகிதெய்வம் கூற அறிந்துசென்று ஆங்கிருந்த சமயவாதிகள் பலரையுஞ் சார்ந்து அவரவர்களுடைய கொள்கைகளைத் தனித்தனியே வினவி யுணர்ந்து, அந்நகரில் தவம்புரிந்து கொண்டிருந்த மாசாத்துவா னைக்கண்டு அவன் மொழிந்த செய்திகள் பலவற்றையுங் கேட்டு அவன் கூறியவாறு காஞ்சிநகரம்போய், அந்நகரிற் பசியால்வருந்தி வாடிய எல்லாவுயிர்களுக்கும் உணவளித்து, அங்கேவந்த அறவண வடிகளைத் தரிசித்து அவர் உபதேசித்த அறமொழிகளைக்கேட்டு, பின் முத்திபெறுதற்பொருட்டு அந்நகரிலேயே தவஞ்செய்து கொண்டிருந்தாளென்னுங் கதை விரித்துக் கூறப்படும்.

இந்நூல், பௌத்த சமயச்சார்பினளாகிய மணிமேகலையின் சரித்திரமாதலின் இதில் அச்சமயக் கொள்கைகளைப் பரக்கக் காணலாம்.

பற்பல தருமங்கள் இதிற் சொல்லப்பட்டுள்ளன, அவற்றுள் மிகுதியாகக் காணப்படுவது ஒருவன் மனமொழிமெய்கள் தூய னாகி எல்லாவுயிர்களிடத்தும் எப்பொழுதும் அருளுடையனாதல் வேண்டுமென்பதே

மணிமேகலை யென்பவளுடைய சரித்திரத்தை விரித்துக்கூறு தலின், இஃது இப்பெயர் பெற்றதென்பர். நீலகேசி, புத்தவாதச் சருக்கத்தில், "குயலாகுயலம" என்னுஞ் செய்யுளுரையில்,

* "தீவினையென்பதி .. .................... ... பிரமரு மாகிஎன்பது மணிமேகலைதுறவாதலின், இதனால ஸமஸகாரமறிநதுகொள்க" எனச சமயதிவாகரவாமன முனிவரும், சிவஞானசித்தியாா பரபககததிற சௌததிராநதிகன் மததது்ளள "ஓஙகிய வுருவம" எனனுந திருவிருததததின் உரையில, * "தீவினையெனபதி. . ... ... ....பிரமரு மாகி என்பது மணிமேகலை துறவாதலின், இதனால ஸமஸகார மறிநதுகொள்க" எனத திருவோறறியூா ஞானபபிரகாசரும் எழுதியிருததலால, இநநூல மணிமேகலை துறவெனறும அககாலததில வழஙகபபடடு வநததெனறு தெரிகினறது, "மணிமே கலைதுற, வாறைம பாடடினுளறிய வைததனன" என்று பதிகததிறுதியிற கூறபபட்டிருததலும இதறகு இபபெயருணடென்பதை வலியுறுததும

இநநூல, அமமை முதலாகிய வனபபெடடினுள இயைபின் பாறபடும, தொல்காபபியச செயயுளியலின் கணணே, 'அமமை முதலியவனபபெடடும தொடாநிலைச செயயுடகிலககணம' எனறு கூறுகினறுழி, † "ஞகாரை முதலா ளகார விறறுப, புளளி யிறுதி யியைபெனப படுமே" எனனுஞ சூததிரவுரையில, 'ஞணநமன யரலவழளவெனனும பதினொரு புளளியுள ஒனறனை ஈறுகவமைதது செயயுளைப பொருடடொடராகவும சொறறொடராகவுஞ செயவது இயைபெனபபடும, ணகாரவீறறுனிறறுப பொருளுமியைநது சொலலுமியைநது வநதன, சீததலைச சாததனாாற செயயபபட்ட மணிமேகலையும், கோங்குவேளிராற செயயபபடட உதயணன்கதையும் போலவன' எனறு பேராசிரியரும் ஆசிரியா நசசினாாககினியரும் எழுதியிருததல காணக, இநநூலிற சொலலியைபும பொருளியைபும அமைநதிருததல அறிதறகுரியது.

இதிற கூறபபட்டுளள சரிததிரம நிகழநத காலமும இநநூலாசிரியா காலமும ஒனறென்றும, இஃது அவரால தமிழிலேதான் முதலிற பாடபபட்டதென்றும, சிலப்பதிகாரத்தாலும அதன பதிகத தொடக்கததில அடியார்க்கு நல்லாரெழுதிய உரைநடையாலும, இநநூற் பதிகததாலும விளஙகுகின்றமையின், இது வேறு மொழியிலிருநது வநததெனறு சொலலுவதற்கிடமிலலை

* மணிமேகலை, உச கஉந - கநக, ௩0 கசச - அ0.

† தொல்காப்பியம், செயயுளியல, சூ. உசo.

கதையைத் தொகுத்துக் கூறுவதும் பதிகமென்று வழங்கப்படுவதுமாகிய கதைபொதிபாட்டை இந்நூல் முதலிற்பெற்று விழாவறை காதை முதற் பவத்திறமறுகெனப் பாவை நோற்றகாதையிறுதியாகவுள்ள முப்பது பகுதிகளாகப் பகுக்கப்பட்டுள்ளது, காதை - பாட்டு; நீலகேசி, குண்டலகேசிவாதச்சருக்கம், உஎ - ஆம் செய்யுளுரையில், "முன்றான் பெருமைக்கண்ணின்றான் என்னுங் காதையை அனுவதித்தவாறு" எனவும், உஅ-ஆம் செய்யுளுரையில், "பிடகம் என்னுங் காதை சொன்னவாறு" எனவும், மொக்கலவாதச்சருக்கம், உ௩ - ஆம் செய்யுளுரையில், "தன் புறத்த என்னுங்காதை சொல்லப்பட்டது" எனவும், ச0 - ஆம் செய்யுளுரையில், "எழுமணைத்தி என்னுங்காதை" எனவும், சக - ஆம் செய்யுளுரையில், "காளின்ற சுமந்தியப்பான் என்னுங்காதை" எனவும், சஉ - ஆம் செய்யுளுரையில், "மக்கட் பண்பழியார் என்னுங்காதை" எனவும், அந்நூலுரையாசிரியர் எழுதியிருத்தலாலும், 'காதைக்கரப்பு' என்னும் ஒருவகைச் சித்திரகவிப்பெயராலும் காதையென்பதற்குப் பாட்டென்று பொருள் கொள்ளுதல் நன்னியப்படும், "ஆறைம் பாட்டினு ளறியவைத்தனன்" எனப் பதிகத்திறுதியிற் கூறப்பட்டிருத்தலும், மிதிலைப்பட்டுத் திருச்சிற்றம்பலக்கவிராயரவர்கள் வீட்டிற் கிடைத்த பிரதியில் இந்நூற் பகுதிகளின் பெயர்கள் யாவும் பாட்டென்றே இருப்பதும் இதனை வற்புறுத்தும், காதையென்பதை இசையோடு பாடப்படுவதாகிய செய்யுளென்று பொருள்படுகிற 'காதா' என்னும் வடசொற்சிதைவென்று கொண்டால் யாதோரிழுக்குமின்றென்று வடமொழியாளர் கூறுவர், இது நிற்க;

பல வருடங்களுக்குமுன் பழைய தமிழ்ப் புத்தகங்களைத் தேடும்வண்ணம் இத்தமிழ்நாட்டினுள்ளே செல்லுதற்குரிய பல ஊர்களுக்குச் சென்று அங்கங்குள்ள பரம்பரைத் தமிழ்ப்பண்டிதர்களுடைய வீடுகளில் இருந்த கையெழுத்துப் பிரதிகளைப் பரிசோதித்துப் பார்த்தகாலங்களிலெல்லாம் எனக்கு மணிமேகலை மூலப்பிரதிகள் மட்டும் கிடைத்தனவேயன்றி உரைப்பிரதியாண்டும் கிடைத்திலது. சென்னை, தஞ்சை முதலிய நகரங்களிலுள்ள பழைய கையெழுத்துப் புத்தகசாலைகளும் பார்க்கப்பட்டன, அங்கும் கிடைக்கவில்லை. வெளிநாட்டிலுள்ள நண்பர்கள் பலரைப் பத்திரிகைவாயிலாக இதைப்பற்றி வினவினேன், அங்ஙனம்

வினவப் பட்டவர்கள், யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ சிற் கைலாசபிள்ளையவர்கள் தமது கையாலெழுதிய மூலப்பிரதி யொன்றை அன்புடன் அனுப்பினார்கள், பின்பு பாரிஸ் நகரத் துள்ள ப்ரொபஸர் ஜூலியன் வின்ஸன் என்பவர், 'இந்நகரத்துக் கையெழுத்துப் புத்தகசாலையில் மணிமேகலை மூலப்பிரதி யொன்றே யுள்ளது' என்று தெரிவித்து மாதிரிக்காக அதிலிருந்து பதிகத் தை மட்டும் எழுதியனுப்பினார், மற்றவர்கள், 'யாதொன்றுங் கிடைக் கவில்லை' என்று விடையளித்துவிட்டார்கள். கிடைத்த பிரதிகளை வைத்துக்கொண்டு ஒப்புநோக்கி ஆராய்ந்துவந்தபொழுது பிரதி களில் எழுதுவோர்களால் இயல்பாகவே செய்வித்திருந்த வேறுபாடு களாலும், இது பௌத்தசமயக் காப்பியமாதலால் அச்சமயக் கொள்கைகளைக் கூறும் பாகங்களையெல்லாம் எளிதிற்றெரிந்து கொள்ளல் கூடாமையாலும், அவற்றை ஒழுங்காகப் புலப்படுத் தும் பழைய * தமிழ்ப் பௌத்த நூல்கள் பண்டைக் காலத்தில் இருந்தும் பாதுகாப்போரின்மையால் பிற்காலத்தில் இறந்தொழிந் தமையாலும், அக்கொள்கைகளை விளங்கச் சொல்லுவோர் அகப் படாமையாலும், பிழைகளைப் பிழைகளென்று நிச்சயித்துக் களைந்து திருத்தமான பாடங்களைத் தெரிந்துகொள்ளுதற்கு எடுத் துக்கொண்ட முயற்சியும் கழிந்தகாலமும் அடைந்த வருத்தமும் அளவுபடுவனவல்ல.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் முதலிய சைவசமயாசாரியார் கள் அருளிச்செய்த தேவாரங்களிலுள்ள பௌத்தசமய மறுப்புக் களும், பெரியபுராண முதலியவற்றுட் கூறப்பட்டுள்ள அச்சமயக் கொள்கைகளும், மறுப்பும், சிவஞானசித்தியார் பரபக்கத்துள்ள சௌத்திராந்திகனமத முதலியனவும், அவற்றிற்குத் திருவொற்றி யூர் ஞானப்பிரகாசரெழுதியவுரையும், அவ்வுரையிலுள்ள சில உதாரணச் செய்யுட்களும், மறுப்புக்களும், நீலகேசியும் அதனுரை யும், அவ்வுரையில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்டுள்ள

* பண்டைக்காலத்துப் பௌத்தநூல்களென்று தெரிந்தவை குண் டலகேசி, சித்தாந்தத்தொகை, திருப்பதிகம், விம்பசாரகதை யென் பன, அவற்றிலிருந்து சில பாடல்களே நீலகேசியுரை முதலியவற்றில் நூற்பெயர்களோடெழுதப்பட்டுள்ளன, தக்கயாகப்பரணியின் உரையால் கவிராசசாரரென்னும் பெயரினராகிய புலவரொருவர் பௌத்தநூ லொன்று செய்துள்ளாரென்று தெரிந்தது.

சில கவிகளும், வீரசோழியம் யாப்புப்படலவுரையிலுள்ள சில உதாரணப் பாடல்களும், இன்னுஞ்சிலவும் பௌத்தசமயமரபுகளிற் சிலவற்றையும் அச்சமயத்தோர் பேசிவந்த சில தமிழ்ப்பரிபாஷைகளையும் பிறவற்றையும் ஒருவாறு விளங்கச்செய்தன, செய்தும் முன்பிருந்த ஐயங்கள் முற்றும் தீராமையாற் பின்னும் அறிந்தோர்பாற் சென்றும் தூரதேசத்தார்க்குக் கடிதமெழுதியும் விசாரித்தலையே மேற்கொண்டிருந்தேன்.

இப்படி இருக்கையில், ஹிந்துதேசத்து வித்தைகளிலும் ஆங்கிலேய வித்தைகளிலும் மிகப்பயிற்சியடைந்து விளங்கியவரும் சென்னை இராஜதானிக் கலாசாலையில் ஸம்ஸ்கிருத போதகாசிரியராக இருந்தவருமான ராவ்பகதூர் மஹா ஸ்ரீ அரங்காசாரியரவர்கள் எம். ஏ., பௌத்தசமய நூல்களிலும் பாண்டித்தியமுள்ளவர்களென்பதை அறிந்துகொண்டு உரியகாலங்களில் அவர்களிடத்துச் சென்று வினவிவந்தேன், வருகையில், ஒவ்வோரமயத்தும் தடையின்றி உடனுடன் அவர்கள் கூறிய விடைகளால் அதற்குமுன்பு எனக்கிருந்த ஐயங்களிற் பெரும்பாலன நீங்கின, நீங்கவே இந்நூலைப் பரிசோதித்தலில் என் மனம் ஊக்கம்பெற்றது. அவர்களுடைய பேருதவி இல்லையாயின், மணிமேகலையில் வந்துள்ள துடிதலோகம், பாரமிதை, அரூபப்பிரமர், உரூபப்பிரமர் முதலிய சொற்களுக்குக்கூட உள்ளவாறே பொருள் கொள்ளுதல் எனக்கு மிக அரிதாகும், தமக்குரிய அரியவேலைகள் அநேகமிருந்தும் இப்பழைய தமிழ்நூல் வெளியேவந்து உலாவுதலையே பயனாகக்கருதி, யான் செல்லுங்காலந்தோறும் சிறிதும் சலிப்பின்றி அவர்கள் செய்துவந்த பேருதவி ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று, அவர்களுடைய பேருதவியாலேயே பௌத்தமதத்துள் பூம்மணியென்று வழங்கும் புத்தசரித்திரம் பௌத்ததர்மம் பௌத்த சங்கம் என்பவை எழுதப்பெற்றன. அம்மகோபகாரி விஷயத்தில் இத்தமிழ்நாட்டினேமாகிய நாமெல்லாம் நன்றி பாராட்டுதற்கு உரியவர்களாக இருக்கின்றோம்.

எவ்விடத்தும் இந்நூலுக்கு உரை அகப்படாமையாலும், உரை முன்பு உண்டென்று ஒருவாற்றானும் விளங்காமையாலும் இனி மூலத்தைமட்டுமாவது வெளிப்படுத்தவேண்டுமென்று நிச்சயித்துப் பதிப்பிக்கத் தொடங்கியபொழுது, தமிழ்ப்பாஷாபிமானிகளாகிய அன்பர்களிற் சிலர், 'உரையெழுதியே இதனை

வெளிபபடுததவேணடும' என்று வறபுறுததிக கூறினமையின, அவாகள சொலலை மறுததறகு அஞசி, இது புலவாதிலகாகள செய தறகுரிய அரிய காரியமெனறு கருதாமல, * "ஆஙகவன் புகழநத நாடடை யனபெனு நறவை மாநதி, மூஙகையான பேச லுறறு ளெனனயான மொழிய லுறறேன" எனற பெரியோா கூறியதறகு இலககியமாக, தகக நூலாராயசசியும எணணியவறறைச சுவை பயககுமபடி நலலநடையில விளஙகவெழுதும வலலமையுமிலலாத யான, † "மணிமேகலை நூனுடடாஙகொளளவதேஙஙன்" எனறு ஆனறோரால பாராடடபபடடுளள இநநூறகு அருமபதவுரை யெனற ஏதோவொனறை எழுததத தொடஙகினேன.

மொழிகளுடை பெருமபாலனவறறிறகுப பொருள விளஙகிக கிடககினறமையின அரியவறறிறகுமடடுமே பொருள செயதும, ஆஙகாஙகுளள வாககியஙகளை ஒததவைகளாக இநத நூலிலும வேறு நூலிலும காணபபடட வாககியஙகளை அவவவவிடததில தநதுகாட்டி அவறறினிடஙகளை உடனுடன விளஙகசசெயதும, பொருளவிளஙகாத இடஙகளில (?) இககேளவிககுறியை அமைத தும, கையெழுததுப பிரதிகளிறகணட பாடபேதஙகளை எடுததுக காட்டி அவறறுள இனறியமையாத சிலவறறிறகுமடடுமே பொரு ளைப புலபபடுததியும, எலலோருககும எளிதிற பொருள விளஙகு தறபொருடடு வடசொறகளைப பெருமபாலும விரிததும, சில வறறிறகுச சஙகமருவிய நூலகளிலிருநது மேறகோளகள இப பொழுது அகபபடாமையால அவறறை விளககுதறகுப பிறகா லதது நூலகளிலிருநது பிரயோகஙகளை எடுததுககாடடியும ஒரு வாறு அதனை எழுதிமுடிததேன.

‡ "சவியுறத தெளிநது தண்ணென ஒழுககமும பயின்று" எனறு கம்பநாடரும், $ "செலலாறு தோறும பொருளாழநது தெளிநது" எனப பரஞசோதி முனிவரும் அருளிசசெயத திரு வாககுககளுககு இலககாகவிளஙகுங கவிகளினுடைய வரிசையிலே

* கம்பராமாயணம, நாடடுபபடலம, ௧

† திருவேஙகைககோவை.

‡ கம்பராமாயணம், சூரபபணகைபபடலம, ௧.

$ திருவிளையாடற் புராணம். அனனககுழியும வையையுமழைத்த படலம, 22

நிற்குந் தகுதியுள்ள பாட்டுக்களையுடைய இந்நூலுக்கு யானோ அரும்பதவுரை எழுதுபவன்? இதுசெய்தற்குத் துணிந்த எனது தறுகண்மையைப் பொறுத்தருளும்படி இந்தமிழுலகத்தை மிகவும் வேண்டுகின்றேன்.

பழைய செந்தமிழ்நூற் பரிபாலகரும் இவ்வாராய்ச்சியால் எனக்குமனச் சோர்வுண்டாகாதவண்ணம் அடிக்கடி ஊக்கமளித்து வந்தவரும் கொழும்புநகரத்துப் பிரசித்தமணியுமாகிய கௌரவம் பொருந்திய ஸ்ரீ பொ. குமாரசாமி முதலியாரவர்கள், இந்நூலிற் சிற்சில விடங்களில் முன்னம் நிகழ்ந்த ஐயங்களை நீக்கிக்கொள்ளுந் தற்பொருட்டு யான் கேட்ட வினாக்களுக்கு இலங்கையிலுள்ள பௌத்த வித்தியோதய பாடசாலைத் தலைவராகிய ஸ்ரீ ஸுமங்களரவர்களைக்கொண்டு விடைகளெழுதுவித்து அனுப்பிய பேருதவி செய்து வந்தார்கள்.

எனக்கு அக்காலத்தில் வடமொழிப் பிரயோகங்களில் உண்டாகிய ஐயங்களை உடனுடன் போக்கியருளிய ஸ்ரீபெருங்குளம் வாழ்ந்த தான மஹாமஹோபாத்தியாய அரங்காசாரியாரவர்கள், திருமலை நச்சம்பாடி சதாவதானம் ஸ்ரீ ஸ்ரீனிவாஸாசாரியரவர்கள் என்னும் இருவர்களுடைய நினைவும் என்றும் என் நெஞ்சினின்றும் நீங்கவில்லை.

மணிமேகலையின் முதற்பதிப்பு 1898-ஆம் வருஷத்திலும் இரண்டாம்பதிப்பு 1921-ஆம் வருஷத்திலும் வெளியிடப்பெற்றன. முதற் பதிப்பிற்கு உதவியாகக் கிடைத்த கையெழுத்துப் பிரதிகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவாவடுதுறையாதீனத்துப் | பிரதி | க. |
| 2. | எட்டயபுரம் பெரிய அரண்மனைப் | ,, | க. |
| 3. | மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டுப் | ,, | க |
| 4 | திருநெல்வேலி ஸ்ரீ திருவம்பலத்தின்னமுதம்பிள்ளையவர்கள் | ,, | க. |
| 5 | சேலம் ஸ்ரீ இராமசாமிமுதலியாரவர்கள் | ,, | க. |
| 6. | யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ சிற. கைலாசபிள்ளையவர்கள் | ,, | க. |

7. ஆறுமுகமங்கலம் ஸ்ரீ சுந்தரமூர்த்திப்
 பிள்ளையவர்கள் பிரதி க
8. திருமயிலை ஸ்ரீ சண்முகம்பிள்ளையவர்கள் ,, க
9 சென்னை ஸ்ரீ தி. முத்துக்குமாரசாமி
 முதலியாரவர்கள் - ,, க.
10. சென்னை இராஜாங்கத்துக் கையெழுத்துப்
 புத்தகசாலைப் ,, க

இவற்றுள், மிகப் பழமையானதும் பரிசோதனைக்கு இன்றியமையாததாக இருந்ததும் மற்றைப் பிரதிகளிற் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் போயிருந்த பாகங்களையெல்லாம் ஒழுங்குபடச் செய்ததும் சோர்வுற்று நைந்த அழுக்குகெட்டுமாசுபோர்த்திருந்து கிடந்த செந்தமிழ்ச் செல்வியின் மணிமேகலையை அணிந்துகொள்ளும் வண்ணம் பொலிவுசெய்துகொடுத்ததும் மிதிலைப்பட்டிப்பிரதியே.

இரண்டாம் பதிப்புக்கு உதவியாக மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பாண்டியன்புத்தகசாலைப் பிரதியொன்றும், சென்னை ஸ்ரீ பார்சுவநாதநயினாரவர்கள் பிரதியொன்றும் கிடைத்தன. முதற்பதிப்பில் தனித்தனியே பதிப்பிக்கப் பெற்றிருந்த அபிதான விளக்கம், அரும்பதவகராதி, அருந்தொடரகராதி, மூலவிஷயசூசிகை, அரும்பதவுரையில் அடங்கியவை, தமிழ் நூற்பெயர்கள் முதலியன என்னும் பகுதிகள் ஒருங்கே தொகுக்கப்பெற்று ஒரே அகராதியாக 'அரும்பத முதலியவற்றின் அகராதி' என்னும் பெயருடன் பதிப்பிக்கப் பெற்றன, மூலம் முதலியவற்றிற் காணப்பட்டு முன்பு பதிப்பிக்கப் படாமலிருந்த அரும்பதங்களும், அருந்தொடர்களும், சிலவற்றின் பொருளும், உவமைகளும், பழைய செய்திகளும், வழக்கங்களும், பிறவும் இவ்வகராதியிற் சேர்க்கப்பெற்றன.

முதலிரண்டு பதிப்புக்களைப்பற்றிய மற்ற விஷயங்களை அப்பதிப்புப் புத்தகங்களிலுள்ள முகவுரைகளால் அறிந்து கொள்ளலாம்.

இப்பொழுது இது மூன்றாவது முறையாக வெளியிடப்படுகிறது. இப்பதிப்பில் விசேஷமான மாற்றம் ஒன்றும் இல்லை. ஆனாலும் இடையிடையே விளங்காமலிருந்த சில பகுதிகளை விளக்கியும் சில மேற்கோள்களைக் காட்டியும் இருத்தலைக் காணலாம். புத்த சரித்திரம், பௌத்த தருமம், பௌத்த சங்கமென்னும் மூன்றும் மணிமேகலையைப் படிப்பவர்களுக்குப்

பயனபடுவதறகாகவே முதலில எழுதபபடடனவாதலின அவையும இபபதிபபிற சேரககப பெறறுளளன.

இபபதிபபிறகு உடனிருநது ஒபபுநோககுதல முதலிய உதவிகளைச செயது வநதவாகள சென்னை, கிறிஸடியன காலேஜ ஹைஸகூல தமிழபபணடிதா சிரஞசீவி, வித்வான வி மு சுப்பிரமணிய ஐயரும், மோகனூரத தமிழப பணடிதா சிரஞசீவி, கி. வா ஜகந்நாத ஐயரும் ஆவாாகள

கட்டளைக்கலித்துறை.

ஒனறென றிருதெயவ முணடென றிருவுயா செலவமெலலாம
அனறென றிருபசிதத தோாமுகம பாாநல லறமுநட டும
நனறென றிருநடு நீஙகாம லெநமக கிட்டபடி
எனறென றிருமன மேயுனைக கேயுப தேசமிதே"

'தியாகராஜ விலாசம'
திருவேடடீசுவரன பேடடை
28—8—31

இஙஙனம,
வே. சாமிநாதையா.

குறிப்பு

மேலே உளள எநதையாரவாகளுடைய முகவுரையால எலலாம விளஙகும அவாகளுடைய கைபபுததகத்திற கணட சில திருததஙகளை இதில அமைததிருககிறேன (1) மமணிகளொனறு சொலலபபடும புததசரிததிரம, பெளததருமம, பெளததசஙகம எனபவை தனிப புததகமாக வெளிவநதிருபபதால இபபோது இபபதிபபிற சேரககப பெறவிலலை

S கலியாணசுநதரம்
15—12—'48

## இந்நூலாசிரியராகிய மதுரைக் கூலவாணிகன்

# சீத்தலைச் சாத்தனார் வரலாறு.

---

இவர் கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர். இவருடைய இயற்பெயர் சாத்தனாரென்பது; வணிகமரபினர்; கூல வியாபாரஞ் செய்துகொண்டிருந்தமையின் இப்பெயர் பெற்றார். கடைச் சங்கத்து நல்லிசைப் புலவர்களுள் இவரைப்போலவே, பொன் வாணிகனார், மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார், மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார் என்ற வணிகமரபினர் சிலர் இருந்தனரென்று தெரிகின்றது. இவர், பத்தினிக் கடவுளாகிய கண்ணகியின் வரலாற்றையும் அவள் மேம்பாட்டையும் சேரன் செங்குட்டுவனுக்கு அறிவுறுத்தி அவனைக்கொண்டு அவளுக்குக் கோயில் கட்டுவித்து நித்தியபூசை முதலியன நடக்கும்படி செய்தவர். அவ்வரசனுக்குக் கண்ணகியின் வரலாற்றைக் கூறிய பொழுது அவனோடு கேட்டுக்கொண்டிருந்தவரும் அவன் சகோதரரும் துறவு பூண்டவருமாகிய இளங்கோவடிகள் அவளுடைய சரித்திரத்தைப் பொருட்டொடர்நிலைச் செய்யுளாகச் செய்தற்கு வேட்கையுடையுமவண்ணஞ் செய்தவர் இவரே; அச்சிலப்பதிகாரத்தைக் கேட்டாரும் இவரே; இவற்றைச் சிலப்பதிகாரத்தின் பதிகத்தாலும் அந்நூலிலுள்ள ௨௫-ஆவது காட்சிக் காதையாலும் உணர்க. எட்டுத்தொகையாகிய நற்றிணை முதலிய நூல்களில் இவர் இயற்றியனவாகப் பத்துச் செய்யுட்களும் (நற். 3, குறுந். 1, அகநா. 5, புறநா. 1), திருவள்ளுவமாலையில் ஒரு செய்யுளும் இப்பொழுது காணப்படுகின்றன. இவற்றுட் புறநானூற்றுச் செய்யுள் பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனைப் பாடியது.

இவர் பெயர் கூலவாணிகன் சாத்தனாரென்றும், மதுரைச் சீத்தலைச் சாத்தனாரென்றும், சாத்தனாரென்றும் வழங்கும். "தண்டமிழ்ச் சாத்தன்" (பதிகம், 10) என்றும், "தண்டமிழாசான் சாத்தன்" (காட்சிக் 66) என்றும், "நன்னூற் புலவன்" (காட்சிக் 106) என்றும் சிலப்பதிகாரத்து இவர் சிறப்பிக்கப்பட்டிருக்கின்றனர். சங்கத்தில் அரங்கேற்றுவித்தற்பொருட்டு வரும் நூல்களிற் பிழைகள் காணப்படுந்தோறும் ஆக்கியோர்களைக் குற

றவ கூறுதற்குத் துணியாராய், "இந்தப் பிழைகளைக் கேட்கும்படி நேரிட்டதே" என்று மனம் வருந்தித் தமது தலையைக் குத்திக் கொள்வாரென்றும், அதனால் தலை புண்பட்டுச் சீயோடிருந்தமையின் சீத்தலைச் சாத்தனாரென்பது இவருக்குப் பெயராயிற்றென்றும் கூறுவர், "வள்ளுவர்முப் பாலால், தலைக்குத்துத் தீர்வுசாத்தற்கு" என்று மருத்துவன் தாமோதரனார் திருக்குறளைச் சிறப்பித்துக் கூறிய செய்யுளில் இதனைக் குறிப்பித்திருத்தலும், "இயற்பெயர் சினைப்பெயர்" (தொல். பெயர். சூ. 20) என்பதன் உரையில் ஆசிரியர் இளம்பூரணர் முதலியோர் சினைமுதற்பெயருக்கு உதாரணமாக, 'சீத்தலைச் சாத்தன்' என்னும் இவர் பெயரைக் காட்டியிருத்தலும் இக்கொள்கைக்கு ஆதாரமாக அமைந்து காணக. சீத்தலையென்பதும் ஊரிலுள்ள ஐயனார் பெயராகிய சீத்தலைச் சாத்தனென்பது இவரது இயற்பெயரென்று ஒரு சாரார் கூறுவர்.

அகநானூற்றிலும், புறநானூற்றிலும், திருவள்ளுவமாலையிலும் இவருடைய செய்யுளும் மருத்துவன் தாமோதரனார் செய்யுளும் அடுத்தடுத்துக் காணப்படுதலாலும் தாமோதரனார் இவரைப்பற்றிக் கூறியிருத்தலாலும் இவ்விருவரும் நெருங்கிய நட்பினரென்று கருத இடமுண்டு. திருச்சச்சுராச் சாஸனமொன்றில், முத்தமிழாசிரியனென்னும் சிறப்புப்பெயர்பெற்ற சாத்தனார் வழிவந்த பெருநம்பியென்னும் ஒருவர் கூறப்படுகிறார். அதிற் கூறப்படும் சாத்தனார் இவரோ வேறு யாரோ தெரியவில்லை. இவர் சேரன் செங்குட்டுவன்பாலும் இளங்கோவடிகள்பாலும் நட்புரிமைபூண்டவர். இந்நூலில் வஞ்சிமாநகர் புக்க காதையின் இறுதியில் செங்குட்டுவனுடைய செங்கோன்முறைமையையும் வெற்றிச் சிறப்பையும் விளக்கியிருத்தலாலும் இந்நூலை இளங்கோவடிகள் கேட்டதாலும் தம் நூலில் இவரைச் சிறப்பித்திருத்தலாலும் இஃது உணரப்படும்.

இவர் திருக்குறளில் மிக ஈடுபட்டவரென்பது அந்நூலை இவர் சிறப்பித்துப் பாடிய திருவள்ளுவமாலைச் செய்யுளாலும், மருத்துவன் தாமோதரனார் அம்முப்பாலால் இவர் தலைக்குத்துத் தீர்ந்ததெனச் சொல்வதாலும், இந்நூலில் இவர், "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் பெருமழையென்றவப், பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்" (22: 59-

* South Indian Inscriptions, 301 of 1909

61) என்ற திருக்குறட் செய்யுளொன்றை மேற்கோள் காட்டித் திருவள்ளுவரைப் பாராட்டியிருத்தலாலும்", "கேள்வியாற் றோட்கப் படாத செவி" என்னும் குறட்பகுதியை நினைந்து, "கேள்வி யாளரிற், றோட்டுச் செவியைநீ யாகுவை" (௩௰ 134-5) என்பதனாலும் பிறவற்றாலும் அறியக் கிடக்கின்றது.

இவர் கண்ணகியைப்பற்றிய வரலாற்றை இளங்கோவடிகட்குக் கூறுகையில், 'வினைவிளை காலமாதலின் பாண்டியன் தேரானாகிக் கோவலனைக் கொலலுமாறு கட்டளையிட்டான்" என்று சொல்ல இளங்கோவடிகள், "வினைவிளை காலமென்றீர், யாது அவர் வினைவிளைவு?" என்று கேட்க இவர், தாம் மதுரையில் வெள்ளியம்பலத்திற் பள்ளிகொண்டிருக்கையில் மதுராபதியென்னும் தெய்வம் கண்ணகிக்கு முற்பிறப்பின் வரலாற்றைக் கூறிக் கோவலன் கொலையுண்டது பண்டைவினையின் பயனென்றறிவுறுத்தியதைக் கேட்டவாறு கூறினாரென்பதும், அதனைக் கேட்ட இளங்கோவடிகளால் மூன்று உண்மைகளைப் புலப்படுத்திச் சிலப்பதிகாரம் இயற்றப்பெற்றதென்பதும் அந்நூலால் தெரிகின்றன. இவ்வரலாற்றினால் சாத்தனார் எந்த நிகழ்ச்சியும் பண்டை வினையின் பயனாக விளைவதென்னும் கொள்கையுடையராதல் காணப்படும். அக்கொள்கையை இந்நூற்கண் பலவகையிற் புலப்படுத்தி யிருக்கின்றனர். உதயகுமரன் காஞ்சனனென்னும் விஞ்சையனால் வெட்டுண்ட செய்தியைச் சக்கரவாளக்கோட்டத்துறை தெய்வம் அரசனுக்குக் கூறும்பொழுது, "ஆங்கவன் தீவினை உருத்தெழுதலின் அஃது அவள்தனை அம்பலத்தேற்றி இவனை ஆங்குய்த்து விஞ்சையனைக் கூஉய் அவன் மனத்தையுஞ் சலக்கி இவன்றனை எறிந்தது" (௨௨ 193-203) என்று அச்செய்கையை வினையின்மேலேற்றிச் சொல்லும் பகுதியாலும், "மடையனை, உடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை, நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி, விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே" (௨௩ 82-5), "காண்டகு நல்வினை நும்மையீங் கழைத்தது" (௨௪ 98) என்பன போன்ற பகுதிகளாலும் இதனை அறியலாகும்.

காவிரிப்பூம்பட்டினம், வஞ்சிமாநகர், கச்சியம்பதியென்னும் பெரிய நகரங்களைப்பற்றி இவர் விரித்துக் கூறியுள்ள பகுதிகள் அக்காலத்து நாகரிகச் சிறப்பையும், கைத்தொழில் மேம்பாட்டையும், நகரவளத்தையும் விளக்கி அந்நகரங்களிலெல்லாம் இவர்

நன்கு பழகிக் கண்டவற்றைக் கண்டவாறே அறிவிக்கும் பேராற்றலுடையாரென்பதைப் புலப்படுத்துகின்றன. சிறு பொழுதுகளின் வருணனைகள் இடையிடையே சுவைபயக்குமவண்ணம் இவ்வாறு கூறப்பெற்றிருக்கின்றன. உவவனத்தைப்பற்றிச் சொல்லுகையில் அது, பல மலர்களால் நிறைந்து வித்தகரியற்றிய விளங்கிய கைவினைச் சித்திரச் செய்கைப் படாம் போர்த்ததுவே யொப்பத் தோன்றியதாக உரைக்கின்றார். இதே கருத்து இவருடைய அகநானூற்றுச் செய்யுளொன்றில் சிறிது வேறுபாட்டுடன் காணப்படுகின்றது. அது வருமாறு:

"வானம் வாய்ப்பக் கவினிக் கானம்
கமஞ்சூல் மாமழை கார்பயந் திறுத்தென
மணிமருள் பூவை யணிமல ரிடையிடைச்
செம்புற மூதாய் பரத்தலி னன்பல
முல்லை வீகழ றூஅய வல்லோன்
செய்கை யன்ன செந்நிலப் புறவின" (134)

இவர் சித்திரசம்பந்தமாகக் கூறும் வேறுசில செய்திகளும் உண்டு. மனைகடோறும் தெய்வங்கள் முதல் பல்வகை உயிர்கள் வரையில் உள்ளவற்றைப்போன்று சுண்ணச் சாந்தில் சிற்பிகள் இயற்றிய கண்கவரோவியங்கள் இருந்தமையும் (ந 127 - 31), ஓவிய நூலில் பரத்தையரும் பயிற்சியுடையராக இருந்தமையும் (உ 31) இவ்வாறு சொல்லப்படுகின்றன. அணிகலன் முதலியவற்றை அணியாமல் மணிமேகலை நின்றதை, "புனையா வோவியம் போல நிற்றலும்" (கசு 131) என்றும், ஊரார் அலர்கூறியதற்காக மணம்பெறாது யாதொரு செயற்கையழகுமின்றிக் கன்னியாக வாழ்வைக் கழிக்கத் துணிந்த விசாகை வந்ததை, "புனையா வோவியம் புறம்போந் தென்ன" (உஉ 88) என்றும் கூறிய அடிகளில் வண்ணங்களைக் கொண்டு ஒப்பனை செய்யாத சித்திரத்தை அவ்விருவர்களுக்கும் உவமைகூறியிருத்தல் காண்க. மாதவிக்குச் சுதமதி உவவனத்திலுள்ள பளிக்கறை மண்டபத்தைப்பற்றி யுரைக்கும்பொழுது, "விளிப்பறை போகாது மெய்ப்புறத் திட்டம், பளிக்கறை மண்டப முண்டு" (ந 63 - 4) என்றதும், மணிமேகலை அதற்குள் மறைந்திருந்தகாலையில் உதயகுமரன் அவள் உருவத்தைமட்டிலும் கண்டதுமாகிய செய்திகளால் இவர் கண்ணாடியின் இயற்கையைப் புலப்படுத்தியிருக்கின்றார். இவர் இந்நூலில் வருகின்ற பல்

ருடைய வரலாற்றையும் யாரேனும் ஒருவருடைய கூற்றாக அமைத்துப் புலப்படுத்துகின்றார்; உயிர்களின் பசிப்பிணியை நீக்கியும், அவற்றிற்கு உண்டி இருக்கை முதலியவற்றை வழங்கியும் செய்யப்படும் அறத்தினது சிறப்பைப் பலவகையில் எடுத்துக் காட்டுகின்றார். மாதவி கண்ணகியைப்பற்றிக் கூறும் பகுதியிலும் ஆதிரை மருதியென்பவர்களுடைய வரலாறுகளிலும், சித்திராபதியின் கூற்றிலும் பத்தினிப்பெண்டிர் இயல்பை விளங்கவைத்திருக்கின்றார்.

எடுத்துக்கொண்ட நூற்கேற்ற கொள்கைகளைச் சிறப்பித்தல் ஆசிரியரது கடப்பாடாதலின், பௌத்த சமயத்தைப் பாராட்டிக் கூறும் இந்நூலில் சுதமதியின் வரலாற்றால் சமணரையும் ஆபுத்திரனது வரலாற்றால் வேள்வியையும் குறை கூறுதல் அறிதற்குரியது. இடையிடையே * பல இதிகாசக் கதைகள் புராணக் கதைகள் முதலியன இவரால் எடுத்தாளப்படுகின்றன. மாதவர்களுக்கு அபசாரம் செய்யின் அத்தீங்கு பெருந்துன்பத்தை விளைக்குமென்பதும் அவர்களுக்கு ஒரு சிறிது நன்மைபுரியினும் அது பின்பு பன்மடங்கு நற்பயனை உண்டாக்குமென்பதும் பலருடைய வரலாறுகளால் இந்நூற்கண் இவரால் காட்டப்படுகின்றன.

சில இடங்களில் சிலர் கூற்றில் உலகவழக்கில் நிகழும் சில வகைத் தொடர்களை இடைப்பெய்து அப்பகுதிகளைச் சுவைபெறச் செய்கின்றார். "மறந்தே னதனிற மாதவி கேளாய்" (௩ 69), "மறந்தது முண்டென மறித்தாங் கிழிந்து" (௧௦ 88), "மறந்தே னதனிற நீயெடுத் துரைத்தனை" (௧௧ 119) என்பவற்றையும், "ஆங்கவன் றன்றிற மறவண னறியுமென, றீங்கென னுவை வருத்தியது" (௧௫ : 38 - 9) என்பதனையும், "ஓவியச் சேனனென் னுறு துணைத் தோழன், ஆவதை யிந்நகர்க் காருரைத் தனரோ" (௨௧ · 135-6) என்பதனையும், "இருந்தாய் நீயோ வென்பா ரின்மையின்" (௧௪ · 69) என்பதனையும் காண்க. சுதமதி உதயகுமரனுடன் உடலின் தன்மையைக் கூறும் பகுதியும், சித்திராபதி மணிமேகலையை அழைத்துவருமாறு உதயகுமரனைத் தூண்டும் பகுதியும், சக்கரவாளக்கோட்டத்து முனிவர் உதயகுமரன் வெட்டுண்ட செய்தியை அரசனுக்குக் கூறும் பகுதியும், இவைபோன்ற பிறவும் இன்ன வகைச்செய்தியை இன்னருடன் இவ்வாறு சொல்லவேண்டுமென

* இவற்றை இந்நூல், ௩௨ - ௬ - ஆம்பக்கங்களிற் காணலாம்

னும் முறையைப் புலப்படுத்தி நிற்கின்றன. சில தொடர்கள் ஒரேவிதமாகப் பல விடங்களில் இந்நூலில் வந்துள்ளன. உருவகங்கள் பல இந்நூலுட் காணப்படும். "வலம்புரிச் சங்கம் வறிதெழுந் தார்ப்பப், புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க" (௭ 112-24) என்பன முதலிய அடிகளிற் சொற்பின்வருநிலையணியும், "சாலிக் குண்டோ தவறு" (௧௩ 98) என்னும் தொடரிற் சிலேடையணியும், * "குருகுக் கருவுயிர்ப்ப, ஒருதனி யோங்கிய திருமணிக் காஞ்சி" (௧௮ 55-60) என வரும் அடிகளிற் சிலேடை உருவகம் முதலியனவும், "பறாஅக் குருகி னுயிர்த்து" (௧௯ 28), "பூத்த வஞ்சி பூவா வஞ்சியில்" (௨௯ 78) என்பவற்றில் வெளிப்படை நிலையணியும் அமைந்துள்ளன. சமய சம்பந்தமான சில சொற்களையுந் தொடர்களையும் வேறு சிலவற்றையும் இடத்திற் சேரப் இவர் மொழிபெயர்த்து அமைத்திருத்தல் மிகப் பாராட்டற்குரிய தொன்றாம். இவருடைய வாக்கில் நன்சனம் செவ்வனம் என்னும் சொற்கள் பலவிடங்களில் வந்துள்ளன.

வெண்பா.

"சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால் - மல்லிகையின்
வண்டார் கமழ்தாம மன்றே மலையாத்
தண்டாரான் கூடற் றமிழ்."

---

* "மெய்ந்நிலை மயக்கமாவது பொருணிலைமை மயக்கங் கூறுதல், 'குருகு கருவுயிர்ப்ப, ஒரு தனியோங்கிய திருமணிக் காஞ்சி' என்றவழி, குருகு என்பது மாதவி யென்னும் கொடிக்கும் பெயராதலின் அப்பெயருடையாளைக் குருகென்றார்; காஞ்சி யென்பது மேகலைக்குப் பெயராதலின், அது மணிக்காஞ்சி யென்றேட்டி மணிமேகலை யென்பாள்மேல் வந்தது; இவ்வாறு பொருணிலைமயக்க மொருவனவும் இசையெச்சமா மென்றவாறு" (தொல். எச்ச. 47, தெய்வச்.) என்றது இங்கே கருதற்குரியது.

# இந்நூலால் தெரிந்த அரசர்களின் பெயர்கள் முதலியன.

---

௧ அரசர்கள் — அத்திபதி, இரவிவன்மன், இராகுலன், இராமன், உதயகுமரன், ககந்தன், கரிகால்வளவன் (கரிகாற்பெருவளத்தான்), கனகன், காந்தன், கிள்ளிவளவன், குமரன், சிதரன், செங்குட்டுவன், நாகசயனன், துணைபிளங்கிள்ளி, தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியன், தொடுகழற்கிள்ளி, நாகநாட்டரசரிருவர், நெடுஞ்செழியன், நெடுமுடிக்கிள்ளி, புண்ணியராசன், பூமிசந்திரன், மனு, மாவண்கிள்ளி, மாவலி, முசுகுந்தன், வசு, வடிவேற்கிள்ளி, வத்தவன் (வத்ஸராஜன்), வலைவணன், வாணன், விசயன், விடர்ச்சிலைபொறித்தவேந்தன், விராடன், வென்வேற்கிள்ளி

௨. அக்ஷயபாத்திரம் — அமுதசுரபி.

௩ ஆறுகள் — கங்கை, காயங்கரை, காரியாறு, காவேரி, குமரி.

௪ உலகம் — நாகலோகம், வித்தியாதரருலகு.

௫ ஊர்கள் — அசோதரநகரம், இடவயம், உஞ்சை, கச்சயம், கபிலை, காந்தாரபுரம், காஞ்சி, காவிரிப்பூம்பட்டினம் (காகந்தி), கொற்கை, கோசம்பி (கௌசாம்பிநகரம்), சண்பை, சிங்கநகரம், சித்திபுரம், சேடி, தக்கணமதுரை (மதுரை), நாகபுரம், வஞ்சி, வயனங்கோடு, வாரணசி

௬ குலங்கள் — இந்திரகுலம், சூரியகுலம், மாவலிகுலம்.

௭ கோயில்கள் — இந்திரவிகாரம், கலைநியமம், குச்சரக்குடிகை, சக்கரவாளக்கோட்டம், தருநிலை (கற்பகத்தரு நிற்கும் கோயில்), தீவதிலகை கோயில், புத்தபாத பீடிகைக் கோயில், பூதசதுக்கம், மணிமேகலா தெய்வக் கோயில், வச்சிரக்கோட்டம் (வச்சிராயுதம் நிற்கும் கோயில்)

௮. தருமசாலை — உலகவறவி

௯. தீவங்கள் — இரத்தினத்தீவம், இலங்காதீவம், சம்புத்தீவம், சிறுதீவு இரண்டாயிரம், பெருந்தீவு நான்கு, மணிபல்லவம்

௧௦ தேவர்கள் — அந்தரி (துர்க்கை), அருபப்பிரமர் நான்கு வகையினர், இந்திரன், உருபப்பிரமர் பதினறுவகையினர்,

கண்ணகி, கந்திற்பாவை (துவதிகன்), குமரி கோவலன், சம்புத்தீவக்காவற்றெய்வம் (சம்பாபதி), சித்திரசேனன், சிந்தாதேவி, சிவபெருமான், திருமால், தீவதிலகை, பலதேவன், பிரமன், பூதம் (அங்காடிப்பூதம், சதுக்கப்பூதம்), மணிமேகலா தெய்வம், மஹாபிரஹ்மா, மாரன், மாருதவேகன், முருகக்கடவுள், விந்தாகடிகை.

கக. நகரத்தெய்வங்கள் —சம்பாபதி, மதுராபதி

கஉ. நாடுகள் —அங்கநாடு, உத்தரமகதம், கலிங்கநாடு, காந்தாரநாடு, சாவகநாடு, நாகநாடு, பாண்டிநாடு, பூருவதேயம், மகதம்.

கங. நூல்கள் —ஓவியநூல், திருக்குறள், பிடகம், மடைநூல், மறைகலிநூல்

கச. நோய் —யானைத்தீநோய்

கரு. பாம்பு —திட்டிவிடம்

கசு. புத்தஸ்தலமுள்ள இடங்கள் —காஞ்சி, காவிரிப்பூம்பட்டினம், சமந்தம் (சமனொளி, பாதபங்கயமலை), மணிபல்லவம், வஞ்சிநகர்.

கஎ. புலவர்கள் —இளங்கோவடிகள், திருவள்ளுவர்.

கஅ. பொய்கைகள் —கோமுகி, சரவணம்

ககூ. மலைகள் —இமயம், சமந்தம் (சமனொளி, பாதபங்கயமலை, கிருத்திரகூடம்), கவிரமலை, தாரமலை, பொதியில், மேரு, மேருவைச் சூழ்ந்த ஏழு குன்றுகள், விந்தம்

உ௰. முனிவர்கள் :—அக்கபாதர், அகத்தியர், அரலர், அறவணவடிகள், கபிலர், கிருதகோடி, கேசகம்பளர், கௌதம முனிவர், சங்கதருமர், சாதுசக்கரர், சிருங்கி, சைமினி, தருமசாவகர், பரசுராமர், பிரமதருமன், புத்தன், மணமுகமுனிவன், விசுவாமித்திரன், வியாசன், விரிஞ்சி, விருச்சிகன்

உக. வனங்கள் :—கவேரவனம், சம்பாதிவனம், தருமதவனம்

உஉ. வாதங்கள் :—அளவைவாதம், ஆசீவகவாதம், சாங்கியவாதம், சைவவாதம், நிகண்டவாதம், பிரமவாதம், பூதவாதம், மந்திரவாதம், வேதவாதம், வைசேடிகவாதம், வைணவவாதம்.

உங. விழாக்கள் :—இந்திரவிழா, மங்கலத்திருநாள்.

உ

# மணிமேகலைக் கதைச்சுருக்கம்.



வெண்பா

“இமையவர்கண் போலி யிமையாத்தாள் சூடச்
சமையார் தொழார்றமை யல—இமைய
மலைமடந்தை வாச மலர்மடந்தை யெண்ணெண்
கலைமடந்தை நாவலோர் கண்.”

## க.—விழாவறைகாதை.

பண்டைக்காலத்திற் காவிரிப்பூம்பட்டினத்தை வளமுறச் செய்வித்தற்கு நினைந்த அகத்தியமுனிவருடைய கட்டளையின்படி தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியனென்னுஞ் சோழன் இந்திரனை வணங்கிக் குறையிரந்து அவனனுமதிபெற்று இருபத்தெட்டு நாள் அந்நகரில் நடத்தியதும் அச்சோழன் காலத்திற் போலவே பிற்காலங்களில் அவன் பரம்பரையோரால் ஆண்டுதோறும் நடத்தப்பெற்று வந்ததுமாகிய இந்திர விழாவை நடத்தற்குரிய அந்நகரத்துள்ள பலசமயவாதிகளும் பிறரும் ஒருங்குகூடி, “இந்திரவிழாவை நாம் மறந்தால் முசுகுந்தனது துயரைப் போக்கியதான நாளங்காடிப் பூதம் துன்பஞ்செய்யும், பாவிகளைப் புடைத்துண்பதாகிய சதுக்கப்பூதம் இந்நகரை விட்டுநீங்கும், ஆதலால் இவ்விழாவை நடத்துவோமாக” என்று தம்முள் நிச்சயித்துக்கொண்டு அவ்விழா நடக்கப்போதலை நகரத்தாருக்கு அறிவிக்கும்படி முரசறைவோனுக்குச் சொல்ல, அவன் வச்சிரக் கோட்டத்துள்ள முரசை யானையின் பிடரிமேலேற்றி, முதலில் ஊரை வாழ்த்தி, “மேகம் மாதந்தோறும் மும்மழை பொழிக, அரசன் செங்கோலினனாகுக, அறிஞர்களே! இந்திரவிழா நடக்குங் காலத்திற் சுவர்க்கலோகம் வறிதாகும்படி எல்லாத்தேவரும் அதனை நீங்கி இங்கே எழுந்தருளுவாரென்பது பெரியோர்களுடைய துணிபாதலால், வீதிமுதலியவற்றிற் பூரணகும்பங்களும் பொற்பாலிகைகளும் பாவைவிளக்குகளும் ஆகிய இவற்றைப் பரவ வைத்திடுமின், குலைக்கமுகும் குலைவாழையும் கரும்பும் வஞ்சிக்கொடியும் பூங்கொடியும் ஆகிய இவற்றைக் கட்டவேண்டிய இடங்களிற் கட்டுமின், தூண்களில் முத்துமாலைகளை நாற்றுமின்,

வீதிகளிலும் மன்றங்களிலும் பழமணலை மாற்றிப் புதுமணலைப் பரப்புமின், துகிற்கொடி வகைகளை மாடங்களிலும் வாயில்களிலும் கட்டுமின், சிவபெருமான் முதல் சாத்தன் ஈறாகிய தெய்வங்கள் உறையுங் கோயில்களிற் செய்யவேண்டிய காரியங்களை ஏற்பச் செய்யுமின், தருமோபதேசஞ்செய்யும் அறிஞர்களே! பந்தரிலும் அம்பலங்களிலுஞ்சென்று பிரசங்கம் புரிமின், சமயவாதிகளே! விதியாமண்டபத்தை அடைந்து இருத்தற்குரிய இடத்திலிருந்து வாதம்புரிமின், யாரிடத்தும் பகைமையும் கோபமுங் கொள்ளன்மின்" என்று கூறி முரசறைந்து இந்திரவிழாவைத் தெரிவித்தான்.

## ௨.—ஊரலருரைத்தகாதை.

பின்பு காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழா நடைபெற்றது, அவ்விழா நாளன்றிற் பண்டைவழக்கப்படியே ஆடுதற்பொருட்டு மணிமேகலையும் மாதவியும் வாராமையால் மனம் புழுங்கிய சித்திராபதி வயந்தமாலையை அழைத்து, "நீ மாதவிபாற் சென்று விழாவிற்கு வாராதிருந்ததலைப்பற்றி இவ்வூரார் கூறும் பழிமொழியை அவளுக்குச்சொல்லி வா" என்று அனுப்ப, அவள் சென்று மணிமேகலையோடு மாதவி இருந்த மலர்மண்டபத்தை யடைந்து, அங்கே தவச்சாலை வாடிய மாதவியின் உடம்பைக் கண்டு வருந்தமுற்று அவளை நோக்கி, "நீ உன் மகளுடன் இந்திர விழாவிற்கு வராமலும், உன் மரபிற்கு ஒவ்வாத தவவொழுக்கம் பூண்டிருந்ததலைப்பற்றி ஊரார் கூறும் பழிமொழிகள் பல" என்று கூற, மாதவி, "கணவன் கொலையுண்டதற்குப் பொறாளாய் மிகச் சினந்து மதுரையை எரித்த பத்தினிக்கடவுளாகிய கண்ணகியினுடைய மகள் மணிமேகலை தவவழியிற் செல்லுதற்கு உரியளேயன்றி மிகவுமிழிந்த பரத்தைமைத் தொழிலுக்கு உரியளல்லள், ஆதலின் அவள் அங்கே வாராள், நான் இங்கேவந்து பௌத்தசாரியராகிய அறவணவடிகளை வணங்கி, என் காதலன் மதுரையிற் கொலையுண்டது முதலிய பெருந்துன்பத்தை வருந்திச்சொல்லி முறையிட்டேன், முறையிட்ட எனக்கு அவர்,

'பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோ ருறுவ தறிக' (௬௪ - ௭)

என்று நால்வகை வாய்மைகளையும் அருளிச்செய்து பஞ்சசீலத்தையும் உபதேசித்து, 'இவற்றைக் கடைப்பிடி' என்று சொல்லி என்னைத் தவநெறியிற் புகுத்தினாராதலின், நானும் அங்கே வருவதற்கு உரியேனல்லேன், இச்செய்தியை என் தோழிகளுக்கும் என் நற்றாய் சித்திராபதிக்கும் சொல்" என்று கூற, அதுகேட்ட வயந்தமாலை பெறுதற்கரிய மாணிக்கத்தைக் கடலில் வீழ்த்தியவர்போலச் செயலற்று மீண்டு சித்திராபதியிடம் சென்றாள்.

## ௩.—மலர்வனம்புக்ககாதை

இங்ஙனம் மாதவி வயந்தமாலைக்குச் சொல்லிய வருத்தஞ் சொல்லைக்கேட்ட மணிமேகலைக்கு அகவெளிவழியாகப் பற்றறுதற்குரிய நற்காலம் (ஏதுநிகழ்ச்சி) வந்துற்றமையால், அவள் தன்னுடைய தாய்தந்தையரான கண்ணகிக்கும் கோவலனுக்கும் மதுரையிலே நேர்ந்த துன்பச்செய்தி தன் காதுகளிற் பட மனங்கலங்கி அழுது சிந்துகின்ற கண்ணீரால் தான் தொடுக்கின்ற மாலையை நனைத்துக்கொண்டிருப்ப, மாதவி அதனைக்கண்டு கண்ணீரைத் துடைத்து அவளுடைய துக்கத்தை ஒருவகையாக மாற்ற நினைந்து, "இப்பூமாலை உன் கண்ணீராகிய கலப்பால் தூய்மையை யொழிந்தது; ஆதலின், வேறுமாலை தொடுத்தற்கு நீ சோலை சென்று புதுமலர் பறித்துவா" என்றாள்.

அதனைக்கேட்ட சுதமதி மாதவியை நோக்கி, "தாய்தந்தையர்க்கு நேர்ந்த பெருந்துன்பத்தைக் கேட்டு மிக்க துக்கத்தை அடைந்த மணிமேகலையின் கண்ணீரைக் காணிற் காமன் தன் படைக்கலங்களை எறிந்துவிட்டு நடுங்குவான்; இப்பாவையை ஆடவர் புறத்தே காண்பாராயின் விட்டு நீங்குவாரோ? நீங்கார்; இயற்கைத்தன்மை குன்றுவார்; குன்றாமல் நிற்பாராயின், அவர்கள் பேடியரல்லரோ? ஆதலால், இவளை இப்பொழுது புறத்தே பூப்பறித்தற்குத் தனியே அனுப்பலாகாது; இந்நகரத்தில் நான் வந்ததற்குரிய காரணங் கூறுவேன், கேட்பாயாக; சண்பைநகரத்துள்ளானாகிய கௌசிகனென்னும் அந்தணனுடைய மகளாகிய யான், தனியே செல்லுதற்கு அஞ்சாமல் ஆராய்ச்சியின்றி ஒரு சோலையிற்சென்று பூப்பறித்தேன்; அப்பொழுது இந்திரவிழாவைக் காணுதற்கு இந்நகரைநோக்கி ஆகாயவழியேவரும் மாருதவேகனென்னும் வித்தியாதரனொருவன் என்னைக்கண்டு உடனே எடுத்துக்கொண்டு

மேலேசென்று, தனவயமாககிச சிலநாள கழிததபின இநநகரததி லே என்னை விட்டு விடடு நீஙகித தன நகரம போயினன, மகளிா தனியே செல்லுதலால உணடாகும தீஙகு இததனமையது, ஆத லால, மணிமேகலை தனியே போயச சோலையிற பூபபறிததல தவறுகும இவளுடன யாரேனும செலலவேணடும இலவநதி கைச சோலைககுச சென்றால அரசனுடைய பககததிலுளளாா அாகிருபபா, உயயானததிறகுச செலலலாமோ வெனின அதில தேவாகளாலனறி மனிதாகளால விருமபபபடாதனவும வணடு கள மொயககப பெறுதனவுமாகிய மலா களையுடைய மரஙகளெல லாம வாடாத பூமாலைகளைத தாககுதலால, 'இவவனம பாசக கையையுடைய பூதஙகளாற காககபபடும' எனறு நினைநது அவ வனததை அறிவுடையோா அடையாா, சூரியகிரணததாற சிறை யிழநத சமபாதியிருநத சமபாதிவனமும, காவிரியின தநதையா கிய கவேரனிருநத கவேரவனமும மிகச முதுமையையுடையனவும தீணடிவருததுவனவுமாகியதெயவஙகளாறகாககபபடுதலின அவற றினிடததும அறிவுடையோா செலலாா,

> அருளு மனபு மாருயி ரோமபும
> ஒருபெரும பூட கையு மொழிய நோனபிற
> பகவன தாணையிற பனமரம பூககும (நீக - கக)

உவவனமெனறு ஒருவனமுணடு, அவவனததில தனனகததுள ளோருடைய ஓசையை வெளிபபடுததாமல அவாகளுருவஙகளை மட்டும வெளிபபடுததுவதாகிய பளிககுமணடபம ஒனறுளது, அமமணடபததிலுளளே மாணிககச சோதிபரநத ஒருபதுமபீடம இருககிறது, அபபீடததிலிட்டால அருமபுகள மலரும, பலவரு டஞசெனறாலும அதில இட்டமலாகள வாடா, அமமலாகளில வணடுகள மொயயா, இதுகாறும அதன பெருமையை உனககுச சொலல மறநதேன, கேடபாயாக ஒருதெயவததை நினைநதோா அததெயவததின அடிகளைத தியானிததுப் மலாகளை அபபீடததிற சோததால அமமலாகள அபபீடததை நீஙகி அததெயவத தின அடிகளிடததே செலலாநிறகும, யாதொரு நினைபபுமினறி அவறறை அபபீடததே சோபபின, அவைகள அததை விட்டு நீஙகா, இதறகுககாரணம யாதெனறு வினவுவாயாயின சொலலு வேன, செயயும சருமஙகள் மனததோடு கூடாத விடததும அவைகள பலிககும' எனனும விரதிகள துனபமடையவும, 'மனத

தோடுகூடாதவழிக்கருமங்கள்பலியா' என்பதற்கு உதாரணமாகவும் மலரை இட்டுக் காட்டுதற்கு மயனென்னும் தெய்வத் தச்சனால் அப்பீடம் நிருமிக்கப்பட்டதாகும், அவ்வனத்திலன்றி உன் மகள் வேறு வனங்களிற் செல்லுதற்கு உரியாளல்லள், அவளோடு பூப்பறித்தற்கு நானும் துணையாகச் செல்வேன்" என்று சொல்லி விட்டு மணிமேகலையோடு சேர்ந்து அவள் போகும்பொழுது உண்ணோன்பி யொருவனைத் தொடர்ந்து நின்று, "ஐய, இதனை உண்ணும், உண்டால், காற்றுப்புகாத அறையிற் புகுந்தவர்போலே அழுக்குடைய உடம்பிற் புகுந்து வருந்திக் கொண்டிருக்கும் உம்முடைய உயிர் அவ்வருத்த மொழிந்து மிக்க இன்பத்தை அடையா நிற்கும், ஆதலால் இதனையுண்டு தெளிக" என்று கள்ளை யுண்ணும்படி வற்புறுத்திக் கூறும் ஒரு களிமகன் பின்னே வியப்புற்றுச் செல்லும் சனங்களும், ஒரு பித்தனுடைய பலவகைப்பட்ட விகாரச் செயல்களைக்கண்டு வருந்தி நிற்கும் சனங்களும், பேடென்னும் கூத்தைக்கண்டு நிற்கும் சனங்களும், தெருவின் இருபுறத்துமுள்ள மாளிகைகளில் எழுதப்பட்டுள்ள சித்திரங்களைக்கண்டு வியந்து நிற்கும் சனங்களும், சிறு தேரின் மீது செய்து வைக்கப்பட்டுள்ள யானையின்மேற் சிறுவர்களை யேற்றி மகளிர் பாராட்டுதலைக் கண்டு நிற்கும் சனங்களும் ஆகிய எல்லோரும், முன்னம் விராட நகரத்திற் பேடி வடிவங்கொண்டு சென்ற அருச்சுனனைக் கண்டு வியந்து சூழ்ந்துகொண்டவர்களைப் போல மணிமேகலையைச் சூழ்ந்துகொண்டு, "மிக்க அழகை யுடைய இவளைத் தவவழியிற் புகுத்திய தாய் மிகவும் கொடியவள், இவள் பூப்பறித்தற்குச் சோலையிற் புகுவாளாயின், ஆங்குள்ள அன்னப்பறவைகள் முதலியன இவள் நடை முதலியவற்றைக் கண்டு என்ன பாடு படா!" என்று இவைபோல்வனவற்றைச் சொல்லி அவளுடைய அழகைப் பாராட்டி மிகவும் வருந்தி நின்றனர். மணிமேகலை சுதமதியோடு மெல்லச்சென்று உவவனத்தில் மலர்கொய்தற்குப் புகுந்தாள்.

## ௪.—பளிக்கறைபுக்ககாதை.

புகுந்தவள், அச்சோலையின் வளங்களையும் ஆங்குள்ள பொய்கையின் அழகையும் சுதமதிகாட்டக் காண்பாளாயினள்.

அவள் அங்கே அப்படியிருக்க, மதவெறிகொண்டு தெருத் தோறும் சனங்களை வருத்தித் திரிந்ததான காலவேகமென்னும்

யானையின் மதத்தை யடக்கித் தேரேறிச் சேனையுடன்வரும் உதயகுமரன் நாடகக் கணிகையர் வீதியில் ஒரு மாடத்தே மலரணைமேற் காதற்பரத்தை யொருத்தியோடு யாழின் கோட்டைத் தழுவிக்கொண்டு மயங்கிப் பாவை போலிருந்த எட்டிகுமரனைத் தெருப்பக்கத்திலுள்ள சாளர வழியாற் கண்டு, "நீ அடைந்த துன்பம் யாது?" என்றான். உடனே அவன் துணுக்குற்றெழுந்து விரைந்து அருகே சென்று உதயகுமரனை வணங்கித் துதித்து, "இயற்கை யழகுகெட்டு மலர்வனத்திற்கு இவ்வீதி வழியே நடந்து செல்லும் மணிமேகலையைக் கண்டேன், கண்டவுடன் அவளது தந்தையாகிய கோவலன் மதுரையிலடைந்த கொடுந்துன்பம் நினைவிற்கு வந்து என் மனத்திண்மையை மாற்றி இந்த யாழிலுள்ள பகைநரம்பில் என் கையைச் செலுத்தியது, இதுவே நான் அடைந்த வருத்தம்" என்று சொல்ல, பலநாளாக மணிமேகலையை விரும்பிக்கொண்டேயிருந்த உதயகுமரன் அவன் சொல்லால், அவள் சோலை சென்றுள்ளமையை அறிந்து மகிழ்ந்து, "அங்கே போய் மணிமேகலையை என் தேரின்மேலேற்றிக்கொண்டு வருவேன்" என்று அவனுக்குச் சொல்லிவிட்டுத் தேரைச்செலுத்திச் சென்று உவவனத்தின் மதில்வாயிலை யடைந்தான்.

மணிமேகலை அத்தேரொலியைக் கேட்டுச் சுதமதியை நோக்கி, "உதயகுமரன் என்மேல் மிக்க விருப்பமுடையவ னென்று மாதவிக்கு வயந்தமாலை சொல்லியதை முன்னம் கேட்டுள்ளேன், அவனுடைய தேரொலிபோலும் இது, இத்துன்பத் திற்கு யாது செய்வேன்?" என்றாள். அதைக்கேட்ட சுதமதி அவளை ஆங்குள்ள பளிக்கறையிற் புகுத்தித் தாழக்கோலிட்டுக் கொண்டு உள்ளே இருக்கச் செய்துவிட்டு, தான் அப்பளிக்கறைக்கு ஐந்து விற்கிடைத் தூரத்தே நின்றாள். அங்ஙனம் நின்ற சுதமதியைச் சோலையினுள்ளே வந்த உதயகுமரன் கண்டு, "யாருமில்லாத இவ்விடத்தே நின்றாய், நீ மணிமேகலையுடன் வந்தாயென்று அறிந்துகொண்டேன், அவள் முதுக்குறைவுற்றனளோ? அவளுடைய செவ்வாய் நகைத்தல்லப் பெற்றதோ? கண்கள் பிறழ்ந்து உலாவி வேட்கையைப் புலப்படுத்துமோ? அவள் பௌத்த சங்கத்தாரிருப்பிடத்தை நீங்கி இவ்விடம் வந்ததற்குக் காரணம் யாது? சொல்வாய்" என்று தனது வேட்கை தோன்ற வினவினன்.

அப்பொழுது சுதமதி, வாயிலில்லாத அறையில் அகப்பட்டோர் போல மனம்வருந்தி, "இளமைப்பருவத்திலேயே முதுமை

தனைத் தெரிந்து வியப்புற்று, "இப்பாத்திரத்தின் விசேடத்தை யும் இவள் செய்கையையும் அரசனுக்குத் தெரிவிப்போம்" என்று நினைந்து சென்று ஒருமண்டபத்தில் மிக்க சிறப்புடன் சீர்த்தி யென்னும் இராசமாதேவியோடு வீற்றிருக்கும் அரசனுடைய செவ்வியைப் பார்த்துச் சேய்மையில் வணங்கிநின்று,

"வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி
ஒளியொடு வாழி யூழிதோ றூழி
வாழி யெங்கோ மன்னவா பெருந்தகை
கேட்டருள் மன்னே கெடுகநின் பகைஞர்" (கஉ௬ - கூ0)

என்று வாழ்த்தி, "யானைத்தீயென்னும் நோயால்வருந்தி உடல் மெலிந்து இந்நகரில் திரியும் மங்கை யொருத்தி சிறைக்கோட்டத் துள்ளே வந்து சிறைவீரை வாழ்த்திக் கையின்கண் பிச்சைப்பாத் திரம் ஒன்றையே வைத்துக்கொண்டு அதிலிருந்துண்டாகி வளரும் சோற்றால் அங்கேயுள்ள எல்லாருடைய பசியையுந்தீர்த்து விளங்கு கின்றாள். இவற்றுக்குத்தக்க தெரிவிப்பதற்கே வந்தோம்" என் றார் அதைக்கேட்ட அரசன், 'அம்மங்கையை இங்கே அழைத்து வருக" என்றான். உடனே காவலாளர்கள் வந்து அதனைச்சொல்ல அவள்சென்று அரசனைக்கண்டு, "அரச! உனது அருள் வாழ்க" என்றாள். அரசன், "மிக்க தவமுடையாய்! நீயார்? கையிலேந் திய பாத்திரம் எங்கே கிடைத்தது?" என்றான் அவள், "அரசே! நெடுங்காலம் வாழ்வாயாக, யான் விஞ்சைமகள், இந்நகரில் வேற்று வடிவங்கொண்டு திரிந்தேன், இது பிச்சைப்பாத்திரம், இதனை அம்பலத்தேயுள்ள தெய்வமொன்று எனக்கு அருளியது, இது தெய்வத்தன்மையோடு கூடியது, யானைத்தீயென்னும் தீராப்பசியைத் தீர்த்தொழித்தது; பசியால் மெலிந்தவர்களுக்கு மிருதசஞ்சீவினியாகவுள்ளது" என்று சொல்ல, அரசன், "யான் செய்யவேண்டுவது யாது?" என்றுகேட்ப அவள், "சிறைச் சாலையை அறச்சாலையாகச் செய்யவேண்டும்" என்றாள். அரசன் அவள் விரும்பிய வண்ணமே சிறைச்சாலையை அழித்துத் தூய்மை செய்து அவ்விடத்தைப் பலவகையான புண்ணியங்களும் நடத்தற் குரிய இடமாகச்செய்வித்தான்.

## உ0.—உதயகுமரனை வாளாலெறிந்தகாதை.

அரசனுடைய கட்டளையால், சிறைச்சாலை பலவகைப் புண்ணியங்களும் நிகழ்தற்குரிய அறச்சாலையாக விளங்கிற்று. உதயகுமரன் இச்செய்திகளையெல்லாம் கேட்டு, "மணிமேகலை உலகவறவியை நீங்கி வெளியே வந்தபொழுது அவளைக் கைப்பற்றிக்கொண்டு தேரிலேற்றி அவள் கற்ற வித்தைகளையும் அவள் கூறும் இனிய முதுமொழிகளையும் கேட்பேன்" என்று தன்னுள்ளே எண்ணிக்கொண்டு சென்று அவளிருக்கும் உலகவறவியில் ஏறினன். காஞ்சனனென்னும் வித்தியாதரன், "பெரும்பசியால் வருந்தும்படி காயசண்டிகைக்குப் பொதியின்மலையைச் சார்ந்த காட்டாற்றின் கரையில் விருச்சிகமுனிவன் இட்ட சாபத்தை அவள் அனுபவித்தற்குரிய பன்னிரண்டு வருடங்களும் சென்றன; சென்றும் அவள் வாராமைக்குக் காரணம் யாதோ?" என்று மிகக் கவலையுற்று, தன் நகரை நீங்கி ஆகாயவழியே வந்து காவிரிப்பூம்பட்டினத்தில் இருக்கிற பூதசதுக்கமும் பல பூஞ்சோலைகளும் முனிவர்களுடைய தவச்சாலைகளும் மன்றங்களும் அம்பலங்களும் ஆகிய இடங்களிலெல்லாம் சென்று சென்று தேடித் தேடித் திரிந்து, காயசண்டிகைவேடம் பூண்டு உணவளித்து மாந்தர்கள் பலருடைய பசியையும் மாற்றிக்கொண்டிருக்கும் மணிமேகலையை மணிமேகலையென்று அறியானாகிக் காயசண்டிகையென்றே நிச்சயித்துக்கொண்டு அருகிற் சென்று அவளைநோக்கி, "நீ ஏந்திய இப்பாத்திரம் ஒன்றாயிருந்தும் இதனால் அளிக்கப்படும் உணவை அருந்துவோர் பலராய் உள்ளார்; எனக்கு இது மிக்க வியப்பைத் தருகின்றது; உன்னை வருத்திய யானைத்தீயாகிய நோயை ஒழித்தற்குத் தேவர்கள் இதனைக் கொடுத்தார்களோ?" என்று சொல்லிப் பின்பு பழைய நட்பினைப் புலப்படுத்தும் மொழிகள் பலவற்றைக் கூறிப்பாராட்டவும், அவள் அவற்றைச் சிறிதும் மதியாமல் அவனை நீங்கி உதயகுமரனையடைந்து அவனருகே நின்று இளமையின் நிலையில்லாமையை அவனுக்கு அறிவுறுத்த நினைந்து, அங்கே இயல்பாகவந்த முதுமைப்பருவத்தாளொருத்தியைக் காட்டி, முன்பு அழகையுடையவளாயிருந்த அவளுடைய உறுப்புக்கள் வலிமைகுறைந்து அழகுகெட்டு வெறுக்கத்தக்கனவாக இருத்தலைப் பலவாற்றாலும் அவனுக்குப் புலப்படுத்துவாளாகி,

"பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத்
தூசினு மணியினுந் தொல்லோர் வகுத்த
வஞ்சந் தெரியாய் மன்னவன் மகனே" (௧௭ - ௧)

என்று கூறினள். அவள் அவ்வாறு கூறுதலைக்கேட்ட காஞ்சனன், "யான் பாராட்டிக் கூறுகின்ற சொற்களின் பொருளை இவள் கொள்ளுகின்றிலள்; என்னை மதிக்கின்றிலள்; அயலான் பின்னே செல்லுகின்றாள், என்னை அயலானாகக் கருதுகின்றாள், காதற் குறிப்பைப் புலப்படுத்திக்கொண்டே நீதிமொழிகளை இவனுக்குக் கூறுகின்றாள், இவன் ஆசைநாயகனாதலினாலேயே இவள் இவ்விடத்தில் தங்கிவிட்டாள் போலும்" என்று நினைந்து மிக்க கோபங் கொண்டு புற்றிலடங்கும் பாம்பைப்போல அவ்வுலகவறவியி னுள்ளே புகுந்து தீத்தொழில் கருதி ஒளித்து அடங்கினன். அவன் அங்ஙனம் அடங்கியதை அறியாத உதயகுமரன் மிக்க வேட்கையை யுடையவனாகி, "மணிமேகலைதான் காயசண்டிகை வேடம் பூண்டு கையிற் பிச்சைப்பாத்திரத்தை ஏந்திக்கொண்டு வந்துநின்று நம்மை மயக்கினள், அறிந்தவன் போன்று பழமைகூறிப் பாராட்டிய அயலானொருவன் இங்கே இருந்ததனால் இவள் இன்றிரவில் இவ்விடத்தைவிட்டு நீங்குவாளல்லள்; இவள் செய்தியை இன்றிரவின் நடுயாமத்தே வந்து தெரிந்துகொள்வோம்" என்று தன்னுள் எண்ணிக்கொண்டே சென்று தன்னிருப்பிடமடைந்தான். மணிமேகலையும் காயசண்டிகையின் உருவத்தோடே சம்பாபதி கோயிலை அடைந்து வதிந்தாள். அப்பால் எல்லாரும் தூங்கிய பின்பு உதயகுமரன் முன்பு எண்ணியவாறே செல்லத்துணிந்து தனியேயெழுந்து அரண்மனையை நீங்கி உலகவறவியை யடைந்து,

வேக வெந்தீ நாகங் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல (௧௮ - ௧)

அதனுள்ளே புகுந்தான். உடனே, அங்கே முன்னம் புகுந்து இவன் வரவை நோக்கிக்கொண்டே கோபத்துடனிருந்த காஞ்சனன், "இவன் இவளிடத்திலேயே வந்தான்" என்று நிச்சயித்து அதிக வேகத்தோடும் எழுந்து விரைந்துபோய் அவன் தோளை வெட்டி வீழ்த்திவிட்டு, காயசண்டிகையைக் கைப்பற்றிக்கொண்டு ஆகாயவழியே செல்லுவோமென்று நினைந்து அவளருகே சென்றான். அப்பொழுது அங்கேயுள்ள கந்திற்பாவையானது, "காஞ்சன! செல்லாதே, செல்லாதே; இவள் உன் மனைவியாகிய காயசண்

டிகை யல்லள், இவ்வடிவம் மணிமேகலைகொண்ட வேறுருவடிவம், காயசண்டிகை கடும்பசியொழிந்து ஆகாயவழியே செல்லுகையில் அவளுக்கு நேர்ந்த துன்பத்தைக் கேட்பாயாக: ஆகாயசாரிகள் தாகனை எழுந்தருளியிருக்கும் விந்தமலைக்குநேராக மேலேசெல்லார்; யாரேனும் அங்ஙனம் செல்வாராயின், அம்மலையைக்காக்கும் விந்தா கடிகையென்பவள் அவர்களைச் சாயையினாலே இழுத்துத் தன் வயிற்றில் அடக்கிக்கொள்வாள்; இதனை யறியாத காயசண்டிகை அம்மலைக்கு நேராக மேற்சென்று அவள் வயிற்றில் அடங்கி விட்டாள். காஞ்சன! இதனையுங் கேட்பாயாக உதயகுமரன் ஊழ்வினையினால் இறந்தானாயினும் நீ சிறிதும் ஆராயாது வெட்டினமையால், அறிவில்லாதவனேயாவாய்; மிக்க தீவினையைச் செய்துவிட்டாய், அவ்வினை விடாது தொடர்ந்து உன்னை வருத்தும்" என்று சொல்லியது. அதுகேட்டு மனம் வருந்திக், காஞ்சனன் தனநகரத்துக்குச் சென்றான்.

## உக.—கந்திற்பாவை வருவதுரைத்தகாதை.

அப்பால் சம்பாபதியின் கோயிலில் இருந்த மணிமேகலை, காஞ்சனன் செய்தியையும் உதயகுமரன் வெட்டுண்டு வீழ்ந்து இறந்ததையும் காஞ்சனனுக்குக் கந்திற்பாவை கூறிய அற்புத மொழியையும் அறிந்து உடனேயெழுந்து தானகொண்ட வேற்று வடிவத்தைத் துறந்து உதயகுமரன் உருவத்தைநோக்கி, "முற்பிறப்பில் திட்டிவிடத்தால் உன்னுயிர்போன காலத்தில் நின்பிரிவாற்றாது தீயிற்பாய்ந்து நானும் உயிர்துறந்தேன்; உவவனத்திற் கண்டபொழுது உன்பாற் கருத்தைச் செலுத்தியதுபற்றி மணிமேகலாதெய்வம் என்னை எடுத்துச்சென்று மணிபல்லவத்தில் வைத்துப் புத்தபீடிகைக்காட்சியால் என்பழம்பிறப்பை எனக்குத் தெரிவித்து உன் முற்பிறப்பையும் கூறிற்று, அதனால், நீ முன்பு கணவனாக இருந்ததையறிந்து யான் உன்பால் அன்புற்று,

> பிறந்தோ ரிறத்தலு மிறந்தோர் பிறத்தலும்
> அறந்தரு சால்பு மறந்தரு துன்பமும்
> யானினக் குரைத்துநின் னிடர்வினை யொழிக்கக்
> காயசண் டிகைவடி வானேன் காதல (கக - உஉ),

வித்தியாதரனுடைய வாட்படையால் வெட்டுண்டு வீழ்ந்தனையே அந்தோ!" என்று புலம்பி வெய்துயிர்த்து வருந்தி அவனுருவின்

அருகே செல்வாளாயினள். அப்பொழுது அங்குள்ள கந்திற் பாவைத் தெய்வம், "நீ இவனிடத்திற் செல்லாதே, செல்லாதே, உனக்கு இவன் கணவனாக இருந்ததும் இவனுக்கு நீ மனைவியாக இருந்ததும் சென்ற பிறவியிலேமட்டும் நிகழ்ந்தனவல்ல; அதற்கு முன்னமேயும் எத்தனையோ பிறவிகளில் நிகழ்ந்தன,

> நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம்
> மனக்கினி யாற்குநீ மகளா யதூஉம்
> பண்டும் பண்டும் பலபிறப் புளவால்
> கண்ட பிறவியே யல்ல காரிகை (உகூ - ௩உ)

இங்ஙனம் தடுமாறும் பிறவித்துன்பத்தை ஒழித்துக்கொள்ளுதற்கு முயலும் அறிவினையுடையாய்! இவனிறந்துபடற்கு நீ துன்பமடையாதே" என்று தனது தெய்வவாக்காற் சொல்லிற்று. அதுகேட்ட மணிமேகலை தொழுது, "இவ்வம்பலத்தில் யாவருக்கும் மெய்ம்மையைச் சொல்லிக்கொண்டு எழுந்தருளியிருக்குந் தெய்வம் ஒன்றுண்டென்பர்; அத்தெய்வம் நீ தானோ? உன் திருவடியை வணங்குகின்றேன்; சென்றபிறவியில் திட்டிவிடத்தாலும் இப்பிறவியில் விச்சாதரனுடைய வாளாலும் இவன் இறந்ததற்குள்ள காரணத்தை நீ அறிவையோ? அறிந்திருப்பாயாயின் அதனை அடியேனுக்கு உரைத்தருளல் வேண்டும்" என்றாள். என்றலும் அத்தெய்வம், "புத்ததேவன் அவதரித்து வருதலைக் கூறிக் காயங்கரை யென்னும் ஆற்றங்கரையி லிருந்துகொண்டு மனிதருடைய அறியாமையைப் போக்கும் பிரமதருமமுனிவரை இராகுலனும் நீயும் வழிபட்டு அவருக்கு அமுது செய்விக்க நினைந்து அக்கருத்தை அவருக்கு அறிவித்து அவர் உடன்பாடுபெற்று, 'விடியற்காலத்திலேயே அடிசில் முதலியவற்றை விரைந்து ஆக்குவாய்' என்று மடையனுக்குக் கூறினீர்; அவன் யாது காரணத்தாலோ அக்காலத்தில் வாராமல் சிறிது பொழுது பாணித்து வந்து, அங்ஙனம்வந்த அச்சத்தால் வழுக்குற்றுக் கால்தளர்ந்து மடைக்கலம் சிதையும்படி வீழ்ந்தான்; வீழ்ந்ததனைக்கண்டும் இரங்காமல், 'இவன் முனிவர்க்குச் செய்ய வேண்டிய காரியத்தை விரைந்து வந்து செய்யாது தாழ்த்தான்' என்று சினந்து தோளும் தலையும் துண்டமாய் வேறாகும்படி இராகுலன் அவனை வெட்டினன், வெட்டிய அவ்வல்

வினையே அப்பிறப்பில் அவனைத் திட்டிவிட்டதால் இறக்கச் செய்த தென்றி இப்பிறப்பிலும் இங்கு வெட்டுண்டு வீழச்செய்தது, உதய குமரன் இங்ஙனம் இறந்ததற்குக் காரணம் இதுவே; வினை, தன் பயனை ஊட்டாமலொழியாதெனப் புத்தர் திண்ணம். இன்னும் கேட் பாயாக. உதயகுமரனிறந்ததற்கு மிகவும் வருத்தமுற்ற சக்கர வாளக்கோட்டத்து முனிவரால் அச்செய்தியை அறிந்த அரசன் உன்னைச் சிறையில் வைப்பான், அதுதெரிந்த இராசமாதேவி உன்னைச் சிறைமீட்டுத் தன்காவலில் வைத்துக்கொள்வாள், மாத வியின் வேண்டுகோளால் வந்த அறவணவடிகளுடைய சொல்லால் அக்காவலினின்றும் நீங்குவை. அப்பால் நீ சாவகநாடு போய் ஆபுத்திரனிடஞ் சென்று அவனோடு மணிபல்லவத்தை அடைவை, தன் வரலாற்றைப் புத்தபீடிகைக் காட்சியாலும் தீவதிலகையாலும் அறிந்து அவ்வரசன் தன் நாட்டை யடைந்த பின், நீ ஒரு முனிவன் வேடம் பூண்டு வஞ்சிநகரம் புகுவாய், புகுந்து அந்நகரத்துள்ள சமயவாதிகள் பலருடைய கொள்கைகளையுங் கேட்பாய்;

> தீவினை யுறுதலுஞ் செத்தோர் பிறத்தலும்
> வாயே யென்று மயக்கொழி மடவாய்' (ககங - ச)

இதுநிற்க! என் வரலாற்றையும் கேட்பாயாக. யான் தெய்வ கணங்களைச் சார்ந்த ஒருவன்; என் பெயர் துவதிகனென்பது, இந்தப் பழைய தூணில் எனக்கு ஒப்பாக மயனுற செய்யப்பட்ட இந்தப் படிமத்தைவிட்டு ஒருபொழுதும் நீங்கேன்" என்று மிகவும் விளக்கமாகச் சொல்லியது. சொன்னவுடன் மணி மேகலை, "அப்பால் என்னுடைய மரணமிறுதியாக நிகழும் செய்தி களையெல்லாம் உரைத்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். பிரார்த்திக்கவே, "மழையில்லாததுபற்றிக் காஞ்சிநகரத்தில் உயிர் கள் பசியால் வருந்துதலையும் மாதவி சுதமதி யென்னும் இருவரு டன் அறவணவடிகள் அந்நகரஞ்சென்று உன்னுடைய வரவைப் பார்த்துக்கொண்டு தங்கியிருத்தலையும் வஞ்சிநகரத்தில் நீ அறிந்து உடனே அக்காஞ்சி நகரஞ் சென்று உணவளித்து எல்லாவுயிர் களையும் பாதுகாப்பாய், அந்நகரத்தே உன்னாலே பற்பல அற் புதங்கள் நிகழும். அப்பால், வஞ்சிநகரிற் கேட்ட சமயவாதிகளு டைய கொள்கைகளையெல்லாம் அறவணவடிகளுக்கு நீ தெரிவிப் பாய்; அப்பொழுது அவர்,

'தவமுந் தருமமுஞ் சார்பிற் றோற்றமும்
பவமறு மார்க்கமும் பான்மையி னுணர்ந்து
மறவிரு ளிரிய மன்னுயி ரேமுற
அறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு
புத்த ஞாயிறு தோன்றுங் காலம் (கசுரு - எ)

இந்தத் தலத்திலேயே இறந்தும் பிறந்தும் தருமோபதேசஞ் செய்துகொண்டு தங்கா நிற்பேன்" என்று சொல்லுவர். அவர் செய்த உபதேசமொழிகளைப் பிழையாமல் நல்லறங்கள் பலவற்றையும் செய்து இறந்து மேலேவரும் பிறப்புக்களை * உத்தர மகத நாட்டிலேயே பெறுவாய், அவைகள் யாவும் உனக்கு ஆண்பிறப்பாகவே நிகழும், அப்பிறப்புக்களுள் ஒவ்வொன்றிலும் அருளறத்தினின்றும் ஒழியாயாகி நின்று முடிவிற் புத்ததேவனுக்கு முதல் மாணாக்கனுக்கும் பெரும்பேறுற்றுப் பற்றற்று நிருவாணமடைவாய். இன்னுங்கேள்: உன் குலத்து முன்னோர்களுள் தானந் தாங்கிச் சீலத்தில் மேம்பட்ட ஒருவனைக் கடலினின்றும் முன்னம் எடுத்தளித்த மணிமேகலா தெய்வம் நீ முற்பிறப்பில் சாதுசக்கர முனிவனுக்கு உணவளித்த புண்ணியவிசேடமுடையாயென்பதை யறிந்து உவவனத்தினின்றும் உன்னை யெடுத்து மணிபல்லவத்திற் கொணர்ந்து சென்று புத்த பீடிகையைக் காணச்செய்தது" என்று அத்தெய்வம் சொல்லிற்று. கேட்ட மணிமேகலை கவலையொழிந்து மயக்கம் நீங்கியிருந்தாள். அவ்வளவிலே சூரியனுதித்தான்.

## ௨௨.—சிறைசெய்காதை.

சூரியனுதித்தவுடன் கந்திற்பாவையையும் சம்பாபதியையும் வழிபட்டவர்கள் அங்கே உதயகுமரன் வெட்டுண்டு கிடத்தலைக் கண்டு, அதனைச் சக்கரவாளக்கோட்டத்திலுள்ள முனிவர்களுக்குக் கூறினர். அம்முனிவர்கள், "இவன் வெட்டுண்டதற்குக் காரணம் நீ அறிந்ததுண்டோ?" என்று மணிமேகலையைக் கேட்ப, அவள் நிகழ்ந்தவற்றைச் சொல்ல, அவர்கள் உதயகுமரனுடைய உடம்பையும் மணிமேகலையையும் வேறிடத்தில் ஒளித்துவைத்து விட்டு அரண்மனை சென்று தம்முடைய வரவை வாயில் காப்போ

* புத்ததேவர் அவதரித்ததும் அவருக்கு ஞானோதயமானதும் மகத நாடாதலால், அது சிறந்த புண்ணியபூமியாகப் பௌத்தரால் மிகப் பாராட்டப்படும்.

ரால் அரசனுக்குத் தெரிவித்து உள்ளேபோய் அரசனையடைந்து அவனை வாழ்த்தியபின்பு, அவ்வரசனுக்கு ஒருமுனிவர், "அரசே! இன்றுமட்டுமன்று! இந்நகரில் காமவிகாரத்தால் மயங்கிப் பத்தினிப் பெண்டிரையடுத்து வன்மைசெய்தும் தவமகளிரை விரும்பியொழுகியும் ஒறுக்கப்பட்டு இறந்தோர் முற்காலத்தும் பலருண்டு; கேட்பாயாக: அரசர்களுடைய பரம்பரையை வேரறுத்த பரசுராமன் போர்செய்தற்கு வந்தபொழுது, துர்க்கை அந்நாளில் இந்நகரையாண்ட காந்தனென்னும் அரசனைப் பார்த்து, 'நீ இப்பொழுது பரசுராமனோடு போர்செய்தற்குச் செல்லுதல் தகுதியன்று' என்று கூறினமையால் வேறிடஞ் செல்லுதற்கு நினைந்த அவ்வரசன் இந்நகரைப் பாதுகாத்தற்குரியோர் யாரென்று ஆராய்ந்து காவற்கணிகையின் புதல்வனும் வீரருள் வீரனுமாகிய ககந்தனென்பவனே இதற்குத் தகுதியுள்ளானென்று நிச்சயித்து அவனை வருவித்து, 'அரசாளுமுரிமை உனக்கின்மையால், அரசபரம்பரையோரைக் கொல்லுதலையே விரதமாகக்கொண்ட பரசுராமன் உன்னோடு போர்செய்தற்கு வாரான்; அகத்தியமுனிவருடைய கட்டளை பெற்று யான் மீண்டு வருமளவும் இந்நகரை நீ பாதுகாக்கக்கடவை; உன்னாற் காக்கப்படுதலின் இந்நகர்க்குக் ககந்தியென்ற பெயர் உண்டாகக்கடவது' என்று சொல்லிவிட்டு வேற்றுவடிவங் கொண்டு தான்கருதிய இடஞ் சென்றான்.

"அவன் சென்றபின் ககந்தனென்பவனால் இந்நகரம் பாதுகாக்கப்பட்டு வந்தது. அப்பொழுது ஒருநாள் ககந்தனுடைய பிள்ளைகளுள் இளையவன், காவிரியில் நீராடிவிட்டுத் தனித்து வந்தவளாகிய மருதியென்னும் பார்ப்பனியை அந்திவாயிலிற்கண்டு காமபரவசனாய், 'நீ வா' என்றழைத்தான்; அவள் மனம் கலங்கி, 'இவ்வுலகில் மழைவளத்தைத்தரும் பத்தினிப்பெண்டிராயுள்ளார் பிறருடைய நெஞ்சிற் புகார்; நானோ இவனுடைய உள்ளத்திற் புகுந்தேன்; ஆதலால் இனி அந்தணனுடைய முத்தீயைப்பேணுந்தகுதி எனக்கு இல்லையே! இதற்குக்காரணம் யாது?' என்று துன்புற்றுத் தன்னுடைய வீட்டிற்குச் செல்லாமற் பூதசதுக்கம் புகுந்து மயங்கி, 'தெய்வமே! கொண்டவனுக்கு யாதொரு குற்றமுஞ்செய்திலேன்; அப்படியிருந்தும் பிறனுடைய நெஞ்சில் எளிதாகப் புகுந்தேன்; யான் செய்த தவறு இன்னதென்று எனக்கே புலப்படவில்லை; தவமறைந்தொழுகுவோர்

முதலிய தீயவர்களைப் பாசங்கட்டிவரு நீ இப்போ அறைந்துண்பை யென்று ஆன்றோர் கூறக் கேட்டுள்ளேன், இப்பொழுது என்னை அங்ஙனஞ் செய்யாமையின், நீ கண்டிருந்ததும் பொய்யாமோ?' என்று அவலித்து அரற்றினள். அரற்றும்பொழுது சதுக்கப் பூதம் தோன்றி, 'மடக்கொடி! கேட்பாயாக:

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய் (௨௨-௫௯)

பொய்க்கதைகளையும் நகையை விளைவிக்கும் மொழிகளையும் பிறர் வாய்க்கேட்டு நிருத்தகிதவாததியங்களை யுடைய விழாக்களை விரும்பித் தெய்வங்களை வழிபடும் நியமத்தை மேற்கொண்டிருந்தனை, ஆதலின், உன் ஏவலால் மேகம் மழையைப் பெய்யாது, உத்தமப் பத்தினிப்பெண்டிரைப்போலப் பிறருடைய மனத்தைச் சுடுந்தன்மையும் உனக்கு இல்லாதுபோயிற்று. மேற்கூறிய வேற்றுச் செய்கைகளை விடுவாயாயின் மேகம் உனது மொழிவழிப்பட்டு ஒழுகாநிற்கும். மனம் போனவாறே யொழுகும் பெண்டிரைக் கட்டுவதுபோல உன்னை என் பாசம் கட்டல் செய்யாது. குற்றஞ் செய்தோரை ஏழு தினங்களுக்குள் தண்டித்தல் அரசனுடைய முறைமை; அவன் அக்காலவரையறைக்குள் அதனைச் செய்யா தொழியின் அப்பால் தண்டிப்பது எனதுடைய முறைமையாகும், இவ்வேழுதினத்திற்குள்ளேதானே இச்செய்தியைக் கேட்டுக் கந்தன் உன்னை விரும்பிய சிறுதொழிலாளனை வெட்டிவிடுவான்' என்று எடுத்துரைத்தது அப்பூதம் உரைத்த ஏழுநாளைக்குள்ளே அச்சிறு தொழிலாளன் தாதையின் வாளால் தடியப்பட்டனன். மன்னவரேறே! இன்னும் கேட்பாயாக:

"இந்நகரில் முன்பிருந்த பேரழகையுடைய தருமதத்த னென்னும் வாணிகனும் அவன் மாமன் மகளாகிய விசாகையென் பவளும் ஒருவர் பால் ஒருவர் மிக்க அன்பு பாராட்டி உரையாடிக் கொண்டிருந்தமை பற்றி, 'இவர் காந்தருவ மணத்திற்கு உரியவரா யினார்' என்று ஊரிலுள்ளாரெல்லாரும் பழி கூறுவாராயினார் அது பொறாத விசாகையானவள் சென்று உலகவறவியிலேறி, 'கந்திற்பாவாய்! இப்பழியை ஒழிப்பாய்' என்று முறையிட் டாள், உடனே அத்தெய்வம், 'நகருள்ளீர்! இவள் யாதொரு குற்றமும் இல்லாதவள்' என்று தனது தெய்வ வாக்கால் அவளை

உயர்த்திக்கூறியது, அதுகேட்டு ஊரார் அவளை வியந்து புகழ்ந்தார்கள். விசாகை, 'இத்தெய்வம் தெளிவியாதாயின், இவ்வூராருக்கு என்பாலுண்டாகிய ஐயம் நீங்காது; மறுபிறப்பிலேதான் மைத்துனனுக்கு மனைவியாவேன், இப்பிறப்பில் இவனை மணத்தல் செய்யேன்' என்று தன்னுடைய நற்றாய்க்குச் சொல்லிவிட்டுக் கன்னிமாடம் புகுந்து தவஞ்செய்து கொண்டிருந்தாள். அப்பால், தருமதத்தன் தன்பழியைப் போக்கிய கந்திற்பாவையைத் துதித்துக் காவிரிப்பூம்பட்டினத்தைநீக்கக் கடந்து தென் மதுரையையடைந்து, 'விசாகையையன்றி வேறு மகளிரை யான் விரும்பேன்; இப்பிறப்பு இங்ஙனம் ஒழிவதாக' என்று எடுத்துக்கூறி விரதம் பூண்டவனாகி வாணிகஞ்செய்து அறவழியே பொருளீட்டிப் பெருஞ்செல்வமுற்று அரசனால் எட்டிப்பூப்பெற்று மிக்க சிறப்பையடைந்து அறுபது பிராயம் வரையும் அந்நகரில் தங்குவானாயினன். அப்பொழுது அவனிடத்தில் ஓரந்தணன் சென்று, 'நீ விவாகமின்றி இந்நகரத்தே இருந்து என்ன காரியஞ் செய்தனை? மனைவியில்லாதவர்கள் எவ்வளவு தருமஞ் செய்வாராயினும் தெய்வலோக மடையாரென்பதை நீ கேட்டறிந்திலையோ? இனித் தாழ்த்தலின்றி உன் நகரஞ் செல்வாயாக' என்று கூறலும், தருமதத்தன் அந்நகரைவிட்டு நீங்கிவந்து இந்நகரத்திற் புகுந்தான். அவன் வந்தது கேட்ட விசாகை சிறிதும் நாணமின்றிக் கன்னிமாடத்திலிருந்து புறத்தேவந்து அவனையடைந்து, 'இப்பொழுது நம்முள் ஒருவரையொருவர் நாம் அறிந்திலேம், முன்பு நம்மை மயக்கிய அழகுகள் எங்கே ஒளித்துச் சென்றன? உனக்கு அறுபது பிராயம் ஆயின; எனக்கும் கூந்தல் நரைத்தது; முன்பிருந்த இளமையும் காமமும் எங்கே ஒளித்துப்போயின, உரைப்பாயாக இப்பிறப்பில் யான் நின்னடியை அடையேன், மறுமையில் நின்னை மணப்பது திண்ணம்.

இளமையு நில்லா யாக்கையு நில்லா
வளவிய வானபெருஞ் செல்வமு நில்லா
புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்
மிக்க வறமே விழுத்துணை யாவது (கூ-அ),

ஆதலால், தானஞ்செய்க' என்று சொல்ல, அவன் தான் ஈட்டிய பொருள்களையெல்லாம் விசாகைக்குக் காட்டி அப்பொருள்களைக் கொண்டு அவளோடு செய்த நல்லறங்கள் மிகப்பல. இதுநிற்க;

முன் இந்த விசாகை கற்றிறபாவைத தெயவததாற் பழி நீஙகிப பலா நடுவே வீதியில வருகையில, முன்பு மருதியால மடிநதவனு டையமூத்தோன, அவவிசாகையைககணடு அதிகமோகஙகொண்டு, தான் தலையிலணிந்த மாலையை வாஙகி அவள கழுத்தில இடுதற குத துணிநது அமமாலையை எடுததறகாகத தன் கையைக குடுமி யிற் செலுததத அககை அதனைவிட்டு நீஙகாததாயிற்று ஆகவே, 'விசாகையின் ஒழுகக விசேடததால அவன கை கீழே இழிந திலது' என்று பலா கூறககேட்ட ககநதன மிகுநத கோபங கொணடு தன மகனென்று பாராமல் உடனே அவனை வெட்டி வீழததினன" என்று கூறினாகள.

கேட்ட அரசன், "இனறு மட்டுமன்று என்று தொடஙகிய பலவறறையும கூறினீா, முன்பு நிகழ்நததாகக கூறிய அதநீா வொழுககம இந்நாளிலும உளதோ? இயமபுமின" எனறு கேட்ப, அமமுனிவாகளுள் ஒருவா,

"முடிபொரு ளுணாநதோா முதுநீ ருலகில
கடியப பட்டன வைநதுள வவறறில
களளும பொயயுங களவுங கொலையும
தளளா தாகுங காமந தமபால
ஆஙகது கடிநதோ ரலலவை கடிநதோரென
நீஙகின ரனறே நிறைதவ மாககள
நீஙகா ரனறே நீணில வேநதே
தாஙகா நரகந தனனிடை யுழபபோா (கசுகூ - எ௬)

தன் கணவனாகிய கோவலன கொலையுண்டது பொறுமல மாதவி உலகவாழவை வெறுததுப முனிவாகளுடைய தவசசாலையை அடைநதாள. அவள் பெறற மணிமேகலை யென்பவள இளம பருவததே தானே தவஞசெயயத துணிநது சிற்றிலும பேரிலுஞ சென்று ஐயமேறறு அருநதி ஊரமபலமடைநதாள். அவள அவ வியலபினளாகவும, அவளை விழைநது நிழலபோல விட்டுநீஙகாமற காமபரவசனாய நளளிருளில உதயகுமரன அவவமபலததை அடைநதான அது தெரிநத மணிமேகலை, அவன் தனனை நலியாதிருகக வேணடிக காயசண்டிகை வடிவம பூண்டாள காயசணடிகையை அழைத்துச் செலலுதறகு வநது அஙகே முனனமிருநத அவள கணவனாகிய விததியாதரன கண்டு, அவள் மணிமேகலை யென்பதை யறியாமல, அவளைத தன மனைவி யாகிய காயசண்டிகை யென்றும, அங்கே வநத உதய குமர

னைத் தன் மனைவியை விரும்பி வந்தவனென்றும், தானே தன்னுள் நிச்சயித்துக்கொண்டு முறுகிய கோபமுற்று உடனே அவனை வாளால் வெட்டி வீழ்த்தினன்" என்று சொன்னார் அதுகேட்ட அரசன் தன்மகன் இறந்ததற்குச் சிறிதும் வருந்தாமற் சோழிகவேனுதியைப் பார்த்து, "உதயகுமரனுக்கு யான் செய்யவேண்டிய தண்டனையைத் தான் செய்தமையால் விததியாதரன் தகவிலனுவான;

மாதவா நோன்பு மடவார் கற்பும்
காவலன் காவ லின்றெனி னின்றால் (உ0அ-க),

தன் மகனைப் பூமியிலே கிடத்தி அவன் மீதுதேர்க்காலைச் செலுத்தி முறைசெய்த அரசர்பிரானுடைய பரம்பரையில் ஒரு தீவினையாளன் பிறந்தானென்பதை மற்றை அரசர்கள் கேட்கு முன்னம் அவனைப் புறங்காட்டிடைவித்து, கணிகைமகளாகிய மணிமேகலையையும் சிறைப்படுத்துக" என்றனன், சோழிகவேனுதி அவ்வாறு செய்தான

## உ௯.—சிறைவிடுகாதை

பின்பு, அரசன் கட்டளையால் வாசந்தவையென்னும் முதியவளொருத்தி, புத்திரசோகத்தாற் கலங்கி வருந்தும் இராசமாதேவியை விரைந்தடைந்து தொழுது முன்னின்று வாழ்த்தி அவளுடைய வருத்தம் நீங்கும்வண்ணம் பல கட்டுரைகள் கூறி ஒருவாறு ஆற்றுவித்துப் போயினள் அவள் போனபின், இராசமாதேவி தனனுடைய வருத்தம் புறத்தே தோன்றுதவண்ணம் அடக்கிக்கொண்டவளாய், 'மணிமேகலையை வஞ்சித்து வருத்துவேன்" என்று எண்ணி அரசனைச் சார்ந்து, "செங்கோல் வேந்தே! மணிமேகலையின் பிக்குணிக் கோலத்தைக்கண்டு தன்னறிவு வேறுபட்ட உதயகுமரன் அரசாட்சிக்கு உரியவனல்லன், அவன் அக்கொடுந்தொழிலால் இறந்தது தக்கதே, தனது இளமையைப் பயனற்றதாகச் செய்த பேரறிவுடையவளாகிய மணிமேகலைக்குச் சிறை தகுதியன்று" என்றாள் அரசன், "உனக்குத்து அப்படியாயின் அவளைச் சிறையினின்றும் விடுவி" என்று கூறினன். கேட்ட இராசமாதேவி சிறையினின்றும் விடுவித்து அவளை அழைத்துக்கொண்டு அரண்மனையுட்சென்று, "இவ்வூரிலுள்ளாரெல்லாரும் அடித்து வரும்படி இவளைப் பித்துடையவளாகச் செய்வேன்"

என்றெண்ணி மயக்கும் மருந்தை அவளுக்கு ஊட்டினள். அவள் மறு பிறப்புணர்ந்தவளாதலால் சிறிதும் அறிவு வேறுபடாதிருந் தாள் அப்பால் இராசமாதேவி அறிவிலியாகிய ஓரிளைஞனை அழைத்து, "இவளுடம்பை எப்படியேனும் வேறுபடுத்தி, 'மணி மேகலை என்னை விரும்பினள்' என்று பலர்க்கும் சொல்வாயாக" என்று சொல்லிப் பொற்காசுகள் பலவற்றைக் கைநிறைய அவனுக் குக் கொடுப்ப, அவன் அத்தீச்செயற்கு உடம்பட்டு மணிமேகலை இருந்த இடத்தை அடைந்தான். அடைதலும் அவள், "இவன் வந்தது இராசமாதேவியின் வஞ்சனையால்" என்று நிச்சயித்து வேற்றுருவெய்துவிக்கும் மந்திரத்தை ஜபித்து ஆண்வேடம்பூண்டு அங்கேயிருந்தாள் அங்ஙனமிருந்ததனைக் கண்ட அறிவிலி நடு நடுங்கி, "அரசருடைய அந்தப்புரத்தில் ஆடவர் அணுகார்; இராச மாதேவியின் தீய நினைப்பை யான் அறிந்திலேன்" என்று பயந்து அவ்விடத்தைவிட்டு விரைந்து புறத்தே ஓடிப்போயினன். அதன் பின் இராசமாதேவி, "நம் அருமைப் புதல்வனை மயக்கி மாளச் செய்த இவளை இனி உயிரோடு வையேன்" என்று சினந்து, "நோய்மிகுதியால் இவளுக்கு உணவு செல்லவில்லை" என்று அவள் பாற் பொய்ந்நோயொன்றைக் காட்டி அவளைப் புழுக்கறையில் அடைப்ப, அவள் ஊணொழி மந்திரமுடையளாதலின் அம்மந்தி ரத்தை ஜபித்துச் சிறிதும் வாட்டமின்றி அவ்வறையிலேயே இருந் தாள் அதனைக்கண்ட இராசமாதேவி ஆச்சரியமுற்று நடுநடுங்கி அவளைநோக்கி, "மகனை யிழந்த பெருந்துன்பம் பொறுக்கலாற் றாது இத்தீங்குகளைச் செய்தேன், நீ இவற்றைப் பொறுத்தருள் வேண்டும்" என்று பலவாறு வேண்டினள். வேண்டவே மணிமே கலை, "சென்றபிறப்பில் நீலபதியின் வயிற்றிற் றோன்றிய இராகுல னைத் திட்டிவிடமென்னும் பாம்பு உயிருண்டபொழுது, அதனைப் பொறேனாகித் தீப்பாய்ந்து என்னுடைய உயிரை விட்ட நாளில்,

யாங்கிருந் தழுதனை யிளங்கோன் றனக்குப்
பூங்கொடி நல்லாய் பொருந்தாது செய்தனை
உடற்கழு தனையோ வுயிர்க்கழு தனையோ
உடற்கழு தனையே லுன்மகன் றன்னை
எடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
உயிர்க்கழு தனையே லுயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரிய

தவவுயிர்க் கன்பினை யாயி ழைய்தொடி
எவ்வுயிர்க காயினு மிரங்கல் வேண்டும் (எக - கூ).

உன்மகனை விசதியாதரனொருவன் வெட்டிவீழ்த்தியதற்குக் காரண மான தீவினையை இன்னதென்று கூறுவேன், கேட்பாயாக: அது முற்பிறப்பில மடைக்கலஞ்சிதைய வீழ்ந்த மடைத்தொழிலாளனை வெட்டி வீழ்த்தியதாலுண்டாகிய தீவினையே, அத்தீவினை அப்பிறப் பிலேயே நஞ்சுவிழியரவால அவனுடைய நல்லுயிரை வாங்கி இப் பிறபபிலும விஞ்சையன்வாளால் வெட்டுண்ணச்செய்தது. 'இச் செய்திகளை யெல்லாம நீ எப்படி அறிந்தாயோ?' என்பையாயின் நடந்தது இவவாறாகும" என்று தான் உவவனஞ் சென்றது முத லிய எல்லாவற்றையும, அவளுக்கு விளங்கக்கூறிப பின்னும் கூறு வாளாயினள்: "நீ மருந்தால எனக்குப பித்தேறறினை; யான் மறுபிறப்புணர்ந்தேனாதலின் சிறிதும அறிவுபிறழாதிருந்தேன்; உன ஏவலால கல்லாக்கயவன என்பாலவர வேற்றுரு வெய்துவிக் கும மந்திரவலியால் ஆணுருக்கொண்டிருந்தேன்; யாதொரு நோயுமில்லாத என்னைப பொய்ந நோய்காட்டிப் புழுக்கறையில் அடைபபித்தாய், ஊணொழி மந்திரமுடைமையினாலேயே அத் துன்பத்தினின்றும தப்பினேன் நீ சென்ற பிறப்பில எனக்குக் கணவனாயிருந்த இராகுலனுக்கு இப்பிறப்பில ஈன்றதாயாதலின் உனது துக்கத்தைத்தகளைந்து தீவினையைப்போக்கி உன்னை நலவ ழிப்படுத்தற பொருட்டே ஆகாயவழியே செலலுதலையும் வேற்று ருக கொள்ளுதலையும யான் நினைந்திலேன்; இதுநிற்க; இவவுல கத்துள்ளோர்க்குத் துன்பம தருவன யாவையெனின், காமம, கொலை, கள், பொய கள்வென்னும ஐந்துமாம. இவற்றைத் துறந்தோரே சீல முடையோராவா

செற்றஞ் செறுத்தோர் முற்ற வுணர்ந்தோர்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரென்போர்
அல்லன மாக்கட் கில்லது நிரப்புநர்
திருந்தே ரெல்வளை செல்லுல கறிந்தோர்
வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தோர்
துன்ப மறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்
மன்பதைக் கெல்லா மன்பொழி யார்" என
ஞான நன்னீர் நன்கனந் தெளித்துத்
தேனு ரோதி செவிமுதல வார்த்து
மகனறுயர் நெருப்பா மனமவிழ் காக
அகஞ்சுடு வெந்தீ யாயிழை யவிப்ப (கடு௧ - சக),

இராசமாதேவி மனந்தெளிந்து மணிமேகலையை வணங்கினள்; மணிமேகலை அதனைப்பொருளாகி, 'நீ என் கணவனைப்பெற்று தாயாக இருத்தலன்றி அரசனுடைய மாபெருந்தேவியாகவுமுள்ளாய, ஆதலால் என்னை வணங்குதல் தகுதியன்று" என்று கூறி அவளைத் தானும் அன்புடன் வணங்கினாள்.

## உச.—ஆபுத்திரனுடைந்தகாதை

மணிமேகலையை விரும்பிச்சென்ற உதயகுமரன் விஞ்சையனுடைய வாட்படையால் உலகவறவியில் வெட்டுண்டு இறந்ததையும் மணிமேகலை சிறையில் வைக்கப்பட்டிருத்தலையுங் கேட்டு வருந்தி நடுங்கி அவளைச்சிறையினின்றும் நீக்கநினைந்த சித்திராபதி இராசமாதேவிபாற் சென்று வணங்கி, "மாபெருந்தேவி! கோவலனிறந்தானென்று மாதவி தனது பரத்தைத்தொழிலை நீத்துத் தவச்சாலையையடைந்ததும், அவள்மகளாகிய அரங்ககூத்தி பாத்திரமேந்தி வீடுதோறுஞ் சென்றுசென்று பிச்சையேற்றதும் யாவரும் அவமதித்துச் சிரித்தற்கு இடமாயினவேயன்றி வேறல்ல, இதுநிற்க, உதயகுமரனிறந்ததன்றி, மணிமேகலையால் இனி இந்நகரத்திற்கு உண்டாகும் பெருந்துன்பமுமொன்றுண்டு, கேட்பாயாக

"முன்னொருநாள் அரசன், இந்நகரிற் கடற்கரையைச் சார்ந்த புன்னைமரச்சோலையில் பேரழகினளாகிய ஒரு மங்கையைக்கண்டு விரும்பி அவளோடும் ஒருமாதம் அச்சோலையில் உறைவானாயினன், அம்மங்கை அவனிடஞ் சொல்லாது தன்னிடஞ் சென்றாள், செல்லவே அரசன் இளங்கொடி யாங்கொளித்தனளோ என்று பலவிடத்தும் தேடிக்கொண்டிருந்தபொழுது, அற்புத சக்தியையுடைய ஒரு சாரணனவர, அரசன் கண்டு அவனை வணங்கி முன்னின்று, 'என் உயிர்போல்பவளாகிய ஒருத்தி இங்கே ஒளித்தனள், அவளை அடிகள் கண்டதுண்டோ? உண்டாயின் சொல்லுக' என்றுகேட்ப அந்தச்சாரணன், 'அரச! அம்மடந்தையை யான் இப்பொழுது கண்டிலேனாயினும் முன்பு அறிந்துளேன், கேட்பாயாக: அவள் நாகநாட்டரசனாகிய வளைவணனென்பவனுடைய தேவியான வாசமயிலையென்பவளின் வயிற்றில் தோன்றிய பீலிவளையென்பாள்; அவள்பிறந்தநாளிற் சோதிடங்கூற வந்த கணி, 'இவள் சூரியகுலத்தரசனொருவனைச் சேர்ந்து கரு

வற்று வருவாள்' என்று அரசனுக்குக் கூறினன், இது முன்பு நடந்தது, அவளே நீ கூறியமடந்தை, இனி, அவள் வயிற்றில் தோன்றும் மகனே வருவான், அவள் வாராள், நீ கவலாதிருக்கக் கடவை. இன்னும் ஒன்று கேட்பாயாக இந்திரவிழாச் செய்யாத நாளில் மணிமேகலா தெய்வத்தின் சொல்லால் உன் நகரத்தைக் கடல்கொள்ளும், இந்திர சாபமும் இருத்தலால் அது தப்பாது; ஆதலால், யான் கூறியதை உண்மையென்றே நினைந்து இந்நகரைக் கடல் கொள்ளாதபடி இந்திரவிழாவை வருடந்தோறும் மறவாது செய்துவருக' என்று சொல்லிவிட்டுப் போயினன், அவன்போன அந்நாள் தொடங்கி, நகரத்திற்கு எப்போது கேடு வந்துவிடுமோவென்று இந்நகரத்தாரெல்லாரும் நடுங்கிக்கொண்டே இருக்கின்றனர் தன்னுடைய பெயரைப் பெற்றமடந்தை துன்பமுறுவாளாயின் அதனைப் பரிகரித்தற்கு மணிமேகலாதெய்வம் வருதலுண்டாகுமோவென்று யானும் அஞ்சா நின்றேன்" என்று சொல்லித் துதித்து, "நல்லமனமுண்டாகப்பெற்ற நாடகக் கணிகையை என்மனைக்குப் போதரும்படி கட்டளையிடுவாய்" என்று கேட்ப இராசமாதேவி,

"கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையும்
உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை (௭௭ - ௮)

ஆகும், அவற்றையே கைக்கொண்ட உனது பரத்தைமைத் தொழிலை அசுத்தவழியென்றெண்ணி வந்த இவள் உன்னுடன் வந்து உன் மனையிற் புகுந்தாள்; என்னோடுதானே இருத்தற்குரியள்" என்று சொல்லிக்கொண்டிருக்கையில், மணிமேகலையின் நிலைமையைக்கேட்ட மாதவி அதனைச் சுதமதிக்குக்கூறி வருந்திச்சென்று அறவணவடிகளை வணங்கி அறிவித்து அவரை முன்னிட்டுக் கொண்டு அவளைச் சிறைமீட்டற்பொருட்டு இராசமாதேவியிடம் வர, இராசமாதேவி அவரைக்கண்டவுடன் மற்றை இருவரோடு மெழுந்து எதிர்சென்று அவரடியை வணங்கினள், அவர், "அறிவுண்டாக" என்று ஆசிகூறினர், அப்பால் அவள் அவரைச் சிறந்த ஓராதனத்தில் இருத்தி அடிவிளக்கிச் சிறப்புச் செய்து, "எமது நல்வினையே மிகப் பெரியோராகிய உம்மை இங்கே எழுந்தருளச் செய்தது;

நாத்தொலை வில்லை யாயினுந் தளர்ந்து
மூத்து விளிவ யாக்கை வாழ்கபல் லாண்டு" (௯௯ - ௧௦௦)

என்றுகூற அவர், "யான இந்த உடம்பிற் பொருந்தியிருந்தும அத்தமிக்குஞ் சூரியனைப போன்றேன் ;

பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றார்
இறந்தா ரெனவை யியல்பே யிதுகேள ' (கO௫ - ௬)

என்று பன்னிரு நிதானங்களையும் அவளுக்கு உபதேசித்து, " எப பொழுதும நலலறத்தையே பேணிக்கேட்டு அவ்வாறே யொழுகுக" என்று சொலலிப் பின மணிமேகலையை நோக்கி, " மற்றைச சமயதருமங்களையெல்லாம நீ கேட்டபின்பு இவற்றையும இவற றின் பகுதிகளையும உனக்கு விளஙக உணாத்துவேன்" என்று கூறித தம்மிடஞ் செலலுதற்கு எழுதலும, மணிமேகலை எழுந்து அவரை வணஙகிப பின்பு இராசமாதேவி முதலியோரை நோக்கி, " அறவணவடிகள கூறிய உபதேசமொழிகளை மறவன மின், அவா கூறியவாறே ஒழுகுமின் , யான் இந்நகரில இருப்பேனா யின, ' உதயகுமரனுக்கு இவள் கூற்றாயிருந்தாள' என்று யாவரும கூறுவா , ஆதலால இஙகிரேன் , இனி, ஆபுத்திரனுடைந்த பின்பு மணிபல்லவஞ் சார்ந்து புத்தபீடிகையைத் தரிசித்துவிட்டு, அபபால வஞ்சிநகரஞ் சென்று பததினிக கடவுளைத் தரிசித்தபின் எங்குமபோய நலலறஞ் செய்துகொண்டு ஒழுகாநிறபேன் ; எனக்கு இடருளதாகுமோவென்று நீா சிறிதும கவலறக" என்று சொலலி அவாகளையும வணஙகி, சூரியாஸதமயத்திறகுப பின் அந்திமாலைபபொழுதிலே சென்று, உலகவறவியையும சமபாபதியையும கந்திறபாவையையும வலஙகொணடு துதிதது ஆகாய வழியே பறந்துசென்று, இந்திரனுடைய வழிததோன்றலாகிய புணணியராசனது நகாப்புறததேயுள்ள சோலைககுள்ளேயிறஙகி அயாவுயிர்தது, ஆஙகுள்ள ஒருமுனிவனை வணஙகி, " இந்நகரின பெயா யாது? இதனையாளுப அரசன் யார்?" என்று கேட்டாள் ; அம்முனிவன், " இதனபெயா நாகபுரமென்பது ;இதனையாளபவன் பூமிசந்திரன் மகனாகிய புண்ணியராசனென்பான் ; இவன் பிறந்த காலந் தொடஙகி இந்நாட்டில் மழை பிழைத்ததில்லை ; பூமியும மரஙகளும் பிறவும பலவளஙகளையும் மிகத் தாராநிற்கும ; உயிா களுக்கு ஒருவகையான நோயுமில்லை " என்று அரசனுடைய பெருமையை அவளுக்குக் கூறினன்

## உரு.—ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதை

அப்பொழுது புண்ணியராசன், தன்பெருந்தேவியோடு அச்சோலையிற் புகுந்து ஆங்குள்ள தருமசாவகனென்னும் முனிவனை வணங்கி,

> அறனு மறனு மநித்தமு நித்தத
> திறனுந் துக்கமுஞ் செல்லுயிர் புகலிலும்
> சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியும்
> ஆரிய னமைதியு மமைவுறக் கேட்டு (ரு-சு),

பின்பு, "இவள் ஒப்பற்ற பேரழகினள்" கையிற் பிச்சைப் பாத்திரமொன்றை உடையவளாய்த் தருமங்கேட்கிறாள், யார்?" என்று வினாவுகையில், அருகேநின்ற சட்டையிட்ட பிரதானி அரசனை வணங்கி, "இவளை யொப்பவர்யாருமில்லை. முனனொருகாலத்தில் கிள்ளிவளவனோடு நட்புக்கொள்ளுதலை விரும்பிக் காவிரிப்பூம்பட்டினத்திற்குச் சென்றபொழுது, அங்கேயுள்ள அறவணவடிகள் இவள் வரலாறுகளையெல்லாம் கூறினாரென்று முன்னமே நான் உரைத்ததுண்டு, அம்மடந்தையே இவள்" என்று கூறினன். கூறலும், மணிமேகலை அரசனைப் பார்த்து, "உன் கையிலிருந்த பாத்திரமே என்கையை அடைந்தது; செல்வத்தால் மயங்கினை போலும்! நீ முற்பிறப்பை அறிந்திலை யானும் பசுவின் வயிற்றிற் பிறந்த இந்தப் பிறப்பை யேனும் அறிந்திலையே, என்செய்தனை! மணிபல்லவஞ் சென்று புத்தபீடிகையைத் தரிசித்தாலன்றி உனது பழம்பிறப்பின் செய்தியையறியாய், ஆதலால், அரச! அங்கே வருவாயாக" என்று சொல்லிவிட்டு, எழுந்து ஆகாய வழியே சென்று சூரியாஸ்தமயத்திற்கு முன்னமே மணிபல்லவத்திலிறங்கி வலங்கொண்டு புத்தபீடிகையைத் தரிசித்தாள். அது பழம்பிறப்பை அவளுக்குத் தெரிவித்தது அதனை யறிந்து வியந்து அவள் அங்கேயிருக்க, புண்ணியராசன் அச்சோலையை நீங்கி நகரிற் புகுந்து, தன்னைவளர்த்த தாயாகிய அமரசுந்தரியைக் கண்டு வினவித் தன்வரலாறு முழுவதையும் அவள் கூறக் கேட்டு வருந்தி அரசாட்சியில் வெறுப்புற்றுத் துறத்தற்குத் துணிந்து தன் கருத்தை வெளியிட்டான், அதனைக்கேட்ட சனமித்திரனென்னும் மந்திரி அவனை வணங்கி,

> "எங்கோ வாழி யெனச்சொற் கேண்மதி (கக),

உன்னை அரசன் பெறுவதன்முன் இந்நாட்டில் பன்னிரண்டு வருடம் மழையில்லாமற்போயிற்று, வறுமைமிகுந்தது, அதனால் எல்லா வுயிர்களும் வருந்தின; அக்காலத்தில் நீ தோன்றினை; தோன்றிய பின் இந்நாட்டில் எல்லா வளங்களும் நிரம்பின, உயிர்கள் துயரம் நீங்கி வாழ்வனவாயின, நீ நீங்குவாயாயின் எல்லா உயிர்களும் தாயைப்பிரிந்த குழந்தைகளைப்போலக் கூவாநிற்கும்; இந்த நிலைமையையுடைய உலகத்தைக் காவாமல் உனதுபயனையே விரும்பிச் செல்லுதல் தகுதியன்று;

> தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பும்
> மன்னுயிர் முதல்வ னறமுமீ தன்றால்" (கககூ - எ)

என்றுகூற, அரசன் கேட்டு, "மணிபல்லவத்தை வலங்கொள்ள வேண்டுமென்று எனக்குண்டாகிய வரம்புகடந்த ஆசை தணிதற்கு அரியது; ஆதலால், அங்கே போய்வருவேன்; ஒருமாத காலம் இந்நகரைப் பாதுகாத்தல் உனது கடன்" என்று கூறிப் புறப்பட்டு வழிக்கொண்டு கடற்கரையைச் சார்ந்து நாவாயேறி மணிபல்லவத்தை யடைந்தான்; உடனே மணிமேகலை வந்து அழைத்துச்சென்று அவனோடு அத்தீவை வலம்வந்து, "பழம் பிறப்பை யுணர்விக்கும் தருமபீடிகைஇது" என்று காட்ட, அரசன் அதைத் தரிசித்து வலங்கொண்டு துதித்தான்; துதிக்கவே அப்பீடிகை பழம்பிறப்பின் செய்தியை அவனுக்கு விளங்கத் தெரிவித்தது அதனை யறிந்து வியப்புற்று, தனக்குப் பழம்பிறப்பில் அமுதசுரபியென்னும் அக்ஷயபாத்திரத்தை யளித்த சிந்தாதேவியை நினைந்து, "தென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்! அறிவிலே விளங்கிச் சொற்பொருள்களை உணர்த்தும் மடந்தையே! நான் பிறந்த பிறவிகள் தோறும் நின்னை வழிபடுதலல்லது மறந்து வாழேன்" என்று துதித்து மணிமேகலையோடுமெழுந்து தென்மேற்கிற்சென்று கோமுகிக்கரையில் ஒரு புன்னைமரத்தின் நிழலிலே இருந்தான்; இருக்கையில், ஆபுத்திரனோடு மணிமேகலை வந்திருத்தலைத் தீவதிலகை அறிந்துவந்து, "அமுதசுரபியைக் கையிலேந்தி உயிர்களின் பெருந்துயரத்தைத் தீர்த்த பெரியோனே! அக்காலத்தில் மறந்து உன்னை இத்தீவில் தனியே விட்டுவிட்டுக் கப்பலேறிச்சென்று பின்பு உன்னை நினைந்து மீண்டுவந்து இங்கே நீ இறந்திருத்தலை யறிந்து உடனே தம்முயிரை நீத்த ஒன்பது செட்டிகளின் உடலென்புகள் இவை; காண்பாயாக.

அசசெட்டிகளை உணபிகக உண்டு உடன வநதோர்கள் அவர்களை இறநதது தெரிநது தாஙகளுடம இறநதாாகள் ; அவாகளுடைய எனடிகள இவைகளகாண். அவைகளை தொகுத்த மணலால மூடப படடிப புன்னை நிழலினகீழே உனது பணடையுடமபு இருநத தைப பாாபபாயாக.

நினனுயிா கொனருய நினனுயிாக கிரஙகிய
பினனுள வநத பிறருயிா கொனருய
கொலைவ னலலையோ கொறறவ னுயினை" (எஎஉ - ச)

என்று அரசனை நோக்கிககூறி, பின்பு மணிமேகலையைபபாாததது, " காவிரிபபூமபட்டினததைக கடல கொணடது ; அதறகுக காா ணங கேடபாயாக. நாகநாடடரசன் மகளாகிய பீலிவளையென்ப வள் தான்பெறற குழநதையுடனவநது இததீவையும புததபீடிகை யையும வலம வநது துதிககும்பொழுது, கமபளச்செட்டியின கப பல வநது தஙக, பீலிவளை அவனிடஞ் சென்று, 'இவன அரசன புதலவன் , இவனை அவனிடஞ் சோபபாயாக ' என்று சொலலி, குழநதையை அவன கையிற கொடுகக அவன பெருமகிழசசியடை நது வாஙகிக கபபலேறிசசெலலுகையில், கபபல உடைநது போ யிறறு. போகவே கபபலிலிருநதோரிற சிலா மெலலப பிழைத துசசென்று காவிரிபபூமபடடினததை அடைநது புதலவனைக கொடுதத செயதியை அரசனுககுத தெரிவிததாா. அதுகேட்டு அவன பொருமற செயலறறுக கடறகரையையடைநது மகனைத தேடிககொணடு அலைநதமையால, நகரம இநதிரனுககு விழாச செயதலை விட்டொழிநதது. ஒழியவே, அதனைப பொறுககாமல மணிமேகலாதெயவம, 'இநநகரைக கடலகொளளுக ' என்று சபிக கக கடல நகரை முடியது , மூடவே அரசன வேறிடஞ் சென்ருன். அறவணவடிகளோடு மாதவியும சுதமதியும யாதொரு வருததமு மின்றியபோய வஞசிநகரம புகுநதாள" என்று சொலலிபபோயி னள , அவளபோன பினபு புணணியராசன அவவிடததே மணலைத தோணடி, அஙகேதோன்றிய தனனுடைய பழைய உடமபின என பைககண்டு மயககமுறறுன. அதைககண்ட மணிமேகலை, " நீ என்ன துன்பமுறறுய ? யான நின் நாடடிறகு வநது நினனை ஈஙகு அழைததது வநதது நினககு முறபிறபபையுணாததி எஙகும நின்புகழை நிலைநிறுததற பொருட்டேயாகும. உலகததை யாளும் அரசா தாமே அருளறததை மேறகொண்டால உலகிற

குற்றமெல்லாம் அற்றுவிடுமன்றோ? அறமெனப்படுவது யாதெனிற் சொல்லுவேன்; கேட்பாயாக: உயிர்களுக்கு உணவையும் உடையையும் இருக்கையையும் வழங்குவதே; இதனையன்றி வேறு இல்லை" என்று சொல்லித் தேற்றினாள். அதனைக் கேட்ட அவன், "என்னுடைய நாட்டிலும் பிறருடைய நாட்டிலும் நின்றாற் சொல்லப்பட்ட நல்லறத்தைச் செய்வேன் நீ என்பிறப்பை உணர்த்தினை; நான் நின்னிடத்தினின்றும் பிரியும் வன்மையில்லேனாகி இருக்கிறேன்" என மணிமேகலை, "நீ வருந்தற்க. நீ இங்கு வந்துவிட்டதற்கு வருந்தி நின்நாடு நின்னை அழைக்கும், ஆதலிற் கப்பலேறி நீ நின் நாட்டிற்குச் செல்லுக நான் வஞ்சிநகரத்துக்குச் செல்வேன்" என்று கூறி ஆகாயத்திலெழுந்தாள்.

## உ௬.—வஞ்சிமாநகர்புக்ககாதை

எழுந்தவள், ஆகாயவழியே சென்று வஞ்சிநகர்ப்புறத்தே இறங்கி, தாய் கண்ணகியையும் தந்தை கோவலனையும் தரிசிக்க வேண்டுமென்கிற ஆசை தூண்டுதலாற் கோயிலிற்புகுந்து கண்ணகியை வணங்கித் துதித்து, "கணவனிறந்ததுதெரிந்து உடன் இறவாமலும் கைம்மைநோன்பை நோவாமலும் சினங்கொண்டு மதுரையை அழித்ததற்குக் காரணங்கூறியருளவேண்டும்" என்று பிரார்த்திக்கப் பத்தினிக்கடவுளாகிய கண்ணகி, "என்னுடைய தலைவனுக்குநேர்ந்த மரணத்துன்பத்தைப் பொறுக்க முடியாமையால் மதுரையை எரித்தழிக்கத் தொடங்கினேன்; அப்பொழுது மதுராபதியென்கிற அந்நகரத்தெய்வம் எனக்கு முன்னே தோன்றி, 'இத்துன்பத்தை நீங்களனுபவித்தல் முற்பிறப்பிற் செய்த தீவினையினாலேயே அதனைக் கூறுவேன்; கேட்பாயாக:

'முன்பு கலிங்கநாட்டிலுள்ள சிங்கபுரத்தரசனாகிய வசு என்பவனும் கபிலபுரத்தரசனாகிய குமரனென்பவனும் தம்முட் பகைமை கொண்டு போர்செய்வாராயினர்; அப்பொழுது மனைவியுடன் சிங்கபுரத்துக் கடைவீதியிற்சென்று பண்டம்விற்றுக்கொண்டிருந்த சங்கமனென்னும் வணிகன்பாற் பொறாமையுற்று, அந்நகரத்தரசனிடம் வேலைபார்த்துக்கொண்டிருக்கும் பரதனென்பவன், 'இவன் பகைவனுடைய ஒற்றன்' என்று அரசனுக்குச்சொல்ல, யாதொரு குற்றமுமில்லாத அச்சங்கமனை அவ்வரசனைக்கொண்டு கொலை செய்வித்தான். சங்கமன்மனைவி நீலியென்பவள் அதனைத் தெரி

ந்து ஏங்கி அழுது பெரிய மலைமீதேறி வீழ்ந்து உடம்பைத்துறக்க நிச்சயித்து, 'எமக்குத் துன்பஞ்செய்தோர் மறுபிறப்பில் இத்துன்பத்தையே அடைவார்களாக' என்று சபித்துவிட்டு இறந்தாள்; அப்பரதனே கோவலனாகப்பிறந்தான்; அவ்வினையால் இத்துன்பமடைந்தீர்கள், பழம்பிறப்பிற்செய்த வினையின்பயனை யாரும் நுகர்ந்தே ஒழித்தல்வேண்டும்' என்கிற உண்மைமொழியைக் கூறியது அத்தெய்வம் கூறியபின்னும் என்கோபம் அடங்காமையால், நகரத்தை எரித்தழித்தேன். முன்புசெய்த நல்வினையாலே நானும் என்கணவனும் தேவர்களாகிச் சென்றோம். இந்நல்வினையின் இறுதியிற் கோபத்தாலுண்டாகிய பாவப்பயனை நுகர்தல்கூடும். இப்படிப் பிறந்து பிறந்தும் புண்ணியத்தின் இறுதியிற் பாவப் பயனையும் பாவத்தின் இறுதியிற் புண்ணியப் பயனையும் நுகர்ந்து நுகர்ந்து உழலாநிற்போம். அப்பால் மகதநாட்டிற் கபிலயம் பதியிற் புத்த ஞாயிறு உதித்துப் போதிமரத்தினடியில் எழுந்தருளியிருந்து நால்வகைச் சத்தியங்களையும் அறிந்து பன்னிரண்டு சார்புகளின் தோற்றங்களையும் அவற்றின் அழிவையும் விளங்கக்கூறி இச்சக்கரவாளம் முழுவதும் தரும வொளியை வீசுங் காலத்தில், யாம் அவ்வுபதேச மொழிகளைக் கேட்டுத் துறந்து நிருவாணமடைவோம். இப்பயனை யாம் அடைதற்குக் காரணம், முன்பு காவிரிப்பூம்பட்டினத்திற் புத்தசைத்தியத்திலுள்ள இந்திர விகாரமேழினையும் உன் தந்தையுடன் ஏத்திய புண்ணியமே. யாம் நிருவாணத்தையடைவது பலநாளைக்குப் பின்பேயாயினும், அதுகாறும் பலவகையாகிய சித்திகளையும் செய்துகொண்டிருப்போம். இதுநிற்க; நீ இந்நகரிலுள்ள பல சமயவாதிகள் கூறும் கொள்கைகளையெல்லாங் கேட்டு அவற்றுள் ஒன்றும் உனக்கு உண்மையென்று தோன்றாமையால் பின்பு பௌத்த சமயத்தைப்பற்றியொழுகுவை'' என்று சொன்னாள்.

அவற்றைக்கேட்ட மணிமேகலை வணங்கி வேற்றுருவெய்துவிக்கும் மந்திரத்தை ஜபித்து ஒரு முனிவன் வேடங்கொண்டு,

தேவ குலமும் தெற்றியும் பள்ளியும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து
நற்றவ முனிவருங் கற்றடங் கினரும்
நன்னெறி காணிய தொன்னூற் புலவரும் (எஉ - கூ)

செய்திகளை நீ சந்திரபாவையாலறிந்தாயென்று அறவணவடிகளா லறிந்தேன். அம்முனிவர், உனக்குத் தருமோபதேசஞ் செய்தற்கு அமைந்தவிடம் காஞ்சிநகரமென்றெண்ணி இங்கிருந்து அங்கே சென்றார்; மாதவியும் சுதமதியும் அவருடன் அந்நகரம் போயினர். இன்னுங் கேட்பாயாக: மழையில்லாமையாற் காஞ்சிநகரத்தில் மிக்க வறுமையுண்டாயிற்று, பல்லுயிர்கள் இறந்தன; அந்நகரில் ஐயமிடு வோர் இல்லாமற் போனமையால் அங்கேயிருந்த முனிவர்கள் இவ் விடம் வந்துவிட்டார்கள், ஆதலால் அந்நகரமடைந்து எல்லாவுயி ர்களையும் பாதுகாத்தல் உனக்குக் கடனாகும்" என்றுசொன்னான்.

அதனைக் கேட்ட மணிமேகலை அவனை வணங்கி அமுதசுரபி யைக் கையிலேந்திக்கொண்டு வஞ்சிநகரத்தின் மேற்றிசையி னின்று மேலெழுந்து ஆகாயவழியே வடதிசைக்கட் சென்று, சிறந்த செல்வங்குன்றி வறுமையுற்று அழகுகெட்டுப் போயி ருக்கும் காஞ்சிநகரத்தைக் கண்டு மனமிரங்கி வலம்வந்து அந் நகரின் நடுவேயிறங்கித் தொடிக்கழற்கிள்ளியின் துணைவனாகிய இளங்கிள்ளியால் அங்கே கட்டுவிக்கப்பட்டுள்ள புத்தாலயத் தை வணங்கி அதற்குத் தென்மேற்கிற் சென்று ஒரு சோலையில் தங்கினாள். அச்செய்தியைத் தெரிந்த ஒருவன் விரைந்து சென்று அரசனை வணங்கி, "அரச! கோவலன் புதல்வி சிறந்த தவஞ்செய் தொழுகுபவள் இச்சம்புத்தீவில் எல்லாருள்ளும் சிறந்தவள் அவள் கையிலேந்திய அமுதசுரபியெனனும் பாத்திரத்தோடு இந் நகரில் வந்து தருமதவனத்தே உறைகின்றாள்" என்றான். அது கேட்ட அரசன் சந்திரபாவை முன்பு நமக்குக்கூறியது உண்மை யேயென்று மதித்து அதசெய்வதனை வாழ்த்தி மந்திரிகளுடன் விரைந்து சென்று மணிமேகலையையடைந்து அவளை நோக்கி,

"செங்கோல் கோடியோ செய்தவம் .

அலத்தற் காலை யாகிய தறியேன் (க அ அ - கக)

இனிச் செய்வது யாதென்று மயங்கிக் கொண்டிருந்தேன், இருந்தபொழுது ஒரு பெரிய தெய்வம் எனக்கு முன்னேவந்து, 'நீ வருந்தற்க; உனது நல்வினையால் ஒரு மடந்தை இங்கே தோன்று வாள்; அவளுடைய கையிலுள்ள தெய்வப் பாத்திரத்திலிருந்து எடுக்க எடுக்கக் குறையாமல் மேன்மேலும்வளருகிற உணவால் இவ் வுலகமெல்லாம் உய்யும், அவளுடைய கருணையால் மேகமும் மழை மிகப்பொழியும், அவள் இந்நகரத்திற்கு வந்த பின்பு உண்டாகும்

விசேடங்கள் பலவாம். சார்வறங்கூறினும் நீர்வறங்கூராது; அவளவந் திருத்தறாக்கக் கோமுகி யென்னும் பொய்கையும் அதனையுடைய மணிபல்லவ மென்னுந் தீவும் இருக்குவந்தன வென்று சொல்லும்படி, இந்திர விதியில் ஒரு பொய்கையையும் அதனைச்சூழ ஒரு சோலையையும் உண்டுபண்ணுக' என்று சொல்லிவிட்டுப் போயிற்று. அத் தெய்வம் போனபின்பு அது கட்டளையிட்டபடியே செய்துவைத்த இடம் இஃது" என்று சொல்லி அவ்விடத்தைக்காட்ட, மணிபல்லவமென்ற அச்சோலையையடைந்து அதனையும் பொய்கையையும் கண்டு மகிழ்ச்சியுற்ற மணிமேகலை, தனது பழம்பிறப்பை அறிவுறுத்திய புத்தபீடிகையை அச்சோலையில் இயற்றுவித்துத் தீவதிலகையையும் மணிமேகலா தெய்வத்தையும் வழிபடுதற்குரிய கோயிலையும் அங்கே உண்டாக்கி நித்திய பூசையையும் திருவிழாவையும் அரசனைக்கொண்டு செய்வித்துத் தான் வந்தித்துத் துதித்து மேற்கூறிய புத்தபீடிகையில் ஆருயிர்மருந்தெனும் அமுதசுரபியை வைத்து உண்ணுதற்கு எல்லாவுயிர்களும் வருக வென்று அழைத்தனள், அழைக்கவே,

மொய்த்த மூவறு பாடை மாக்களிற்
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி (௨௨௧-௭)

உண்ணவுண்ண அவ்வுணவு மேன்மேலும் பெருகிப் பசித்துன்பத்தை அகற்றி விளங்கியது. அப்புண்ணிய விசேடத்தால் எங்கும் மழை பெய்தது; வளங்கள் மிகுந்தன. அப்படி நிகழுங்காலத்தில் அறவணவடிகள் அந்நிகழ்ச்சிகளைக் கேட்டு மாதவியோடும் சுதமதியோடும் அறச்சாலையை அடைந்தனர். பின்பு மணிமேகலை விரைந்து சென்று அன்புடன் வணங்கி அவரடிகளை விளக்கி ஆதனத்திலிருத்தி அறுசுவை போனகம் அமுது செய்வித்து, "யான் செய்த புண்ணியம் தப்பாது பலித்திடுக" என்று சொல்லி மீட்டும் வணங்கினள்.

## ௨௯.—தவத்திறம்பூண்டுதருமங்கேட்டகாதை

வணங்கிய மணிமேகலையை வாழ்த்திச்சொல்லும் அறவணவடிகள், "பீலிவளை பெற்ற குழந்தையைக் கம்பளச்செட்டி கடலிற் கெடுத்தது தெரிந்த அரசன் வருத்தமுற்று அக்குழந்தையைத் தேடியலைந்தமையாற் காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழாச் செய்யப்படாது போயிற்று. மணிமேகலாதெய்வம் அது தெரிந்து

நகரைக் கடல்கொள்ளுக என்று சபித்தது, இந்திரனும் சபித்தான். அதனால் அந்நகரம் கடலால் விழுங்கப்பட்டது. அப்பால் உன் தாயாரும் யானுமாக உன்பொருட்டு இந்நகரம் அடைந்தோம்'' என்று கூறினர். கூறவே மணிமேகலை அவருடைய அடியிணையை வணங்கி, "மணிபல்லவத்திற் புத்தபீடிகையைக் காத்துக்கொண்டிருக்கும் தீவதிலகையெனபவளும் இச்செய்தியைச் செப்பினள். நான் வேற்றுருக்கொண்டு சென்று வஞ்சி நகரமடைந்து ஆங்குள்ள பலசமயவாதிகள் கூறிய கொள்கைகள் யாவும் மனத்திற்குப் பொருந்தாமையால் அவற்றையும் முன்புகொண்டிருந்த வேற்று வடிவத்தையும்துறந்து இந்நகரமடைந்து நும்மைச்சரணடைந்தேன். தேவரீர் அடிச்சிக்கு உண்மைப்பொருளை உணர்த்தியருள வேண்டும்'' என்று பிரார்த்திக்க, அவர் பிரத்தியக்கம் அநுமான மெனனும் இரண்டு அளவைகளின் இலக்கணங்களையும் அவற்றின் போலிவகைகளையும் உண்மையறிவுண்டாவதற்குக் கருவியாக அவளுக்குக் கூறினர்.

## ௩0.—பவத்திறமறுகெனப்பாவைநோற்றகாதை

தானஞ்செய்தலை மேற்கொண்டு சீலத்தில் முதன்மையாக நின்று பழம்பிறப்பின் உணர்ச்சியையடைந்த மணிமேகலை, அப்பால் புத்தம் சரணங்கச்சாமி தர்மம் சரணங்கச்சாமி ஸங்கம் சரணங்கச்சாமி என்பவற்றை மூன்று முறை சொல்லி மும்மணிகளையும் மூன்றுமுறைவணங்கி அறவணவடிகளைச் சரணாகதியாக அடைந்தாள். அடையவே பௌத்ததருமத்தை உபதேசிக்கத் தொடங்கிய அவர், "இதனைக்கேட்பாயாக : உயிர்களெல்லாம் அறிவில்லாமல் இருந்த காலத்தில தேவர்கள் பிரார்த்திக்கத் துடிதலோகத்தினின்றும் இவ்வுலகில் அவதரித்து அரசமரத்தினடியிலேயிருந்து தத்துவத்தை ஆராய்ந்தறிந்து மாரனைவென்று முக்குற்றங்களையும் அறுத்து விளங்கிய புத்ததேவன் அருளிச்செய்த இன்பமயமாகிய கட்டுரையாகும் இது ; பண்டைக்காலத்தில் அவதரித்த அளவற்ற புத்தர்கள் சருணைமிகுந்து திருவாய்மலர்ந்தருளியதும் இதுவே'' என்று சொல்லிப் பேதைமை முதலிய பன்னிரு நிதானங்களின் தோற்றவொடுக்கங்களையும் பிறவற்றையும் முறையே விளங்க உபதேசித்து, "உன்மனத்திருள் நீங்குக'' என்றுகூறி ஞானதீபத்தை நன்கு காட்டினர். மணிமேகலை அவ்வுபதேச மொழிகளைக்கேட்டு தூயந்திரிபறவுணர்ந்து பிறவித்துன்பம் ஒழிவதாகவென்று அந்நகரிலேயே நோற்றுக்கொண்டிருந்தாள்.

உ

கணபதி துணை

# மணிமேகலை

## பதிகம்

*[ கதைபொதிபாட்டு ]

இளங்கதிர் ஞாயிறு றெள்ளுந் தோற்றத்து
விளங்கொளி மேனி விரிசடை யாட்டி
பொன்றிகழ் நெடுவரை யுச்சித் தோன்றித்
தென்றிசைப் பெயர்ந்தவித் தீவத் தெய்வதம்
சாகைச் சம்பு தன்கீழ் நின்று
மாநில மடந்தைக்கு வருந்துயர் கேட்டு
வெந்திற லரக்கர்க்கு வெம்பகை நோற்ற

---

௧ ஞாயிறு - சூரியன் எள்ளும் - இகழும், உவமவுருபுமாம்

௧-௨ "பொன்னிறம் பொலிந்த நிறத்தா டோன்றி" (மணி ௯. ௧௪௫)

௩ வரை - மேரு உச்சி - உச்சியில்

௪ இத்தீவம் - சம்புத்தீவு

௫ சாகை - கிளை சம்பு - நாவன்மரம்

௭ வெம்பகைநோற்ற - வெவ்வியபகையாக நோற்ற

(பிரதிபேதம்) ௧ 'எள்ளுந்தோன்றல்' ௪ 'தென்றிசைபெயர்ந்த' ௫ 'சாயகை' ௭ 'தோற்றச'

* இதுவும், இதுபோல இந்நூலின் ஒவ்வொருபகுதியின் தலைப்பில் இருக்கும் பாட்டுள் உள்ள வாக்கியங்களும் கிடைத்த கையெழுத்துப் பிரதிகளுள் மிகப் பழையதும் இந்நூற் பரிசோதனைக்கு இன்றியமையா திருந்ததுமாகிய **மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள்** வீட்டுப்பிரதியிற் காணப்பட்டன இதனாலும், பதிகத்தினிறுதியில், "ஆறைம் பாட்டினு ளறிய வைத்தனனென்" என்றிருத்தலாலும் இந்நூற் பகுதிகளின், பெயர் பாட்டென்று வழங்கிவந்ததென்று தோன்றுகின்றது

† முதலிலுள்ள எண் காதையையும் பின்னுள்ளது அதனடியையும் குறிப்பன

சம்பு வென்பாள் சம்பா பதியினள்
செங்கதிர்ச் செல்வன் றிருக்குலம் விளக்குங்
கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட
அமர முனிவ னகத்தியன் றனாது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை
செங்குணக் கொழுகிய சம்பா பதியயற்
பொங்குநீர்ப் பரப்பொடு பொருந்தித் தோன்ற
ஆங்கினி திருந்த வருந்தவ முதியோள்
ஓங்குநீர்ப் பாவையை யுவந்தெதிர் கொண்டாங்
காணு விசும்பி னாகாய கங்கை
வேணவாத் தீர்த்த விளக்கே வாவெனப்
பின்னிலை முனியாப் பெருந்தவன் கேட்டீங்
கன்னை கேளிவ் வருந்தவ முதியோள்
நின்னால் வணங்குந் தன்மையள் வணங்கெனப்
பாடல்சால் சிறப்பிற் பரதத் தோங்கிய

---

அ சம்பாபதியினள் - சம்பாபதியிடத்தே யிருந்தாள், சம்பாபதி யென்பது காவிரிப்பூம்பட்டினத்தின் பழைய பெயர்

கூ செங்கதிர்ச்செல்வன் றிருக்குலம் - சூரியகுலம்

கO கஞ்சவேட்கையின் - நீருண்டாகும் விருப்பத்தையுடைய, கம் - நீர், கஞ்சம் - நீருமாம், "கஞ்சங் கலங்குவன" (நள சுயம் கரு) காந்தமன் - காந்தனென்கிய மன், காந்தனென்பது ஒரு சோழன் பெயர், "கன்னி யேவலிற் காந்த மன்னவன்" (மணி உஉ உஎ)

கக மு "அமர முனிவ னகத்தியன் றனாது" (மணி உஉ ௫)

கஉ கரகம் - குண்டிகை, "நீரற வறியாக் கரகத்து" (புறநா க) காவிரிப்பாவை - காவிரியாகிய மங்கை, "நீர்ப்பாவை" (மணி பதிகம், கசு)

கங செங்குணக்கு - செவ்விய கிழக்கு, செம்மை - நேர்மை

கஎ ஆணு - நேயம், "ஆணுப் பைங்கிளி யாண்டுப் பறந்ததே" (சீவக கOOஉ) ஆகாயகங்கை பெயர்

கஅ வேணவா - வேட்கையாலாகிய அவா, தொல் உயிர் சூ அரு, பார்க்க

ககூ பின்னிலை முனியா - பின்நிற்றலை வெறாத பெருந்தவன் - அகத்தியன்

உO அன்னை விளி, அன்னையென்றது காவிரியை

உஉ மு மணி கஅ · 57 பரதத்து - பரதகண்டத்தில்

(பி - ம்) கO 'கஞ்சை' கக 'முனிவரன்' கஉ 'கவிழ்ந்த' கங 'ஒழுகிய சம்பாபதி' கஎ 'ஆணுஉ' ககூ 'முனிவாய' உO 'முதியோளினி' உக 'தகைமையள்'

கோடாச் செங்கோற் சோழர்தங் குலக்கொடி
கோணிலை திரிந்து கோடை நீடினும்
தானிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை
தொழுதனள் நிற்பவத் தொன்மூ தாட்டி
கழுமிய வுவகையிற் கவான்கொண் டிருந்து
தெய்வக் கருவுந் திசைமுகக் கருவும்
செம்மலர் முதியோன் செய்த வந்நாள்

---

௨௩ சோழர்தங்குலக்கொடி - வேற்றுவேந்தர்க்குரியதாகாமையால் சோழர் தங் குலக்கொடியாயுள்ளாள், இப்படியே வையைநதி, "வையை யென்ற பொய்யாக் குலக்கொடி" என்று கூறப்பட்டுள்ளது, சிலப் ௧௩ ௧௭௦

௨௪ மணி ௬ ௩௪ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க

௨௫. பாவை - காவிரி

௨௬ தொழுதனள்நிற்ப - தொழுது நிற்ப

௨௭ கழுமிய - கலந்த கவான் - துடையின்மேல்

௨௮ - ௯ தெய்வக்கரு - உலகம் முப்பத்தொன்றனுள் மகாராஜிக லோகமுதலிய தெய்வலோகம் ஆறினுமுள்ள அறுவகைத் தெய்வகணபிண்டங்கள், தெய்வலோகம் ஆறாவன (௧) மகாராஜிகலோகம், (௨) திரியத்திரியசலோகம், (௩) யாமலோகம், (௪) துஷிதலோகம், (௫) நிருமாணரதிலோகம், (௬) பரநிருமித வசவர்த்திலோகமென்பன, "இருமூவகையிற் பெருவனப்பெய்திய தெய்வதக் கணங்களும்" (மணி ௬ ௧௭௮ - ௯) திசைமுகக்கரு - பிரஹ்மகாயிகலோகம் முதலிய பிரஹ்மலோகம் இருபதினுமுள்ள இருபது வகைப்பட்ட பிரஹ்மகணபிண்டங்கள், பிரஹ்மலோகம் இருபதாவன (௧) பிரஹ்மகாயிகலோகம், (௨) பிரஹ்மபுரோகிதலோகம், (௩) மஹாபிரஹ்மலோகம், (௪) பரீத்தாபலோகம், (௫) அப்பிரமாணாபலோகம், (௬) ஆபாஸ்வரலோகம், (௭) பரீத்தசுபலோகம், (௮) அப்பிரமாணசுபலோகம், (௯) சுபகிருஸ்னலோகம், (௧௦) பிரகத்பலலோகம், (௧௧) அஸஞ்ஞ யாஸத்துலோகம், (௧௨) அப்பிரகலோகம், (௧௩) அதபலோகம், (௧௪) ஸுதர்சலோகம், (௧௫) ஸுதர்சிலோகம், (௧௬) அகநிஷ்டலோகம், (௧௭) ஆகாசானந்தியாயதனலோகம், (௧௮) விஞ்ஞானாநந்தியாயதனலோகம், (௧௯) ஆகிஞ்சந்யாயதனலோகம், (௨௦) நைவ ஸமஜ்ஞாயதனலோகமென்பன இவற்றுள், பிரஹ்மகாயிகலோகம் முதலியன பதினாறையும் உருப்பப் பிரஹ்மலோகமென்றும், ஆகாசானந்தியாயதன லோகம் முதலிய நான்கையும் அருப்பப் பிரஹ்ம லோகமென்றும் கூறுவர், "நால்வகை மரபி னருப்பப் பிரமரு, நானால் வகையி னுருப்பப் பிரமரும்" (மணி ௬ ௧௭௬ ௭) மேற்கூறியவற்றுள், தெய்வலோகங்கள் ஆறும் ஸகாம லோகங்களென்றும் கூறப்படும் இவை பௌத்தநூலிற் காணப்பட்டன செம்மலர் முதியோன் - மஹாபிரஹ்மா அந் நாள் - அந்நாளில்

(பி - ம்) ௨௪ 'கோணிலைதிரிந்து' ௨௬ 'தொன்மூதாட்டியைக்'

என்பெயர்ப் படுத்தவிவ் விரும்பெயர் மூதூர்
நின்பெயர்ப் படுத்தேன் நீவாழி யென
இருபாற் பெயரிய வுருகெழு மூதூர்
ஒருநூறு வேள்வி யுரவோன் றனக்குப்
பெருவிழா வறைந்ததும் பெருகிய தலரெனச்
சிதைந்த நெஞ்சிற் சித்திரா பதிதான்
வயந்த மாலையான் மாதவிக் குரைத்ததும்
மணிமேகலைதான் மாமலர் கொய்ய

---

௩௦ என்பெயர்ப்படுத்த - என்பெயர்படச்செய்த, என்றதனால், சம்பாபதி யென்னும் பெயர் சம்புத்தீவத் தெய்வத்திற்கு இயல்பாகவே உண்டென்பது பெறப்பட்டது இதனை, "தகவில்லை கொல்லோ சம்பாபதி" (மணி ௬ ௧௩௮) என்று வருதலாலுணர்க. சிலப்பதிகாரத்திலும் இந்நூலிலும் தென்மதுரையையும் அதன் அதிதேவதையையும் மதுராபதியென்று வழங்கியிருத்தல் காண்க சோழர்களின் பழைய இராசதானியாதலின், இந்நகரம் மூதூரென்னப்பட்டது இப்படியே இந்நூலிற் பலவிடத்தும் இந்நகரை மூதூரென்று வழங்குவர் (௨ ௩௪, ௪௦, ௩ ௩௪, ௪ ௨௮, ௧௮ ௬௧, ௨௦ ௨௮, ௨௧ ௧௧௬), "ஆரங்கண்ணிச் சோழன் மூதூர்" (பதிகம், ௧௨) எனவும், "வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ, டோங்கிப் பரந்தொழுகலான்" (சிலப் ௧ ௧௧ - ௨) எனவும் வருதல் காண்க

௩௨ இருபாற் பெயரிய - சம்பாபதி, காவிரிப்பூம்பட்டினம் என்னும் இருவகைப் பெயரினையுடைய உருகெழு மூதூர் - பகைவர்க்கு அச்சத்தைச் செய்தல் பொருந்திய பழைய ஊர், மு மணி ௪ ௩௩

௧ - ௩௨ விரிசடையாட்டி, தெய்வதம், சம்புவென்பாள், சம்பாபதியினள், அக்காலத்துக் காவிரிப்பாவை ஒழுகி அச்சம்பாபதியயலில் வந்தனள், ஆங்கிருந்த முதியோள் நீர்ப்பாவையை எதிர்கொண்டு விளக்கே வாவென, அதனைப் பெருந்தவன் கேட்டு வணங்கென, குலக்கொடி தண்டமிழ்ப்பாவை அம்முதியாளைத் தொழுதுநிற்ப, அம்மூதாட்டி, அவளைக் கவானிற் கொண்டிருந்து, அந்நாளில், என்பெயர்ப் படுத்த இம்மூதூரை நின்பெயர்ப் படுத்தேன், நீவாழியவென்றலால் இருபாற் பெரியமூதூரெனக

௩௩ நூறுவேள்வியுரவோன் - சதமகன், இந்திரன்

௩௪ அலர்பெருகியதென, அலர் - பலரறியக்கழத்தும் பழிமொழி

௩௫ சித்திராபதி - மாதவியின் நற்றாய், "எற்பயந்த, சித்திராபதிக்குச் செப்புநீ" (மணி ௨ ௭௦ - ௭௧) என்று மாதவி கூறுதலாலுணர்க

௩௬. வயந்தமாலை - மாதவியின் தோழி, "தன்மகட் டோழி, வயந்த மாலையை வருகெனக் கூஉய்" (மணி. ௨. ௭ - ௮), இவளைக் கூனியென்றும் வழங்குவர் மாதவி - மணிமேகலையின் தாய், நாடகக் கணிகை

(பி - ம்) ௩௧ 'பெயர்ப்படுத்தேன்'

அணிமலர்ப் பூம்பொழி லகவயிற் சென்றதும்
ஆங்கப் பூம்பொழி லரசிளங் குமரனைப்
பாங்கிற் கண்டவள் பளிக்கறை புக்கதும்
பளிக்கறை புக்க பாவையைக் கண்டவன்
துளக்குறு நெஞ்சிற் றுயரொடும் போயபின்
மணிமே கலாதெய்வம் வந்து தோன்றியதும்
மணிமே கலையை மணிபல் லவத்துய்த்ததும்
உவவன மருங்கினவ் வுரைசா றெய்வதம்
சுதமதி தன்னைத் துயிலெடுப் பியதூஉம்
ஆங்கத் தீவகத் தாயிழை நல்லாள்
தான்றுயி லுணர்ந்து தனித்துய ருழந்ததூஉம்
உழந்தோ ளாங்கணோ ரொளிமணிப் பீடிகை
பழம்பிறப் பெல்லாம் பான்மையி னுணர்ந்ததூஉம்

---

௩௮ பொழில் - உபவனம் அகவயின் - உள்ளிடத்தே

௩௯ பொழில் - பொழிலில் அரசிளங்குமரனை - உதயகுமரனை

௪0 பளிக்கறை - பளிங்காலாகிய அறை ௪௧ பாவை - மணிமேகலை

௪௨ துளக்குறுநெஞ்சு - நிலை கலங்குதலுற்ற நெஞ்சு, "கடிமரந் துளங்கிய காவும்" (புறநா ௨௩)

௪௩ மணிமேகலா தெய்வம் - ஆகாச வார்த்தையுணர்ந்தபடி இந்திரன் ஏவலாலே சில தீவுகளைப் பாதுகாத்துக்கொண்டிருத்தலையுடையது, கோவலனுடைய குலதெய்வம்

௪௪ மணிப்பல்லவம் - ஒரு சிறுதீவு, சிறுதீவை அந்தரத்தீவென்று வழங்குவர்

௪௫ உவவனம் - உண்டாக்கப்பட்ட வனம், உபவனமென்னும் வடமொழிச் சிதைவு, இதனை ஆராமமென்றும் வழங்குவர் உரைசால் - புகழமைந்த.

௪௬ சுதமதி - மாதவியின் தோழியாகிய ஒரு பார்ப்பனி துயில் எடுப்பியதூஉம் - துயில் எழுப்பியதும், "உரவுநீர்ப் பரப்பி னூர்துயி லெடுப்பி" (சிலப் ௪ ௭௧)

௪௭ நல்லாள் - மணிமேகலை

௪௮ தனித்துயருழந்ததும் - ஒப்பற்ற துயரால் வருந்தியதும், "அருந்துய ருழக்குநின் றிருந்திழை யரிவை" (புறநா ௧௪௬)

௪௯ ஒளிமணிப்பீடிகை - செவ்வொளியையுடைய மாணிக்கத்தாலாகிய புத்தனுடைய பாதபீடிகையால்

(பி-ம்) ௪௧ 'பாவை கண்டவன்' ௪௨. 'பெயர்ந்தபின்' ௪௪ 'மணிப்பல்லவம்' ௪௬. 'துயிலெழுப்பியதூஉம்' ௪௮ 'தான்றுயிலெழுந்து' ௪௯ 'உழந்தோணமுன்னர்'

உணர்ந்தோன் முன்ன ருயர்தெய்வந் தோன்றி
மனங்கவ லொழிகென மந்திரங் கொடுத்ததும்
தீப திலகை செவ்வனந் தோன்றி
மாபெரும் பாத்திர மடக்கொடிக் களித்ததும்
பாத்திரம் பெற்ற பைந்தொடி தாயரொ
டியாப்புறு மாதவத் தறவணர்த் தொழுததும்
அறவண வடிக ளாபுத் திரன்றிறம்
நறுமலர்க் கோதைக்கு நன்கன முரைத்ததும்
அங்கைப் பாத்திர மாபுத் திரன்பாற்
சிந்தா தேவி கொடுத்த வண்ணமும்

---

௫௧ உயர்தெய்வம் - மணிமேகலாதெய்வம்.

௫௨ கவல் - கவலுதல், முதனிலைத் தொழிற்பெயர். மந்திரம் - வேற்றுரு அடைவிப்பதும், அந்தரத்திற் றிரியச்செய்வதும், பசியை ஒழிப்பதுமாகிய மூன்று மந்திரங்கள். கொடுத்ததும் - உபதேசித்ததும்.

௫௩ தீபதிலகை - மணிபல்லவத்திலுள்ள புத்தனுடைய பாதபீடிகையை இந்திரனேவலாற் காவல்பூண்டு ஒழுகுபவள், தீவுக்கு அலங்காரமாக உள்ளவளென்பது பொருள். செவ்வனம் - செவ்விதாக. "தீவதிலகை செவ்வன முரைக்கும்" (மணி. ௧௧ : ௨0) எனவும், "சிறந்தோர்க்கல்லது செவ்வனஞ் சுரவாது" (மணி. ௧௧ : ௧௨௧) எனவும் இம்மொழி இப்பொருளில் வழங்கிவருதல் காண்க.

௫௪ மாபெரும்பாத்திரம் - அமுதசுரபியென்னும் பெயருள்ள பிச்சைப் பாத்திரத்தை. மடக்கொடிக்கு - மணிமேகலைக்கு.

௫௫ தாயரொடு - மாதவி சுதமதியென்னும் இருவரோடு, "ஆங்கத் தாயரோ டறவணர்த் தேர்ந்து" (பதிகம், ௮௩), "பொற்றொடி தாயரு மப்பதிப் படர்ந்தனர்" (௨௮ : ௧௫௪), "நற்றாய்தனக்கு" (௨௧ : ௩௫) என இவ்விருவரையும் மணிமேகலையின் தாயரென இந்நூலுள்ளே வழங்கிவருதல் காண்க.

௫௬. யாப்பு - கட்டு. அறவணர் - புத்தசங்கத்தினரான ஒரு முதிய முனிவர்.

௫௭ ஆபுத்திரன் - ஓரந்தணன், தன்னைப்பெற்றவுடன் தாய் நீங்கிவிட, ஏழுநாளவரையில் ஒரு பசுவாற் பாலூட்டிக் காக்கப்பட்டமையின், இவன் இப்பெயர்பெற்றான். திறம் - வரலாறு.

௬0 சிந்தாதேவி - ஸரஸ்வதீதேவி, யாவருக்கும் சிந்தையிற்றோன்றிச் சொற்பொருளுணர்த்துபவளென்பது பொருள், இந்நூலுள்ளே, "நாமிசைப் பாவாய்" (௧௪ : ௧௮), "செழுங்கலைப்பாவாய்" (௨௫ - ௧௩௩).

(பி - ம்) ௫௨ 'ஒழியென' ௫௩ 'தீவதிலகை' ௫௭. 'அறவணரடிகள்' ௫௮ 'நறுமணக்கோதைக்கு' ௫௯ 'அங்கப்பாத்திரம்'

மற்றப் பாத்திர மடக்கொடி யேந்திப்
பிச்சைக் கவ்வூர்ப் பெருந்தெரு வடைந்ததும்
பிச்சை யேற்ற பெய்வளை கடிஞையிற்
பத்தினிப் பெண்டிர் பாத்தூ ணீத்ததும்
காரிகை நல்லாள் காயசண் டிகைவயிற்
றானைத் தீக்கெடுத் தம்பல மடைந்ததும்
அம்பல மடைந்தன ளாயிழை யென்றே
கொங்கலர் நறுந்தார்க் கோமகன் சென்றதும்
அம்பல மடைந்த வரசிளங் குமரன்முன்
வஞ்ச விஞ்சையன் மகள்வடி வாகி
மறஞ்செய் வேலோன் வான்சிறைக் கோட்டம்
அறஞ்செய் கோட்ட மாக்கிய வண்ணமும்
காயசண் டிகையென விஞ்சைக் காஞ்சனன்

---

"உணர்விற் றோன்றி யுரைப்பொரு ளுணர்த்து, மணிதிக ழவிரொளி மடந்தை" (உ௫ ௧௪௮) என வழங்குதலால் இஃது உணரப்படும்.

௬௧ மடக்கொடி - மணிமேகலை

௬௨ பிச்சைக்கு - பிக்ஷைக்கு அவ்வூர் - காவிரிப்பூம்பட்டினம்

௬௩ கடிஞை - பிச்சைப்பாத்திரம், "தோமறு கடிஞையும்" (சிலப். ௧௦ ௬௮)

௬௪ பத்தினிப்பெண்டிர் - ஆதிரை பாத்தூண் - பகுத்துண்ணும் உணவு

௬௫ காயசண்டிகை - ஒரு வித்தியாதர மகள்

௬௬ ஆனைத்தீ - எத்துணையும் தணியாத பெரும்பசியைச் செய்வதொரு வியாதி, இதனைப் பஸ்மக வியாதியென்பர் ஸ்ரீ புராணமுடையார், இத னியல்பை, சீவக. ௪௦௦, ௪௦௩ - ஆம் பாடல்களாலுணர்க அம்பலம் - உலகவறவி

௬௮ கோமகன் - உதயகுமரன்

௭௦ விஞ்சையன் மகள்வடிவு - காஞ்சனனென்னும் வித்தியாதரனுடைய மனைவியாகிய காயசண்டிகையினது உருவம், மகள் - மனைவி, இந்நூலுள்ளே, "நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம், மனக்கினியாற்குநீ மகளாய தூஉம்" (௨௧ ௨௯ - ௩௦) என்புழி மகளென்பது இப்பொருள்தாத லுணர்க

௭௧ வேலோன் - சோழன் சிறைக்கோட்டம் - சிறைச்சாலை.

(பி - ம்) ௬௩ 'பெருந்தகைக்கடிஞை' ௭௦ 'மகள் வடிவாயதூஉம்' ௭௩ 'காஞ்சயன'

ஆயிழை தன்னை யாரா தணுகலும்
வருஞ்ச விருஞ்சையன் மன்னவன் சிறுவனை
மைந்துடை வாளிற் றப்பிய வண்ணமும்
ஐயரி யுண்க ணவன்றுயர் பொறாஅள்
தெய்வக் கிளவியிற் றெளிந்த வண்ணமும்
அறைகழல் வேந்த னாயிழை தன்னைச்
சிறைசெய் தென்றதுஞ் சிறைவீடு செய்ததும்
நறுமலர்க் கோதைக்கு நல்லறம் முரைத்ததூஉம்
தாயவளை யாபுத் திரனா டடைந்ததும்
ஆங்கவன் றன்னோ டணியிழை போகி
ஓங்கிய மணிபல் லவத்திடை யுற்றதும்
உற்றவ ளாங்கோ ருயர்தவன் வடிவாய்ப்
பொற்கொடி வஞ்சியிற் பொருந்திய வண்ணமும்

---

௭௪ அணுகலும் - நெருங்குதலும்

௭௬ மைந்து - வலி தப்பிய - வெட்டிய, "வாளிற் றப்பிய வல்வினை யன்றே" (மணி ௨௧ ௬௦)

௭௮ தெய்வக்கிளவி - கந்திற்பாவையாகிய தெய்வத்தின் மொழி

௭௯ வேந்தன் - மாவண்கிள்ளி

௮௦ வீடு - விடுதல்

௮௧ நறுமலர்க் கோதைக்கு - இராசமாதேவிக்கு நல்லறம் - பௌத்த தருமம், இதனை அருளறமென்றுங் கூறுவர்

௮௨ ஆபுத்திரன் நாடு - சாவகநாடு

௮௩ ஆங்கவன் றன்னோடு - ஆபுத்திரனோடு

௮௪ புத்தனுடைய பாதபீடிகையினையுடையதாதலின், 'ஓங்கிய மணிபல்லவம்' என்றார்

௮௫ உயர்தவன்வடிவாய் - மணிமேகலை உயர்ந்த முனிவன் வடிவங் கொண்டு, "மையறு சிறப்பிற் றெய்வந் தந்த, மந்திர மோதியோர் மாதவன் வடிவாய்" (௨௬ ௭௦ - ௭௧) என்று பின் வருதல் காண்க

௮௬ வஞ்சி - சேரனுடைய இராசதானி

(பி - ம்) ௭௭ - ௮௨ 'நெடுநிலைக் கந்தி னின்ற பாவை, வருவ துரைத்து மயக்கொழி யென்றது, மகன்றுயர் பொறாஅ மன்னவன் மாதரைச் சினங்கொண் டாங்கோர் சிறையிடை யிட்டதும், சிறைவீடு செய்த விராசமா தேவி, பொறைகொண் டிரப்பச் சீலங் கொடுத்ததும், தாழ்கழல் வேந்தன் சாவக மன்னனுக் காயிழை தன்னை யுற்றிய வண்ணமும்' ௮௧ 'நறுமலர்க்கோதை நல்லறம்' ௮௬ 'பொற்கொடிமூதூர்', 'பொற்றொடி வஞ்சி'

நவையறு நன்பொரு ளுரைமி னோவெனச்
சமயக் கணக்கர் தந்திறங் கேட்டதும
ஆங்கத தாயரோ டறவணாத தேரநது
பூங்கொடி கசசி மாநகா புக்கதும
புககவள கொணட பொய்யுருக் களைநது
மறறவா பாதம வணஙகிய வணணமும
தவததிறம பூண்டு தருமங கேட்டுப
பவததிற மறுகெனப பாவை நோறறதும
இளஙகோ வேநத னருளிக் கேட்ப
வளஙகெழு கூல வாணிகன சாததன
மாவண டமிழததிற மணிமே கலைதுற

---

அஎ நவையறு - குறறமறற நனபொருள - நலலததுவஙகளை

அஅ. சமயககணககா - சமயவாதியா, "சமயக கணககா மதிவழி கூறாது", "மாறுகொணடறையு மதிநூற கடலகிளா, சமயக கணககா தநதிறங கடநது" (கல் கஎ, ௬௫)

அகூ ஆஙகு - வஞசிநகாததில ௬௦ கசசி - காஞசிநகாம

௬௧ பொயயுரு - முனனஙகொணட முனிவன வடிவு

௬௨ அவா - அறவணவடிகளது ௬௩ தருமம - பௌதத தருமம

௬௫ இளஙகோவேநதன் - சிலப்பதிகார நூலாசிரியராகிய இளங கோவடிகள் அருளிக கேடப - அருளபுரிநது கேடப, கேடடருள வென விகுதிபிரிததுக கூடடினும அமையும

௬௬ கூலவாணிகன சாததன - கூலவாணிகனென சாததன, கூலம எணவகைததது நெலலு, புலலு, வரகு, தினை, சாமை, இறுஙகு, தோரை, இராகியென, பதினெண வகைதமெனபா கூததநூலார்; "பதினெண் கூலமு முழவாககு மிகுக" (மதிவாணர் நாடகத்தமிழ் நூல்)

௬௭ தமிழ்த்திறம - தமிழிலககணததின பாகுபாட்டால மணி மேகலை துறவு - மணிமேகலைதுறவென்னும பெயருள்ள இநநூலை, இந நூலுககு மணிமேகலைதுறவெனனும பெயருணமை நீலகேசியுரை முத லியவற்றிற காணபபடும, ஆயினும மணிமேகலையெனனும பெயா இரு வகை வழககிலும மிகுதியாக வழஙகுதலபறறி, அபபெயரே ஈண்டு எடுத தாளபபட்டது இனி, மணிமேகலை துறவெனபதனை நூறபெயராகக கொள்ளாமல மணிமேகலை யெனபவளுடைய துறவென்று கொள்ளினும பொருநதும.

(பி - ம்.) அகூ. 'தொழுது' ௬௦. 'காஞசிமாநகா' ௬௨ 'மற்றவன' ௬௭. 'வணடமிழததின மணிமேகலை திறம'

வாறைம் பாட்டினு ளறியவைத் தனனென்.

## *பதிகம் முற்றிற்று

க † அரிபெறு     ன்னுயர்த்த வாதியான் வண்டின்
புரிபெறும் போதி நிழற்கீழ்ப் - பெரியோன்
அடித்தா மரைமலரை யன்போடுஞ் சென்று
பிடித்தார் பிறவார் பெயர்ந்து

உ புத்தபுண் பூம்பொய்கைப் பூம்புகார் மாதவிக்கு
வாய்த்த மணிமே கலைத்துறவைச் - சாத்தன்
மணிமே கலை

---

௯௫ ஆறைம்பாட்டினுள் - முப்பது பாட்டினுள். அறிய - தம் முகத்தான் அறியும்படி. என்னெனனும் அசைச்சொல்லால் ஆசிரியப்பா முடிதல் சிறப்புடைத்தன்றோ. "ஞகாரை முதலா" (தொல். செய். ௨௩௦) என்பதற்கு, 'ஞணநமனயரலவழள வென்னும் பதினொரு புள்ளி யீற்றினுள் ஒன்றனை இறுதியாகச் செய்யுஞ் செய்யுள் பொருட்டொடராக வுஞ் சொற்றொடராகவும் செய்வது இயைபெனப்படும் எ - று. இயை பென்றதனானே பொருளும் இயைந்து சொல்லும் இயைந்துவருமென்பது கருத்து. சீத்தலைச் சாத்தனாற் செய்யப்பட்ட மணிமேகலையும் கொங்குவேளிற் செய்யப்பட்ட தொடர்நிலைச் செய்யுளும் போல்வன, அவை னகார ஈற்றான் இற்றன' எனப் பேராசிரியரும், 'ஞ ண என்னும் பதினொரு புள்ளியுள் ஒன்றனை யீறாகக் கொண்டு செய்யுளைப் பொருட்டொடராகச் செய்வது இயைபெனப்படும் எ - று. இயையென்றதனானே பொருளியைதல் பெற்றாம். பிறந்த மொழியால் அடிநிமிர்ந்த தொல் லுயிரீற்றவாய்வரும் னகரவீற்றான் இற்றுப் பொருள் தொடர்ந்தன மணிமேகலையும் உதயணன் கதையும்' என நச்சினார்க்கினியரும் எழுதியவை இங்கே அறிதற்பாலன.

௯௨ - ௯௫ மூதூர் விழாவறைந்தது முதற் பாவைநோற்றது ஈறாக வுள்ள மணிமேகலை துறவை இளங்கோவேந்தன் கேட்பக் கூலவாணிகன் சாத்தன் ஆறைம்பாட்டினுள் அறிய வைத்தனனென்க.

எல்லாவடியும் நேரடியாய் வந்து முடிதலின், இப்பாட்டு நிலைமண்டில ஆசிரியப்பா.

* (பி - ம்) 'பாயிரமுற்றும்'

† இந்த இரண்டு செய்யுட்களும், இந்த வண்ணமாக மிகிலப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டுப் பிரதியில் மட்டும் இருந்தன

# மணிமேகலை

## முதலாவது

## விழாவறை காதை

[முதலாவது விழாவறைந்தபாட்டு]

உலகந் திரியா வோங்குயர் விழுச்சீர்ப்
பலர்புகழ் மூதூர்ப் பண்புமேம் படீஇய
ஓங்குயர் மலயத் தருந்தவ னுரைப்பத்
தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்

---

க - ரு. உலகம் - நன்மக்களுடைய ஒழுக்கம்; திரியா - வேறுபடாத; ஓங்குயர் விழுச்சீர் - மிகவுமுயர்ந்த சீரியபுகழ்; திரியா மூதூர், சீர்மையுடைய மூதூரெனக், "உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ' ரலைவாய்" (முருகு. ௧௨௪ - ௫) பலர் புகழ் மூதூர் - பல தேசத்தாரும் கொண்டாடும் பழமையாகிய நகரம், என்றது காவிரிப் பூம்பட்டினத்தை, பலரும் புகழ்தலை, "பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்" (சிலப். ௧ : ௧௦), "வாழியரோ புகழ்மா லமைந்த புகார்" (சிலப். புகார்க்காண்டத்தி னிறுதிச் செய்யுள்) என்பவற்றாலும் பிறவற்றாலும் உணர்க. பலர் - பல சமயத்தாருமாம். மூதூர்ப் பண்பு மேம்படீஇய - மூதூரின் தன்மைகள் மிகும் பொருட்டு. மலயம் - பொதியின்மலை. அருந்தவன் - அகத்தியன். மேம்படீஇய உரைப்பவெனக.

௪. தூங்கு எயில் செம்பியன் - தேவர்கட்குப் பகைவராகிய அசுரர்களுடைய, ஆகாயத்திலே அசைகின்ற மதில்களை அழித்த வீரவளையை யணிந்த தோள்களையுடைய சோழன்; இவன் சோழருள் ஒருவன், இவன் தூங்கெயிலழித்ததனை, "ஒன்னா ருட்குந் துன்னருங் கடுந்திறற், றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர்" (புறநா. ௩௯), "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை, சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை" (சிலப். ௨௯ 'வீங்குநீர்' என்னும் செய்யுள்), "வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பிற், றூங்கு மெயிலுந் தொலைத்தலால்" (பழ. ௪௯) என்பவற்றாலுணர்க.

(பி - ம்.) ௨ 'மேம்படுதல்', 'மேம்படியர்' ௫ 'ஆங்குயர் மலயத் தருந்தவ னுரைப்ப'

விண்ணவர் தலைவனை வணங்கிமுன் னின்று
மண்ணகத் தென்றன் வான்பதி தன்னுள்
மேலோர் விழைய விழாக்கோ ளெடுத்த
நாலேழ் நாளினு நன்கினி துறைகென
அமரர் தலைவ னாங்கது நேர்ந்தது
கவராக் கேள்வியோர் கடவா ராகலின்
மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடெனும்
இத்திறந் தத்த மியல்பினிற் காட்டும்
சமயக் கணக்கருந் தந்துறை போகிய
அமயக் கணக்கரு மகலா ராகி

---

௫ விண்ணவர் தலைவனை - இந்திரனை

௪ - ௫ அருந்தவன் உரைப்பச் செம்பியன் வணங்கி யென்க, உரைப்ப எறிந்தவென்னவும் இயையும்

௬ 'மண்ணகத்து' என்பதுமுதல் சோழன் வார்த்தை வான்பதி தன்னுள் - நன்றாகிய காவிரிப்பூம் பட்டினத்தில்

௭ விழாக்கோள் எடுத்த - விழாவெடுத்தலை மேற்கொண்ட

௮ நாலேழுநாளினும் - இருபத்தெட்டு நாளினும், "நாலேழ் நாளினும்" என்பர் மேலும், ௧, ௧௭

௫ - ௮ முன்னின்று உறைகென, உறைகென - உறைகவென்று சோழன் வேண்ட

௯ நேர்ந்தது - இந்திரன் உடன்பட்டது, இது பெயர், விழாவை யென்றபடி

௰ கடவார் - பிழையார்

௧௧ மெய்த்திறம் - மெய்ம்மையையுணர்த்துவனவாகிய நூல்வகைகள், வழக்கு - உலகியல், நன்பொருள் - தத்துவம், வீடு - முத்தி, "மெய்த்திறம் வழக்கென விளம்புகின்ற, வெத்திறத்தினும்" (௨௭ ௧0௬ - ௭) என்பார்மேலும் இப்படியே, "அருமறை விதியு முலகியல் வழக்கும், கருத்துறை பொருளும் விதிப்பட நினைந்து" (௬௬) என்றார் கல்லாடத்தும்

௧௨ இத்திறம் - இவ்வகைகளை

௧௩ தம் துறைபோகிய - தம்முடைய வழியிற் றேர்ந்த

௧௪ அமயக் கணக்கரும் - காலங்களை எண்ணிச் சொல்வோராகிய சோதிடரும், கணக்கரென்பது கணக்கென்னும் வடமொழிச் சிதைவு அகலாராகி - இந்நகரை விட்டு நீங்காராகி

(பி - ம்) ௧௧ 'திறம்விளக்கும்' ௧௪ 'கவையக் கணக்கருங் கலமென பேருக'

கரந்துரு வெய்திய கடவு ளாளரும்
பரந்தொருங் கீண்டிய பாடை மாக்களும்
ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
வந்தொருங் குழீஇ வான்பதி தன்னுட்
கொடித்தேர்த் தானைக் கொற்றவன் றுயரம்
விடுத்த பூதம் விழாக்கோள் மறப்பின்

---

௧௫ கரந்துரு எய்திய கடவுளாளரும் - மக்கள் கண்கள் காணப்பெறாவென்று தமது மிக்க ஒளியையுடைய தெய்வ யாக்கையை மறைத்து அக்கண்கள் பொறுக்குமளவினவாகிய உருவங்களை நிருமித்துக்கொண்ட தேவரும்; இதனை, "அந்தரத் துள்ளோ ரறியா மரபின், வந்து காண்குறூஉம் வானவன் விழவும்" (சிலப். ௬: ௭௨-௩), "அவனுக்குப், பூவந்த வுண்கண் பொறுக்கவென்று மேவித்தன், மூவா விளநலங் காட்டி" (சிலப். ௧: ௩௩-௫) என வருவனவற்றாலும் அவற்றின் உரையாலும் உணர்க.

௧௬ ஒருங்கு ஈண்டிய - ஒன்றுபடத் திரண்ட. பாடை மாக்கள் - மொழி வேறுபட்ட மாக்கள்; இவர்கள், மரக்கலந்தருஉஞ் செல்வப் பொருட்டால் வந்த பரதேசிகள்; இவரை, "புலம்பெயர் மாக்கள்" (சிலப். ௫: ௧௧), "மொழிபெயர் தேத்தோர்" (சிலப். ௬: ௧௪௩) எனவுங் கூறுவர்.

௧௭ ஐம்பெருங்குழு - அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணரென்னுமிவர்கள்; எண்பேராயம் - கரணத்தியலவர் முதலியோர்; இவ்விவரத்தை, "அமைச்சர் புரோகிதர் சேனா பதியர், தவாத் தொழிற் றூதுவர் சாரண ரென்றிவர், பார்த்திபர்க் கைம்பெருங் குழுவெனப்படுமே", "கரணத் தியலவர் கரும விதிகள், கனகச் சுற்றங் கடைகாப் பாளர், நகர மாந்தர் நளிபடைத் தலைவர், யானை வீரர் இவுளி மறவர், இனைய ரெண்பே ராய மென்ப" (திவாகரம்) என்பனவற்றாலுணர்க; "ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்" (சிலப். ௫: ௧௫௭; பெருங். ௨. ௩. ௪).

௧௮ ஒருங்கு குழீஇ - ஒன்றுபட்டுக்கூடி. 'வான்பதிதன்னுள்' என்றது முதலியன சமயக்கணக்கர் முதலியோர் வரவை.

௧௯ கொற்றவன் - முசுகுந்தன். துயரம் - அவனுடைய கண்ணும் மனமும் இருளும் வண்ணம் அசுரர் விட்ட தாமசாஸ்திரத்தால் அவனுக்குளதாகிய துன்பம். துயரம் - துயரத்தை.

௨௰ விடுத்த பூதம் - முசுகுந்தனுக்கு ஒரு மந்திர முபதேசித்து அவ்விருளைப் போக்கிய, பட்டினப்பாக்கம் மருவூர்ப்பாக்கம் இரண்டற்கும் இடையேயுள்ள நாளங்காடியிடத்துப் பூதம்; "வெற்றிவேன் மன்னற் குற்றதை யொழிக்கென ... பீடிகை" (சிலப். ௫: ௬௫-௭), "கடுவிசை யவுணர் இடனுங் காண்கும்" (சிலப். ௬: ௭-௧௫) என்பவற்றாலும் அவற்றின் உரையாலும் உணர்க. விழாக்கோள் - விழாவெடுத்தல்.

(பி-ம்.) ௧௫ 'காந்தருவெய்திய' ௧௮ 'குழீஇய' ௧௯ 'துயரற', 'துயரிற' ௨௰ 'மறைப்பின்'

மடிதத செவவாய் வலலெயி றிலஙக
இடிககுரன் முழககத திடுமபை செய்திடும்
தொடுதத பாசததுத தொலபதி நரகரைப
புடைததுணணும பூதமுமபொருநதா தாயிடு
௨௫ மாயிரு ஞாலத தரசு தலை யீணடும
ஆயிரங கணணோன விழாககால கொளகென
வசசிரக கோடடதது மணஙகெழு முரசம
கசசை யானைப பிடாததலை யேறறி
ஏற்றுரி போாதத விடியுறு முழககிற

---

௨௧ வலலெயிறு - வலிய பல

௨௨ முழககதது - முழககததோடு இடுமபை - துனபம

௨௦ - ௨௨ மறபபின, பூதம இடுமபை செயதிடு மெனக

௨௩ - ௪ தொடுதத - கடடிய நரகா - தமமைப பிறா நமபுவதறகுத தவவேடததில மறைநதுநினறு அததவததிற கிழுககானவற்றினககண ஒழுகும பொயவேடததாா முதலிய அறுவகையோா புடைதது - அறைநது. பூதம - மேறகூறிய பொய வேடததாா முதலிய அறுவரைத தன பாசங கடடிவா அவரை அறைநதுணணும சதுககபபூதம, இதனை, "மாதுய ரெவவமொடு மனையகம புகாஅள சேயிழை யாறறலும" (மணி ௨௨ ௪௯ - ௫௬), "தவமறைந தொழுகுந தனமையி லாளா, அவமறைந தொழுகு மலவைப பெணடிா, அறைபோ கமைசசா பிறாமனை நயபபோா, பொயககரி யாளா புறஙகூற றாளரென, கைககொள பாசததுக கைபபடு வோரெனக, காத நானகும கடுஙகுா லெடுபபிப, பூதம புடைததுணணும பூத சதுககமும", "பததினி யொருததி உயிாமுனபுடைபப" (சிலப் ௫ ௧௨௮ - ௩௪, ௧௫. ௭௬ - ௮௬) எனபவறறாலுணாக

௨௫ மாயிருஞாலம - மிகப பெரிய பூமி. ஈணடும - கூடும

௨௬. ஆயிரஙகணணோன - இநதிரன காலகொள்கென - தொடஙகுகவென்று சொலல, "காலகோள் விழவின கடைநிலை சாறறி" (சிலப் ௫. ௧௪௪)

௨௭ வசசிரககோடடம - வசசிராயுதம நிறகுஙகோயில, சிலப் ௪ ௧௨ மணங கெழுமுரசம - விழாமுரசு

௨௮ கசசை - கீழவயிற்றிற கடடும கசசை பிடர்ததலை - பிடரிடம

௨௭ - ௮ ழ "வசசிரக கோடடதது மணஙகெழு முரசம, கசசை யானைபபிடாததலை யேறறி" (சிலப் ௫ ௧௪௧-௨)

௨௯ - ௩௧ ஏற்றுரிபோாததமுரசு - வெனற ஏற்றினது உரியைப போாததின முரசு, இககருததினைப பின வருவனவறறாலுணாக "நலலேற றுரிவை தைஇய முரசம" (அகநா ௩௩௪), "எறிரணடுடன் மடுதது, வென்றதன பசசை சீவாது போாதத, .. முரசம" (புறநா ௨௮௮),

(பி - ம்) ௨௧ 'வலலெயிறருமப' ௨௭ 'மனகெழு', 'மணமுழா வாஙகி' ௨௯. 'இடியுருமுழககின'

கூற்றுக்கண் விளிக்குங் குருதி வேட்கை
முரசுகடிப் பிகூஉ முதுக்குடிப் பிறந்தோன்
திருவிழை மூதூர் வாழ்கென் றேத்தி
வானமும் மாரி பொழிக மன்னவன்
கோணிலை திரியாக் கோலோ னாகுக
தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்

---

"ஏற்றுரி முரச நாண வெறிதிரை" (சீவக. ௨௧௪௨), "சாற்றிடக் கொண்ட வேற்றுரி முரசம்" (பெருங். ௧. ௫௮. ௧௦௦), "ஏற்றுரி முரசினிறைவனை மூதூர்க்கு" (பெருங். ௧. ௪௩. ௧௪௫) இடியுறு முழக்கின் முரசு-இடியினது முழக்கம்போலும் முழக்கினையுடைய முரசு உறு உவமவுருபு, "தோளுற ஞாதெயவந் துணையாயத்துயா தீரத்தவாறும்" (சீவக. ௧௦) கூற்றுக்கண் விளிக்கும் முரசு-கூற்றை அழைக்கு முரசு, கண் அசைநிலையுமாம், "மீனக் கணற்றதன் சுனையே" (புறநா. ௧௦௩) குருதிவேட்கை முரசு - குருதிப் பலி கொள்ளும் விருப்பத்தையுடைய முரசு, "குருதி வேட்கை யுருகெழு முரசம்" (புறநா. ௫௦.) கடிப்பு - முரசடிக்குங் குறுந்தடி இகூஉம் - அறையும், புறநா. ௧௫௮.

௫௨ திருவிழை மூதூர் (மணி. ௫. ௫௪) வாழ்கென்று - வாழ்க வென்று.

௫௩ 'வானமும்மாரி' முதலியன முரசறைவோன் கூற்று வானம் - மேகம் மாரி - மழை.

௫௪ கோணிலை திரியாக் கோலோன் ஆகுக - கோள்கள் நிற்கும் நிலை குலையாமைக்குக் காரணமாகிய செங்கோலையுடையோனாகுக, "கோணிலை திரிந்திடிற் கோணிலை திரியும்" (௭. ௮) என இந்நூலுள்ளும், "கோணிலை திரிந்து அரசுகோல் கோடி னென்றான்" (௨௫௫) எனச் சீவகசிந்தாமணியுள்ளும் வருதல் காண்க.

௫௫ தீவகச்சாந்தி - தீபசாந்தி; என்றது இந்திரவிழாவை, சம்புத்தீவகக் காவற்றெய்வம், முற்காலத்து இத்தீவிலுள்ளார்க்கு அசுரரால் வரும் தீங்கைப் பரிகரித்தற்பொருட்டு இந்திரனுக்குச் செய்தமையால் இவ்விழா இப்பெயர் பெற்றது, "நாவ லோங்கிய மாபெருந் தீவினுட் காவற் றெய்வதந் தேவர்கோற் கெடுத்த, தீவகச்சாந்தி" (மணி. ௨. ௧-௩), இனி, நகரத்திற்கு உள்வருந் தீங்குகளைப் பரிகரித்தற் பொருட்டுச் செய்யப்படும் இவ்விழா, தீவிற்குச் செய்வதனோடொக்கு மென்பது பற்றித் தீவகச்சாந்தி யெனப்பட்டதெனினுமமையும், இவ்வூரம்பலத்தை, "உலகவறவி" (௭. ௫௫, ௧௭. ௭௮, ௮௫) என இந்நூலுள்ளும், இவ்வூர் வாயிலை, "உலகவிடைகழி" (௧௦. ௨௭) எனச் சிலப்பதிகாரத்துள்ளும், இவ்வூரரசனை, "உலகமன்னவன்" (௫. ௪௫) என இந்நூலுள்ளும் கூறியிருத்தல் காண்க.

(பி-ம்.) ௫௧ 'கடிப்பிகூஉம்' ௫௩ 'வானமும் மாரியும்' ௫௫ 'தீபசாந்தி', 'தீவகசாந்தி'

ஆயிரங் கண்ணோன் றன்னோ டாங்குள
நாலவேறு தேவரு நலததகு சிறப்பிற
பாலவேறு தேவரு மிபபதிப படாநது
மனனன் கரிகால வளவனீங கியநாள
இநநகா போலவதோ ரியலபின தாகிப
பொனனகா வறிதாப போதுவ ரென்பது
தொன்னிலை யுணாநதோா துணிபொரு ளாதலிற்
றோரண வீதியுந தோமறு கோடடியும
பூரண கும்பமும பொலமபா லிகைகளும
பாவை விளககும பலவுடன் பரபபுமின்
காயககுலைக் கமுகும வாழையும வஞசியும
பூககொடி வலலியுங கருமபு நடுமின்

---

௩எ. நால்வேறு தேவா-முபபதது மூவா ; அவா வசுககள எணமரும, திவாகரா பனனிருவரும, உருததிரா பதினொருவரும, மருததுவா இருவரும், முநத 167

௩அ பாலவேறு தேவா - பதினெண கணஙகள், பால - பகுதி படாநது - நினைநது

௩௯ கரிகால வளவன - புகாரையாணட ஒரு சோழன் நீஙகிய நாள - பகைவரை வெலல வடதிசையை நோககி அவன போன நாளில, " இருநில மருஙகின . . . புணணியத திசைமுகம போகிய வஙநாள " (௫ · அ௯ - ௯௪ ) என று சிலப்பதிகாரத்து வருதல காணக.

௪க பொனனகா - தேவலோகம வறிதா - வறுமையையுடையதாக ; தேவா பலரும விழாககாண இநநகாககு வநதுவிடுதலபறறி, இவவாறு கூறபபடடது

௪0 - ௪க ஆகி வறிதாவென்க.

௪௩. கோட்டி - சபை, கோயிலவாயிலென்பா சிலப்பதிகார அரும் பதவுரையாசிரியர், ௩0 ௬உ

௪௪ பொலம பாலிகை - பொறபாலிகை

௪௫. பாவை விளககு - பிரதிமை விளககு, " பாவை விளககுபபசும பொற்படாகை " (சிலப் ௫. க௫௪ ) உடன பரபபுமின் - ஒருஙகு பரபபுமின்

௪௬. வஞ்சி - மரவிசேடம, கொடிவிசேடமுமாம், வஞசிநகாததை, " பொற்கொடிப பெயாபபடூஉம பொனனகா " (உ௬ : ௯உ) என று பினபு கூறுதல காணக

௪எ. பூக்கொடிவலலி யெனறூா, துகிற்கொடியை மாறறுதறகு, " கதலிகைக கொடியுங காழூன்று விலோதமும் " (மணி. க . ௫உ )

(பி - ம்) ௩அ. 'இபபதியடாநது' ௪உ . 'சொனனிலை' ௪௩ 'தோட் டியும்' ௪௬ 'வாழைககதலியும வஞ்சியும' ௪எ. 'கருமபொடு நடுமின்'

பத்தி வேதிகைப் பசும்பொற் றூணத்து
முத்துத் தாம முறையொடு நாற்றுமின்
விழவுமலி மூதூர் வீதியு மன்றமும்
பழமணன் மாற்றுமின் புதுமணற் பரப்புமின்
கதலிகைக் கொடியுங் காழூன்று விலோதமும்
மதலை மாடமும் வாயிலுஞ் சேர்த்துமின்
நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறாக
வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை
ஆறறி மரபி னறிந்தோர் செய்யுமின்
தண்மணற் பந்தருந் தாழ்தருப் பொதியிலும்
புண்ணிய நல்லுரை யறிவீர் பொருந்துமின்

---

௪அ பத்தி - வரிசை. வேதிகை - திண்ணை. தூணம் - தூண்.

௪௯ தாமம் - மாலை.

௫0 மன்றம் - ஊர்க்கு நடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தினடி; "மன்றமும் பொதியிலும்" (புறநா. உ௨௯.)

௫௨ கதலிகைக்கொடியும் காழூன்று விலோதமுமென்பன துகிற் கொடி விசேடங்கள். காழ் - காம்பு.

௫௩ மதலை - கொடுங்கை, பற்றுக்கோடுமாம்.

௫௪. நுதல்விழி நாட்டத்திறையோன் - இறைவி கண்புதைத்த பொழுது நெற்றியிற் புறப்பட விட்ட கண்ணையுடைய தலைவன், என்றது சிவபெருமானை. விழிநாட்டம் - வினைத்தொகை. இனி, நுதலில் இமையா நாட்டமென்றுமாம். "நுதல்விழி நாட்டத்திறையோன் கோயிலும்" (சிலப். க௪ எ)

௫௫ சதுக்கத்துத் தெய்வம் - சதுக்கப் பூதம், என்றது, முன்னாகக் கூறிய அறுவகை நரகரைப் புடைத்துண்ணும் பூதத்தை; சதுக்கம் - நாற் றெருக்கூடுமிடம்.

௫௬ செய்வினை - செய்வினையை.

௫எ ஆறறிமரபினறிந்தோர் - நிருத்தம் முதலிய ஆறங்கங்களையும் உணர்ந்த முறைமையையுடைய அந்தணர்; "ஆறறியந்தணர்க்கு" (கலி கட வுள்), ஆறு - வழியுமாம். அறிந்தோர் - முன்னிலைப்பெயர்.

௫அ பொதியில் — அம்பலம். ௫௯ புண்ணிய நல்லுரை - தரும பதம்.

(பி - ம்) ௪௯ 'முத்தத்தாம முகையொடு' ௫௧ 'பழமணற்பாற்று மின' ௫௨ 'கதலிக்கொடியும்' ௫௫ 'சதுக்கத்தெய்வம்' ௫அ, 'தண்மணப் பந்தர' ௫௯ 'அறிந்தோர் பொருந்துமின்'

௬0 ஒட்டிய சமயத் துறைபொருள் வாதிகள்
பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்
பற்று மாக்க டம்முட னாயினும்
செற்றமுங் கலாமுஞ் செய்யா தகலுமின்
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையும்
௬௫ தண்மணற் றுருத்தியுந் தாழ்பூந் துறைகளும்
தேவரு மக்களு மொத்துடன் றிரிதரும்
நாலேழ் நாளினு நன்கறிந் தீரென
ஒளிறுவாண் மறவருந் தேரு மாவும்
களிறுஞ் சூழ்தரக் கண்முர சியம்பிப்
௭0 பசியும் பிணியும் பகையு நீங்கி
வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி

௬0 ஒட்டிய - சபதஞ்செய்த பொருள் - தத்துவம்

௬௧ பட்டிமண்டபம் - வித்தியாமண்டபம், ஓலக்கமண்டபமென்றும் கூறுவர், "பட்டி மண்டப மேற்றினை யேற்றினை" (திருவா சதகம் ௪௯), "பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்" (சிலப் ௫. ௧0௨), "புனைருங் கலைதெரி பட்டி மண்டபம்" (கம்ப நகர ௬௨) பாங்கு - உரிய இடம்

௬௨ பற்றுமாக்கள் - பகைவர்

௬௩ செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழுமகோபம், "செற்ற நீக்கிய மனத்தினர்" (புறநா ௬௩௨) கலாம் - போர், "புலாற்களஞ் செய்த கலாஅத் தானையன்" (புறநா ௬௯)

௬௫ துருத்தி - ஆற்றிடைக்குறை தாழ்பூந்துறைகள் - ஆழ்ந்த பொலிவினையுடைய நீர்த்துறைகள்

௬அ ஒளிறுவாள் - விளங்குமவாள், "ஒளிறுவாண் மன்னர்" (புறநா ௧௭௭) மறவர் - வீரர்

௬௯ கண்முரசு - முகத்தையுடைய முரசம், "கடிப்பிகு கண்முரசம்" (நாலடி ௧00), முரசின் முகத்தைக் கண்ணென்றல் மரபு

௭0 பகை - உட்பகை

௭௧ மழையும் செல்வமும் சுரக்கவென்று வாழ்த்தி

௭0 - ௭௧ ழ "பசியும் பிணியும் பகையு நீங்கி, வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி" (சிலப், ௫ ௭௨ - ௩)

(பி - ம்) ௬0. 'ஒட்டிய துறைபொரு ளுணர்ந்த வாதிகள்' ௬அ 'வெளிறு வாண்மள்ளரும்' ௬௯ 'இயம்ப'

அணிவிழா வறைந்தன னகங்கா மருங்கென
க—விழாவறை காதை முற்றிற்று

எ௨ அகங்கா - உளங்கா, என்றது பட்டினப்பாக்கத்தை

க - எ௨ அருந்தவன் உரைப்பச் செம்பியன் விண்ணவர் தலைவனை நாலேழ்நாளினும் வான்பதிதன்னுள் உறைகென அவனோந்ததைக் கேள்வி யோர் கடவாராதலின், சமயக்கணக்கர் முதல்யோர் குழீஇ 'மறப்பின் இடுமைப் செயதிடும், பொருந்தாதாயிடும், காலகொள்க' என, முதுகுடிப் பிறந்தோன் முரசத்தை ஏற்றி இயம்பி எத்திசை சுரக்கென வாழ்த்திப் பொழிக, ஆகுக, நனகறிந்தீர், துணிபொருளாதலின் நாலேழ் நாளினும் பரப்புமின், நடுமின், நாற்றுமின், மாற்றுமின், பரப்புமின், சோத்துமின், செய்யுமின், பொருந்துமின், ஏறுமின், அகலுமின் என அகங்காமருங்கு விழாவை அறைந்தனனெனக

(பி - ம்) எ௨ 'அகனமர் மருங்கென'

---

இரண்டாவது
# ஊரலருரைத்த காதை

[இரண்டாவது ஊரலருரைத்தபாட்டு]

நாவ லோங்கிய மாபெருந் தீவினுட
சாவற் றெய்வத்ந் தேவர் கோற் கெடுத்த
தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்
மணிமே கலையொடு மாதவி வாராத
ரு தணியாத் துன்பந் தலைத்தலை மேல்வரச்
சித்திரா பதிதான் செல்லலுற் றிரங்கித்
தத்தரி நெடுங்கட டன்மக டோழி

---

க நாவலோங்கிய மாபெருந்தீவு - சம்புத்தீவு, இது மகாதவீபம் நான்கனுள் ஒன்றாதலின் மாபெருந்தீவெனப்பட்டது, இக்கருத்து, "நால் வகை மரபின் மாபெருந் தீவும" (மணி க: கசுகு) என்பதனால் விளங்கும்

ரு நாள - நாளில் பூ. "தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்" (மணி க. ருகு.)

(பி - ம்) ரு. 'தீபசாந்தி செய்தரு மநநாள்' சு 'மாதவிபாரா'

வயநத மாலையை வருகெனக் கூஉயப
பயங்கெழு மாநக ரலரொடுத துரையென
வயநத மாலையு மாதவி துறவிக
கயாநதுமெய வாடிய வழிவின ளாதலின்
மணிமே கலையொடு மாதவி யிருநத
அணிமலா மணடபத தகவயிற செலீஇ
ஆடிய சாய லாயிழை மடநதை
வாடிய மேனி கண்டுளம வருநதிப்
பொன்னே ரனையாய புகுநதது கேளாய்
உன்னோ டிவவூ ருறறதொன றுணடுகொல
வேததியல பொதுவிய லெனறிரு திறததுக
கூத்தும் பாட்டுந் தூககுந துணிவும

---

அ கூஉய - அழைதது

க பயம - பிரயோசனம அலா - பலாறிய நிகழ்த்தும பழிமொழி உரையென - அலரை மாதவிககுச சொலலெனறு சிததிராபதி சொலல

க0 துறவிககு - துறவுககு

கக அயாந்து - மனநதளாநது அழிவினள - வருததமுடையாள

கரு. மலாமண்டபம - பூதொடுககும் மண்டபம். அகவயிறசெலீஇ - உள்ளிடததே சென்று.

கச சாயல - மெனமை மடந்தை - மாதவியினது.

கரு வாடியமேனி - தவததால வாடிய மேனியை.

கசு பொன - திருமகள , 'பொனனேரனையாய' எனபது முதலியன வயநதமாலை கூறறு புகுநதது - சமபவிததது.

கஎ உறறதொன றுணடுகொல-உறறதாகிய பகைமை ஒன றுணடோ.

கஅ வேததியல - அரசாககு ஆடுங கூததது , பொதுவியல் - எல்லாாககும ஒபப ஆடுங கூததது , திறம - வகை , "வேததியல பொதுவியலென றிரு திறததுக, மாததிரை யறிநது மயஙகா மரபி, னூடலும" (சிலப் கச கசஅ - கூ0.)

கக பாட்டு - இசை. தூககு - தாளங்களின் வழியே வரும செந தூககு முதலிய எழு தூககுகள் , "ஒருசீா செநதூக கிருசீா மதலை, முச சீா துணிவு நாற்சீா கோயி, லைஞ்சீா நிவபபே யறுசீா கழாலே, யெழுசீா நெடுநதூக கெனமனூா புலவர்" எனபதனாலுணர்க. துணிவு - தாளவறுதி.

(பி - ம்.) அ. 'வசநத' க. 'அகன்கெழு மன்னக ரலர்படுத்துரை யென' க0. 'துறவிறகு' கஎ. 'நினனோ டிவ்வூா நினறதொனறுணடு கொல்'

பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலும்
தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலும்
கந்துகக் கருத்து மடைநூற் செய்தியும்
சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும்
பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமும்
காயக் கரணமுங் கண்ணிய துணர்தலும்
கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும்
வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலும்
கோலங் கோடலுங் கோவையின் கோப்பும்
காலக் கணிதமுங் கலைகளின் றுணிவும்

---

உ0 யாழ்க்கரணம் - யாழுக்குரிய செய்கை. பாடைப் பாடல் - அக நாடகங்களுக்கும் புறநாடகங்களுக்கும் உரிய உருக்கள்

உக கருவி - வாச்சியம். குழல் - புல்லாங்குழல்

உஉ கந்துகம் - பந்து. மடைநூல் - பாகசாத்திரம்

உ௩ சுந்தரச்சுண்ணம் - நிறத்தையுடைய வாசனைப்பொடி, "சுந்தரச் சுண்ணத்து" (சிலப். ௫ கஉ௫)

உ௪. பாயற்பள்ளி - பாயலிடம். பருவத்தொழுக்கம் - காலங்கட்கேற்ப ஒழுகும் ஒழுக்கம், பருவம் - இருது

உ௫ காயக்கரணம் - காயத்தாற் செய்யப்படும் அறுபத்து நான்கு வகைச் செய்கை. கண்ணியதுணர்தல் - பிறர் கருதியதை அறிந்து கொள்ளுதல்

உ௬ கட்டுரைவகை - தொடுத்துக்கூறும் சொல்வன்மை. கரந்து உறை கணக்கு - மறைந்துறையும்வகை, "அடிசில் வினையும் யாழினதுறையும், கடிமலர்ச் சிப்பமுங் கரந்துறை கணக்கும், வட்டிகை வரைப்பும் வாக்கின விகற்பமும், கற்றவை யெல்லாங் காட்டுமி னமக்கென" (பெருங் க ௩௪: கக௬ - ௯)

உஎ வட்டிகை - எழுதுகோல், "வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவை" என்பர் பின்னும், ௪ : ௫எ.

உஅ. கோலம் - அவ்வக்காலங்கட் கேற்பக் கொள்ளும் ஒப்பனை, "இரவிற்கோர், கோலங் கொடியிடையார் தாங்கொள்ள" (சிலப். க ௩ - ௪) கோப்பு - கோத்தல்

உ௯ காலக்கணிதம் - சோதிடம், "ஆயுள் வேதருங் காலக் கணிதரும்" (சிலப். ௫ : ௪௪) கலைகள் - பரதத்தையாக்குரியவென்று நூல்களிற் கூறப்பட்ட யாழ்வாசினை முதலிய அறுபத்துநான்கினுள் இப்பாட்டில

(பி - ம்) உ0. 'பண்ணியாழ்க்கானமும்', 'பண்ணியாழ்த்தானமும்' உக. 'தாழ்ந்தீங்குழலும்' உ௫. 'கண்ணியதுரைத்தலும்' உ௬. 'கரந்துரை கணக்கும்' உஅ 'கோவையுங் கோப்பும்'

நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த
ஓவியச் செந்நூ லுரைநூற் கிடக்கையும்
கற்றுத் துறை போகிய பொற்றொடி நங்கை
நற்றவம் புரிந்தது நாணுடைத் தென்றே
அலகின் மூதூ ரான்றவ ரல்லது
பலர்தொகு புரைக்கும் பண்பில் வாய்மொழி
நயம்பா டில்லை நாணுடைத் தென்ற
வயந்த மாலைக்கு மாதவி யுரைக்கும்
காதல னுற்ற கடுந்துயர் கேட்டுப்
போதல் செய்யா வுயிரொடு நின்றே
பொற்கொடி மூதூர்ப் பொருளுரை யிழந்து

---

முன்னும் பின்னுங் கூறுதொழிந்த கலைகள், பரத்தையர்க்குரிய கலைகளை அறுபத்து நான்கென்பதைப் பின்வருவனவற்றாலுணர்க. "யாழ்முதலாக அறுபத்தொருநான்கு, ஏரிள மகளிர்க் கியற்கையென்ன றெண்ணிய கலையுற வகுத்த காமக் கேள்வி" (பெருங். ௧ ௩௫ ௮௪ - ௬), "கலைவலார் நெஞ்சிற் காமமே போன்றும்" (சீவக. ௨௧௦௭), "பண்ணுங் கிளையும் பழித்த தீஞ்சொல், எண்ணெண் கலையோ ரிருபெரு வீதியும்" (சிலப். ௧௪ ௧௬௬ - ௭), "எண்ணெண் கிரட்டி யிருங்கலை பயின்ற மடந்தையர்" (சிலப். ௨௨ ௧௩௮ - ௯)

௫௦ நன்கனம்வகுத்த - நன்றாக வகுக்கப்பட்ட, "நாணமு முடையு நன்கன நீத்து" (௩ ௮௮) எனவும், "நாவிடை நன்னூ னன்கன நவிற்றி" (௧௩ ௨௪) எனவும், "நாத்தொலை வின்றி நன்கன மறிந்தபின்" (௧௩ ௨௬) எனவும் நன்கனமென்பது இப்பொருள்பட இந்நூலுள்ளே பயின்றுவருதல் காண்க.

௫௧ ஓவியச்செந்நூல் - ஓவியநூல், இப்பெயருள்ள நூல் ஒன்றுண்டென்பது, "ஓவியநூலுள் நிற்றல் இருத்தல் கிடத்தல் இயங்குதலென்னும் இவற்றின் விகற்பங்கள் பலவுள" (சிலப். ௮ ௨௫ - ௬, அடியார்.) என்பதனாலறியலாகும்.

௫௨ துறைபோகிய - கற்றவைகளிற் கைதேர்ந்த.

௫௨ - ௫ நற்றவம்புரிந்தது நாணுடைத்தென்று பலர் கூடி உரைக்கும் வாய்மொழியெனக்.

௫௬ நயம்பாடில்லை - அழகுண்டாதலில்லை.

௫௮ காதலன் - கோவலன். கடுந்துயர் - மிக்க துயர், என்றது கொலையுண்டதை, "கணவற் குற்ற கடுந்துயர்" (௨ ௫௦), "காதலனுற்ற கடுந்துயர்" (௨. ௬௬) என்பர் பின்னும், "கண்டா ளவன்றன்னைக் காணாக் கடுந்துயரம்" (சிலப். ௧௯ ௩௮)

௬௦ பொருளுரை - புகழுரை.

(பி - ம்.) ௫௪ 'அலகைமூதூர்' ௫௬ 'நலம்பாடில்லை' ௫௯. 'போதல் செல்லாவுயிரொடுநின்றே'

நறறொடி நஙகாய் நாணுத் துறந்தேன்
காதல னிறப்பிற் கனையெரி பொததி
ஊதுலைக் குருகி னுயிாததகத் தடஙகா
தின் னுயி ரீவ ரீயா ராயின்
சரு நனனீாப பொய்கையி னளியெரி புகுவா

---

சக நஙகாயென்றது வயநதமாலையை

௩அ - சக கேட்டு நின்று இழநது துறந்தேனென்க

சஉ கனையெரி - மிககநெருபபு, " கனையெரி யுரறிய மருஙகும " (புறநா உரு) பொததி - மூட்டி, " கானவா பொததிய ஞெலிதீ விளக கதது " (புறநா. உசள)

சரு ஊதுலைக குருகின உயிாதது - உலையிலூதும துருததிமூககைப போலவே அழலெழவுயிாதது, " காதலாப பிரிநத நோயோ டிளஙகனன, றூதுலைக குருகி னுயிாததன ரொடுஙகி " (சிலப் ச ருஅ - கூ), ' காதலற கெடுதத நோயோ டுளஙகனன, றூதுலைக குருகி னுயிாததனள் " (சிலப். உஉ கருக - உ)

சச இனனுயிரீவா - இனியஉயிரைக கொடுபபாா, எனறது, காதல ரிறநதமை கேட்டபொழுதே இறபபரெனறபடி, பாணடியன நெடுஞ்செழிய னிறபப அவன மனைவியாகிய பெருஙகோபபெணடும உடனே இறநத சரிததிரம இஙகே அறியததககது, அதுவருமாறு. " அரிமானேநதிய வமளி மிசை யிருநத, திருவீழ் மாாபிற றெனனா கோமான, றயஙகிணாக கோதை தனறுயா பொறுஅன மயஙகினன கொலலென மலரடி வருடித, தலைத்தா ணெடுமொழி தனசெவி கேளாள, கலககங கொளளாள கடுநதுயா பெறு அள, மனனவன செலவுழிச செலக யாளெனத, தனனுயிா கொணடவ னுயிாதே டினள்போற, பெருஙகோப பெணடு மொருஙகுடன மாயந தனள " (சிலப் உரு எஅ - அகூ), இவவாறிறததலை மூதானநதமெனபா, " கயலோ கணணி கணவனொடு முடிய, வியனெறிச செலவோா வியநது ரைத தனறு ", " ஒருயி ராக வுணாகவுடன கலநதோாக, கீருயி ரெனப ரிடைதெரியாா - போரில, விடனேநதும வேலோறகும வெளவளையி னுட்கு, முடனே யுலநத துயிா " (பு - வே உகூஉ)

சஉ - ரு நளியெரி - செறிநதநெருபபு, " நனமர னளிய நறுநதண சாரல " (புறநா கருo) காதலிரிறபபிற பொயகையிற புகுவதுபோலச செறிநத நெருபபிற் புகுவா பததினிபபெணடிா, " பெருநதோட் கணவன மாயநதென வருமபற, வளளிதழ் அவிழ்நத தாமரை, நள்ளிரும பொய்கையுந தீயுமோ ரறறே " (புறநா உசகூ), கணவரை யிழநத பததினிபபெண டிாககுப பொயகையுந தீயும ஒரு தன்மையின வெனறபடி

சச - ரு பினவரும வாககியததில இவவடிகளின கருதது அமைந திருததல காணக " காதலன வீயக கடுநதுய ரெயதிப, போதல் செயயா வுயிரொடு புலநது, நளியிரும பொயகை யாடுநா போல, முளியெரி புகூஉ முதுககுடிப பிறநத, பததினிப பெணடிா " (மணி கஅ. கக - ரு)

(பி - ம்) சரு ' பொயகையினரி னியடு '

களியெரி புகாஅ ராயி னன்பரோ
டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்
தத்திறத் தாளு மல்லளெம் மாயிழை
கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅள்
மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக்
கண்ணீ ராடிய கதிரிள வனமுலை
திண்ணிதிற் றிருகித் தீயழற் பொத்திக்
காவலன் பேரூர் கனையெரி மூட்டிய
மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை
அருந்தவப் படுத்த லல்லது யாவதும்
திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்

---

சஎ நோற்றுடம் படுவர் - கைம்மை நோன்பை நோற்று உடம்பை வருத்துவர் கைம்மைநோன்பு இன்னதென்பதைப் பின்வரும் மேற்கோள்களாலுணர்க. "வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட, வேளை வெந்தை வல்சி யாகப், பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியு, முயவற் பெண்டிர்" (புறநா. உசசு), "இன்புறு தங்கணவ ரிடரெரி யகமூழ்கத், துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப்போல" (சிலப். கஅ கூச - ரு.)

சஅ பரப்புநீர் - கடல்

சகூ ஆயிழை - கண்ணகி

ருக. சிறுபுறம் - பிடர், "செய்த்தகு கோவையிற் சிறுபுற மறைத்து" (சிலப். சு கoஉ) புதைப்ப - மறைப்பக் கூந்தல் அவிழ்ந்து கிடப்ப வென்றபடி

ருஉ - ௩ முலைதிருகி - இடமுலையை வலக்கையாற்றிருகி, "இட முலை கையாற் றிருகி" (சிலப். உக சங) அழற்பொத்தி - அழலை மூட்டி

ருச காவலன் பேரூர் - பாண்டியனது பெரிய ஊராகிய மதுரையை

ருரு மாபெரும்பத்தினி - கண்ணகி,

ருசு அருந்தவப்படுத்தலல்லது - செய்தற்கரிய தவவழியிற் செலுத்தலையன்றி யாவதும் - சிறிதும்

ருஎ. திருந்தாச்செய்கைத் தீத்தொழில் - பரத்தைமைத்தொழில், "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு, முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை, தலைமையாகக் கொண்டனின் றனமையில் வாழ்க்கை" (உச : எஎ - க) என்று சித்திராபதியை நோக்கி இராசமாதேவி பரத்தைமையை இழித்துச் சொல்லியதாகப் பின்னுங் கூறுவர்.

ருரு - எ மணிமேகலை தவவழியிற் சேர்க்கப்படுவாளன்றிப் பரத்தை

(பி - ம்) சஎ. 'நோற்றுடன்படுவர்' ருஉ 'கண்ணீராட்டிய' ருசு 'அருந்தவமபடுத்தலல்லது'

மூன்றாவது

# மலர்வனம்புக்க காதை

[மூன்றாவது மலர்வனம்புக்க பாட்டு]

வயந்த மாலைக்கு மாதவி யுரைத்த
உயங்குநோய் வருத்தத் துரைமுன் றோன்றி
மாமலர் நாற்றம் போன்மணி மேகலை
ஏது நிகழ்ச்சி யெதிர்ந்துள தாதலின்
ரு தந்தையுந் தாயுந் தாநனி யுழந்த
வெந்துய ரிடும்பை செவியகம் வெதுப்பக்
காத னெஞ்சங் கலங்கிக் காரிகை
மாதர்ச் செங்கண் வரிவனப் பழித்துப்

---

க - உ. உரைத்த உரைமுன் றோன்றி - சொல்லிய சொல்லினிடமாக உதித்து.

ச. கன்மங்களாகிய காரணங்கள் தத்தம் பயனைக் கொடுத்தற்குத் தோற்றுதலை, 'ஏது நிகழ்ச்சி' என்பது பௌத்தநூல் வழக்கு; இதனை ஹேதுப்ரபவ தர்மமென்பர், "ஏது நிகழ்ச்சி யீங்கின் றாதலின்" (கூ: ருக), "ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள" (கஉ: க0ரு), 'ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள" (உக: கசு0) என இந்நூலுள்ளே இப்பெயர் பின்பும் வருதல் காண்க. இஃது 'ஏது' எனவும் வழங்கும். எதிர்ந்துளதாதலின் - தோற்றியதாதலால், "சுணங்கெதிரிளமுலை" (மதுரைக். சகசு)

உ - ச. மணிமேகலைக்கு ஏது நிகழ்ச்சி மலர்நாற்றம்போலத் தோன்றி எதிர்ந்துளதாதலினென இயைக்க.

ரு. தந்தையும் தாயும் - கோவலனும் கண்ணகியும். உழந்த - வருந்திய.

சு. வெதுப்ப - சுட. எ. காரிகை - மணிமேகலை.

அ. மாதர் - காதல்; உரிச்சொல், "மாதர் காதல்" (தொல். உரி. ஙரு) வரிவனப் பழித்து - மையெழுதிய அழகைச் சிதைத்து, "வரிவனப் புற்ற" (புறநா. ருரு)

(பி - ம்.) ச 'ஏது நிகழ்ச்சி செய்திரந்துளது' ரு 'தாயருந்தாந் துயருழந்த' 'தாழ்துயருழந்த' அ 'வனப்பழிந்து'

புலம்புநீ ருருட்டிப் பொதியவிழ் நறுமலர்
இலங்கிதழ் மாலையை யிட்டுநீ ராட்ட
மாதவி மணிமே கலைமுக நோக்கித்
தாமரை தண்மதி சேர்ந்தது போலக்
காமர் செங்கையிற் கண்ணீர் மாற்றித்
தூநீர் மாலை தூத்தகை யிழந்தது
நிகர்மலர் நீயே கொணர்வா யென்றலும்
மதுமலர்க் குழலியொடு மாமலர் தொடுக்கும்
சுதமதி கேட்டுத் துயரொடுங் கூறும்
குரவர்க் குற்ற கொடுந்துயர் கேட்டுத்
தணியாத் துன்பந் தலைத்தலை யெய்த
மணிமே கலைதன் மதிமுகந் தன்னுள்
அணிதிகழ் நீலத் தாய்மல ரோட்டிய
கடைமணி யுகுநீர் கண்டன னாயிற்
படையிட்டு நடுங்குங் காமன் பாவையை

---

௯ புலம்புநீருருட்டி - வருத்தத்தால் உண்டாகிய கண்ணீரை உதிர்த்து, தனித்து வீழ்கின்ற கண்ணீர்த்துளியுமாம்

௭ - ௧0 காரிகை அழித்து மாலையை நீராட்ட

௧௨ தாமரை எழுவாய் மதி - மதியை தாமரைமலர் மாதவி கைக்கும், மதி மணிமேகலை முகத்திற்கும் உவமை.

௧௩ காமர் - விருப்பம்

௧௪ தூய நீர்மையையுடைய மாலையானது கண்ணீரில் நனைந்து தூய தன்மையை யிழந்தது

௧௫ நிகர்மலர் - ஒளியையுடைய மலர், "நீர்வார் நிகர்மலர் கடுப்ப" (அகநா ௧௧), "அரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்" (சிலப் ௯ ௧ - ௨)

௧௬ மதுமலர்க்குழலி - மணிமேகலை

௧௮ குரவர்க்கு - தாய் தந்தையர்க்கு

௨௨ கடைமணி உகுநீர் - கண்மணிக் கடையினின்றும் உகுகின்ற நீர், "ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுட" (சிலப் ௨0 ௫௪)

௨௫ படையை எறிந்துவிட்டுக் காமன் நடுங்குவான் (கலி 109)

(பி - ம்) ௯ 'புலம்புநீருட்டி' ௧0 'இலங்குதண்மாலையை யிடு நீராட்ட', 'இநங்நீராட்ட'

ஆடவர் கண்டா லகறலு முண்டோ
பேடிய ரன்றோ பெற்றியி னின்றிடின்
ஆங்கவ ளன்றியு மணியிழை கேளாய்
எங்கிந் நகரத் தியானவருங் காரணம்
பாரா வாரம் பல்வளம் பழுநிய
காரா ளர்சண் பையிற் கௌசிக னென்போன்
இருபிறப் பாள னொருமக னுள்ளோன்
ஒருதனி யஞ்சே னோரா நெஞ்சமோ
டாரா மத்திடை யலர்கொய வேன்றனை
மாருத வேகனென் பானோர் விஞ்சையன்
திருவிழை மூதூர் தேவர்கோற் கெடுத்த
பெருவிழாக் காணும் பெற்றியின் வருவோன்
தாரன் மாலையன் றமனியப் பூணினன்

---

உச உண்டோ, ஓ எதிர்மறை

உரு பெற்றியின் - தம் இயற்கைத்தன்மை திரியாமல் நின்றிடின் - இவளை விரும்பாது நிற்பாராயின்

உசு ஒப்பு மணி. உ ருஅ

உசு - எ யானவருங் காரணத்தைக் கேளாய்

உஅ - கூ பாராவாரம் - கடல் பழுநிய - முதிர்ந்த, "பெருவளம் பழுநி" (புறநா ககூ) காராளர் - பூவைசியர் சண்பை ஒரு நகரம், சீகாழியுமாம், அங்கநாட்டிற் கங்கைக்கரையிலுள்ளதாகிய சம்பையென்னும் நகரமுமாம், இவ்வுரைக்குக் காராளரென்பதனைக் காராளரென்பதன் விகாரமாகக் கொள்க, காராளர் - ஒரு சாதியார்

உகூ பூ மணி எ க0உ

௩க ஒருதனி - ஒப்பில்லாத்தனி, மிக்க தனிமை

௩உ ஆராமம் - உபவனம் ௩௩ விஞ்சையன் - வித்தியாதரன்

௩ச மூதூர் - காவிரிப்பூம்பட்டினம்

௩ரு - எ தாரன் பூமாலையை யுடையவன் மாலையன் - மணிமாலையை யுடையவன் 'தார மாலையன்' என்ப பாடமோதி, மந்தார மாலையையுடையவனெனினுமமையும் தமனியப் பூணினன் - பொற்பூணினையுடையவன் பாரோர் காணா - மக்கள் கண்ணிற்குப்புலப்படாத பலர் தொழுபடிமையன் - தேவர் பலருந் தொழும் தெய்வவடிவையுடையன் படிமை - தெய்வவடிவு, பூ "தாரன் மாலையன் றமனியப்பூணினன், பாரோர் காணாப் பலர் தொழு படிமையன்" (சிலப் கரு கருஎ - அ)

(பி - ம்) உஅ 'பாராவாரப்பல்வளம்' உகூ காரானசண்பை' ௩உ 'அலர்கொயவேனை'

பார்ப்போர் காணாப் பலர்தொழு படிமையன்
எடுத்தன னெற்கொண் டெழுந்தனன் விசும்பிற்
படுத்தன னாங்கவன் பான்மையே னாயினேன்
ஆங்கவ னீங்கெனை யகன்றுகண் மாறி
நீங்கினன் றன்பதி நெட்டிடை யாயினும்
மணிப்பூங் கொம்பர் மணிமே கலைதான்
தனித்தலர் கொய்யுந் தகைமைய ளல்லள்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்தர்
இலவந் திகையி னெயிற்புறம் போகின்
உலக மன்னவ னுழையோ ராங்குளர்

---

௩௬ - ௭ வருவோனும் படிமையனுமாகிய விஞ்சையன்.

௩௮ எடுத்தனன் - எடுத்து விசும்பிலெழுந்தனனெனக்.

௩௯ படுத்தனன் - அகப்படுத்திக்கொண்டான். அவன் பான்மையே னாயினேன் - அவனுடைய இன்பத்தின் பகுதியையுடையேனாயினேன், "பனியிரு விசும்பிற் றேவர் பான்மையிற் றென்று சொன்னாள்" (சீவக. ௫௫௩)

௪௦ - ௪௧ ஆங்கவன் - மாருதவேகன். ஈங்கு - இந்நகரத்திட்டுக் கண் மாறி என்னை அகன்று நீங்கினன் - விழித்த கண் இமைக்கும் அளவிலே மறைந்து என்னை விட்டு நீங்கினன், கண்மாறல் - விழித்த கண் இமைக்குமளவிலே மறைதல், "கண்மா றாடவ ரொடுக்க மொற்றி" (மதுரைக். ௬௪௨) தன்பதி நெட்டிடையாயினும் நீங்கினனெனக் கூட்டுக. சுதமதியை மாருதவேகன் இந்நகரத்தில்விட்டு நீங்கினனென்பதை, "அஞ்செஞ்சாய லராந்தா ணத்துளோர், விஞ்சைப் பிட்ட விளங்கிழை யென்றே, நலத்தென் போனாப் பலவோ ருரையீர்" (மணி. ௫. ௨௩-௫) என்று உதயகுமரன் கூறியவாற்றானு முணர்க.

௪௨ மணிப்பூங்கொம்பர் மணிமேகலை - மாணிக்கப் பூங்கொம்பு போலும் மணிமேகலை, எழுவாய்.

இனிப் பூக்கொய்தற்குரிய இடம் கூறுகின்றாள்.

௪௪ - ௫ பன்மலர்களை நிரைத்த நல்ல மர நிழலையுடைய இலவந்திகையினது மதிலின் புறத்தே சென்றால், மரப்பந்தர் - சோலையுமாம். இலவந்திகை - யந்திரவாவி, 'நிறைக்குறி னிறைத்துப் போக்குறிற் போக்கும் பொறிப்படை யமைந்த பொங்கில வந்திகை" (பெருங். ௧. ௪௦. ௩௧௧-௨), "இலவந்திகை - நீராவியைச் சூழ்ந்த வயந்தகச்சோலை, அஃது அரசனும் உரிமையுமாடும் காவற்சோலை" (சிலப். ௧௦. ௩௦-௩௧) என்பர் அடியார்க்கு நல்லார்.

௪௬ உலகமன்னவன் - சோழன். உழையோர் - பக்கத்திலுள்ளோர்.

(பி-ம்) ௩௯ 'பான்மையளானேன்' ௪௦ 'ஆங்கவனென்னை' ௪௩ 'கொய்யுந்தன்மையளல்லள்' ௪௪ 'நன்மலர்ப்பந்தர்'

விண்ணவர் கோமான் விழாக்கொண் ணன்னாள்
மண்ணவர் விழையார் வானவ ரல்லது
பாடுவண் டிமிரா பன்மரம் யாவையும்
வாடா மாமலர் மாலைகள் தூக்கலின்
கைபெய் பாசத்துப் பூதங் காக்குமென்
றுய்யா னத்திடை யுணர்ந்தோர் செல்லார்
வெங்கதிர் வெம்மையின் விரிசிறை யிழந்த
சம்பாதி யிருந்த சம்பா திவனமும்
தவாநீர்க் காவிரிப் பாவைதன் றாதை
கவேரனாங் கிருந்த கவேர வனமும்
மூப்புடை முதுமைய தாக்கணங் குடைய

---

௪௭ நன்னாள் - நன்னாளில்

௪௮ வானவரல்லது - தேவர் விரும்புதலையன்றி அல்லது மண்ணவர் விழையாரென இயைக்க

௪௯ தேவர்கள் விரும்பினமையால் மரங்களில் வண்டுகள் இமிரா வாயின, "சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்" (முருகு ௪௩)

௪௯ - ௫0 மரம் யாவையும் மாலைகளைத் தூக்கலின், தூக்குதல் - தொங்கவிடல் வாடாத மலர்மாலைகள் தேவர்களால் நிருமிக்கப்பட்டன, "வாடா மாலை வார்தளிர்ப் பிண்டி வாம்" (சீவக ௩0௧௮)

௫௧ கைபெய்பாசம் - கையிலிட்டுக் கொண்டபாசம் மரங்கள் வாடாமாலைகளைத் தூக்குதலால் பூதங்காத்தல் உணரப்பட்டது

௫௨ உய்யானம் - உத்தியானம், அரசர் விளையாடுங் காவற்சோலை, "உய்யா னத்தி னுறு துணை மகிழ்ச்சியும்" (சிலப். ௧௪ ௧௨௭)

௫௩ வெங்கதிர் - சூரியன்

௫௪ சம்பாதி - சடாயுவினுடன் பிறந்தவன் காவிரிப்பூம் பட்டினத்திற்கு அருகிலுள்ளதும் சம்பாதிபுரமென்று வழங்கப்படுவதுமாகிய புள்ளிருக்கு வேளூரிறைவனை, ஒரு யோசனை தூரத்திலிருந்து பூக்கொணர்ந்து சம்பாதி பூசித்தானென்று தெரிதலால் அவன் பூக்கொய்தவனம் இந்தச் சம்பாதிவனமாக இருத்தல் கூடுமென்று ஊகிக்கப்படுகின்றது

௫௫ - ௬ தாதையாகிய கவேரன், "கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய, தவாக்களி மூதூர்" (௯. ௫௨ - ௩) என்பர் பின்னும்

௫௭ மூ அகா எ ச முதுமைய - முதுமையையுடைய தாக்கணங்கு - தீண்டிவருத்துந் தெய்வம், "தாக்கணங்கு, தானைக்கொண்டன்ன துடைத்து" (குறள், ௧0௮௨), "வெம்முது பேய்க்கென் னுயிர்கொடுத்தேனே" (௬ ௧௩0) என்று பின்னும் வருதல் காண்க

௫௪ - ௭ சம்பாதிவனமும் கவேரவனமும் தாக்கணங்குடையன

(பி - ம்) ௫௨ 'சம்பாவனமும்'

யாப்புடைத் தாக வறிந்தோ ரெப்பதார்
அருளு மன்பு மாருயி ரோம்பும்
ஒருபெரும் பூட்கையு மொழியா நோன்பிற்
பகவன தாணையிற் பன்மரம் பூக்கும்
உவவன மென்பதொன் றுண்டத னுள்ளது
விளிப்பறை போகாது மெய்ப்புறத் திட்டும்
பளிக்கறை மண்டப முண்டத னுள்ளது
தூநிற மாமணிச் சுடரொளி விரிந்த
தாமரைப் பீடிகை தானுண் டாங்கிடின்
அரும்பவிழ் செய்யு மலர்ந்தன வாடா

௫௮ யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக, யாப்பு - உறுதி, "யாப்பறை மாக்க ளியல்பிற் கொள்ளார்" (சிலப். ௧௪ ௯0)

௫௯ அருள் - அன்புகாரணத்தால் தோன்றும் அளி; அன்பு - அருட்கு முதலாகி மனத்தின்கண் நிகழும் நேயம்

௬0 பூட்கை - மேற்கோள், "அறத்தாறு நுவலும் பூட்கை" (புறநா. ௩)

௬௧ பகவனது ஆணையின் - புத்தனது கட்டளையினாலே

௬௨ உள்ளது - உள்ளிடத்தது

௬௪ அதனுள்ளது - அம்மண்டபத்தின் உள்ளிடத்தது

௬௩ - ௪ விளிப்பு அறைபோகாது - ஓசை வெளிப்போகாமல் மெய்ப்புறத்து இடும் - தன்னைச்சார்ந்தாருடம்பைமட்டும் புறத்தே தோன்றுவிக்கும் பளிக்கறைமண்டபம் - பளிங்குமண்டபம்; தன்னுட் புகுந்தவர்களுடைய ஓசையை வெளிப்படுத்தாமல் அவர்களுருவத்தை மட்டும் வெளிப்படுத்துவதென்று அப்பளிங்கு மண்டபத்தின் தன்மை கூறியவாறு விளிப்பறை. இருபெயரொட்டுமாம், அறை - ஓசை

௬௨ - ௪ அதன் உள்ளதாகிய மண்டபமெனக் கூட்டுக

௬௫ - ௬ மணிச்சுடரொளிவிரிந்ததாமரைப்பீடிகை - மாணிக்கச்சோதி பரந்த பதுமபீடம், என்றது புத்தன் பாதபீடத்தை, புத்தன் பாதத்தை மணிபத்மமென்றலும், அதனை வழிபடுவோர் அதுபற்றி, 'ஓம் மணிபத்மே ஹூம்' என்ற மந்திரத்தை ஜபித்தலும் பௌத்தசமய மரபு

௬௬ ஆங்கு இடின் - அப்பீடத்தே இட்டால்

௬௪ - ௬. உள்ளதாகிய பீடிகையெனக்

௬௭ அவிழ்செய்யும் - மலர்தலைச் செய்யும்

௬௭ - ௮ தொல்யாண்டு கழியினும் வாடா மூசா வெனக் காலம் தொன்மையதாதலின், 'தொல்யாண்டு' என்றார்

(பி - ம்) ௬௨ 'அதினுள்ளது'

சுருமபின மூசா தொலயாணடு கழியினும
மறநதே னதன்றிற மாதவி கேளாய
சடமபூண்டோா தெயவங கருததிடை வைததோா
ஆஙகவ ரடிககிடி னவரடி தானுறும
நீஙகா தியாஙகணு நினைபபில ராயிடின
ஈஙகிதன் காரண மெனனை யெனறியேற்
சிநதை யினறியுஞ் செயவினை யுறுமெனும
வெநதிற னோனபிகள விழுமங கொளளவும
செயவினை சிநதை யின்றெனின யாவதும
எயதா தெனபோாக கேதுவாகவும
பயஙகெழு மாமல ரிட்டுக காட்ட
மயனபண டிழைதத மரபின ததுதான
அவவண மலா தணியிழை நினமகள
செவவனஞ் செலலுஞ் செமமை தானில

௬௬ மறநதேன — கம்ப 5. 3 34

௭0 கடமபூணடு - முறைமையால மேறகொணடு, "நிழலவாய நேமி, கடமபூண உருட்டுங கௌரியா" (சிலப் ௧௬ ௨-௨) ஓா தெயவம - ஒரு தெயவததை

௭௧ அவா - அததேவருடைய அடிககு ஆஙகு இடின - அடியின பொருட்டு (மலரை) அபபீடததே இட்டால அவரடி தானுறும - (அமமலா) அததேவருடைய அடியை அடையும

௭௨ நினைபபிலராய இடின யாஙகணும நீஙகாது

௭௪ - ௫ சிநதையினறியும செயவினை யுறுமெனும வெநதிறல நோனபிகள - மனமிலலாதிருககவும அறமும பாவமுமுளவாகுமெனறு சொலலுகினற வெவவிய திறலையுடைய விரதிகள விழுமஙகொளள வும - வருததஙகொளளவும

௭௬ - ௭ சிநதை யினறெனிற செயவினை யாவதும எயதாது என போாககு ஏதுவாகவும - மனமிலலையாயின அறமும பாவமும சிறிதும உள வாகாவெனறு கூறுவோாககுக கருவியாகவும

௭௪ - ௭ மனமுளதாயவழி வினையுமுளதாமெனபதும, மனமிலதாய வழி வினையுமிலதாமெனபதுமாகிய இவறறை ௬௧௬, ௬௧௭ - ஆம திருக்குறள் களாலும அவறறிறகுப பரிமேலழகரெழுதிய உரையாலும உணாக

௭௮ பயம - பயன ௭௯ அது - அபபீடிகை

௮௧ செவவனஞ் செலலும - நேராகச செலலும, வேறுகச செலலுமெனறுமாம, "திருமக ளிருககை செவவனங கழிநது" (சிலப் ௬ ௧௨௭)

(பி - ம்) ௬௮ 'சுருமபுமூசா' ௬௯ 'மறநதேனிதனறிற மாதவி மகள கேள்' ௭௧ 'ஆஙகவனடிக' ௭௮ 'பைஙகெழுமாமலரிட்டுக காட்டி'

மணிமேகலையொடு மாமலர் கொய்ய
அணியிழை நல்லார் யாரும் போகென்
றணிப்பூங் கொம்ப ரவளொடுங் கூடி
மணித்தேர் வீதியிற் சுதமதி செல்வுழிச்
சிமிலிக் கரண்டைய னுழைகோற் பிரம்பினன்
தவலருஞ் சிறப்பி னாரந் தாணத்துளோன்
நாணமு முடையு நன்கண நீத்துக்
காணா வுயிர்க்குங் கையறந் தேங்கி
உண்ணா நோன்போ டுயவ லியானையின்
மண்ணா மேனியன் வருவோன் றன்னை
வந்தீ ரடிகளும் மலரடி தொழுதேன்
எந்த மடிகளெம் முறை கேண்மோ
அழுக்குடை யாக்கையிற் புகுந்த நும்முயிர்

---

௮௪ அவளொடும் - மணிமேகலையோடும்

௮௬ சிமிலிக்கரண்டையன் - உறியிலே வைத்த குண்டிகையை யுடையன, "கலம்பெளிந் தன்ன விட்டுவாயக் கரண்டைப், பலபுரிச் சிமிலி நாற்றி" (மதுரைக் ௪௮௨ - ௩) நுழைகோற் பிரம்பினன் - நுண்ணிதாகத் திரண்ட பிரம்பையுடையன.

௮௭ தவலருஞ் சிறப்பின் ஆரந்தாணத்துளோன் - கேடில்லாத மேன்மையையுடைய ஆரந்தாணத்தேயுள்ளான், ஆரந்தாணம் - அருகத் தானம், என்றது சினாலயத்தை, "அருஞ்சுஞ் சாய லாரந்தா ணத்துள்" (மணி ௫ ௨௩)

௮௯ காணாவுயிர்க்குங் கையறந்தேங்கி - நுண்ணிய உடம்பையுடைய உயிர்கட்கும் நடத்தல் இருத்தல் கிடத்தல் நிற்றல் முதலிய தன்றொழில் களால் துன்பம் நிகழுமோவென்று செயலற்று ஏங்கி

௯௦ உயவல் - வருந்துதலையுடைய, "உயவற் பாண" (புறா ௬௧)

௯௧ மண்ணாமேனியன் - கழுவாத மேனியையுடையன், "கழுவா வுடலம்" (ஆளுடைய பிள்ளையார் திருவர். ௬, ௨௮), "மண்ணாவுடம்பு" (சீக ௨௧௧) வருவோன் றன்னைநோக்கி

௯௩. கேண்மோ - கேளும், ஓ அசைநிலை, "முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ", "மாமறை மாக்கள் வருங்குலங் கேண்மோ" (௧௫ ௫௬, ௯௫) என்று இந்நூலுள்ளே பின்பு வருதல் காண்க.

௯௪ அழுக்குடையாக்கையென்றான், மண்ணாமேனியாதலால்

(பி - ம்) ௮௬. 'சிமலி கரண்டைய னுழைத்தோற் பிரம்பினன்' ௮௭ 'அரந்தாணம்', 'ஆரந்தானம்' ௯௪ 'புகுந்தது', 'புகுந்து'

புழுக்கறைப் பட்டோர் போன்றுளம் வருந்தா
திம்மையு மறுமையு மிறுதியி லின்பமுந்
தன்வயிற் றருஉமென் றலைமக னுரைத்தது
கொலையுமுண் டோகொழு மடற்றெங் கின்
விளைபூந் தேறலின் மெய்த்தவத் தீரே
உண்டு தெளிந்திவ் யோகத் துறுபயன்
கண்டா லெம்மையுங் கையுதிர்க் கொண்மென
உண்ணா நோன்பி தன்னொடு சூளுற்
றுண்மென விரக்குமோர் களிமகன் பின்னரும்

---

௯௫ புழுக்கறைப்பட்டோர் - புழுங்கச்செய்யும் அறையில் அகப்பட்டோர்

௯௪ - ௫ நும்முயிர் பட்டோர்போன்று உளம் வருந்தாவண்ணம்

௯௬ - ௭ இம்மைப்பயன் முதலிய மூன்றையும் தன்வயிற் றருஉந் (௯௭) தேறலெனவும் (௯௯), உரைத்ததாகிய (௯௭) தேறலெனவும் (௯௯) இயைக்க, தருஉந் தலைமகனென்ன இயைபினுமமையும்

௧௦௦ யோகம் - மருந்து, சோகக்கையுமாம்

௧௦௧. எம்மையும் கையுதிர்க்கொண்மென - தேறலையன்றி எம்மையும் அகற்றிவிடுமென்று சீலமில்லாதவரைக் காணின், அவரோடு பேசாமல் அவரைப் போகும்படி கையசைத்துக் குறிப்பித்தல் சைன முனிவர்க்கு இயல்பு, இப்படியே, "மையறு படிவத்து மாதவர் புறத்தெமைக், கையுதிர்க் கோடலின்" (௫ ௫௪ - ௫) என்று பின்னும் வருதல் காண்க

௧௦௨ உண்ணாநோன்பி - இரண்டு உவாவும் அட்டமியும் முட்டுப்பாடும் பட்டினிவிட்டுண்ணும் விரதி, என்றது சைனமுனிவனை, "பட்டினி நோன்பிகள்" (சிலப் ௧௫ ௧௬௪) சூளுற்று - சபதஞ்செய்து

௧௦௩ உண்மென உண்ணுமென்று ஓர் களிமகன் பின்னரும் - ஒரு கட்குடியன் பின்னே நிற்போரும்

௯௬ - ௧௦௩ கரண்டையன், பிரம்பினன், உளோன் என்பன உண்ணா நோன்பிக்கு அடை, "துறக்கங் கூடினுந் துறந்திவ ணீங்கும், பிறப்போ வேண்டேன் யானெனக் கூறி, ஆர்த்த வாய ஹூரக்களி மூர்க்கன், செவ்வழிக் கீதஞ் சிதையப் பாடி, அவ்வழி வருமோ ரந்த ணாளனைச், செல்லலாளனை நில்லிவ ணீயென, எய்தச் சென்று வைதவண் விலக்கி, வழுத்தினே முண்ணுமிவ் வடிநறுந் தேறலைப், பழித்துக் கூறினை பார்ப்பனக் கண்மது, சொல்லா யாயிற் புலலுவென் யானெனக், கையலைத் தோடுமோர் களிமகற் காண்மின்" (பெருங். ௧ ௪௦ ௮௮ - ௯௮.)

(பி - ம்) ௯௫ 'போன்று வருந்தா' ௯௭ 'தன்மையிற் றருஉம்' ௧௦௧ 'கைவிதிர்க்கொண்மென' ௧௦௨. 'நோன்பியைத்'

கணவிர மாலையிற் கட்டிய திரள்புயன்
குவிமுகி ழெருக்கிற் கோத்த மாலையன்
சிதவற் றுணியொடு சேணோங்கு நெடுஞ்சினைத்
ததர்வீழ் பொதித்துக் கட்டிய வுடையினன்
வெண்பலி சாந்த மெய்ம்முழு தூரீஇப்
பண்பில் கிளவி பலரொடு முரைத்தாங்கு
அழூஉம் விழூஉ மரற்றுங் கூஉம்
தொழூஉ மெழூஉஞ் சுழலலுஞ் சுழலும்
ஓடலு மோடு மொருசிறை யொதுங்கி
நீடலு நீடு நிழலொடு மறலும்
மையலுற்ற மகன்பின் வருந்தி
கையறு துன்பங் கண்டுநிற் குநரும்
சுரியற் றாடி மருள்படு பூங்குழற்
பவளச் செவ்வாய்த் தவள வாணகை
ஒள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக்
கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதற்

---

௧௦௪ கணவிரமாலை - அலரிமாலை, "கணவிரமாலை கைக்கொண் டென்ன" (மணி ௫ ௪௮)

௧௦௬ சிதவற்றுணி - சிதர்ந்தசீரை

௧௦௬ - ௭ சினைத் ததர் வீழ்பு - கிளைகளிலுள்ள செறிந்த சுள்ளிகள், வீழ்பு - சுள்ளிகளுக்கு ஆகுபெயர், ததர் - கொத்துமாம், "சிதாரணை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத் ததர்" (சிறுபாண். ௨௫௪ - ௫)

௧௦௮ வெண்பலி - வெண்ணீறு சாந்தம் - சந்தனம் உரீஇ - உருவி, பூசி

௧௧௧ சுழலலுஞ் சுழலும் - சுழலுதலையுஞ் செய்வன இவ்வாறு பின் வருவனவற்றிற்கும் இப்படியே பொருள் கொள்க, "இயங்கலு மியங்கு மயங்கலு மயங்கும்" (சிலப். ௨௨ ௧௫௪)

௧௧௪ மையலுற்ற மகன் - பித்தன் ௧௧௬ தாடி - மோவாய்

௧௧௬ 'சுருளிடுதாடிமருள்படு பூங்குழல்' (சிலப் 27 · 182)

௧௧௮ வெள்ளிவெண்டோடு - சங்கினாற்செய்த காதணி

௧௧௯ கருங்கொடிப் புருவம் - கரிய ஒழுங்காகிய புருவம், "கருங் கொடிப் புருவ மேற்றி" (சீவக. ௬௫௮), இதனை, வடமொழியில் ப்ரூலதா என்பர்

(பி - ம்) ௧௦௪ 'கணவிரை', 'கணவிரிமாலை கட்டியதிரணையன்' ௧௦௭ 'பொழித்துக்' ௧௦௮ 'உறீஇ' ௧௧௦. 'அரற்றினுமரற்றும்' ௧௧௧ 'சுழலினுஞ்சுழலும்' ௧௧௨ 'ஓடினுமோடும்' ௧௧௩ 'நீடினுநீடும்' ௧௧௪ 'மைய லுறு' ௧௧௮ 'வெள்ளைவண்டோட்டுக'

காநதளஞ செஙகை யேநதிள வனமுலை
அகன்ற வலகு லநநுண மருஙகுல
இகநத வடடுடை யெழுதுவரிக கோலதது
வாணன பேரூா மறுகிடைத தோன்றி
நீணில மளநதோன மகனமுன னாடிய
பேடிக கோலததுப பேடுகாண குநரும
வமப மாககள கமபலை மூதூாச
சுடுமண ணோஙகிய நெடுநிலை மனைதொறும
மையறு படிவதது வானவா முதலா

---

கஉக அநநுண மருஙகுல - அழகிய நுணணிய இடை

கஉஉ வடடுடை - முழநதாளளவாக உடுககும உடை விசேடம, "வடடுடைப பொலிநத வணணக கலாபமொடு, படடுசசுமந தசைநத பரவை யலகுல வாசவ தததையை" (பெருங் உ ச கஉ௨ - ௩) எழுதுவரிக கோலம - கொஙகை முதலியவறறில எழுதிய பததிககீறறு, "எழுதுவரிக கோல முழுமெயு முறீஇ" (சிலப் ரு உஉசு)

கஉ௩ - ச வாணன வாணாசுரன, ஊா - சோநகரம, நீணிலமளந தோன - கணணன, மகன - காமன, பிரததியுமநன, "வாணன பேரூா மறுகிடை நடநது, நீணில மளநதோ னாடிய" (சிலப் சு ருச - ரு)

கஉரு பேடு - புறநாடகம பதினொனறனுள ஒனறு, அபபதி னொனறையும அவறறை நிகழததியவாகளையும பினவரும வெணபாவா லுணாக "கடையமயி ராணிமரக காலவிநதை கநதன, குடைதுடிமா லலலியமற குமபம - சுடாவிழியாற, படடமதன பேடிருப பாவையான பாணடரஙகம, கொடடியிவை காணபதினோா கூதது" இபபேடு உமை காரணமாக வாணனால சிறைவைககபபடட தன மகன அநிருததனைச சிறை மீட்டுக காமன சோநகரததாடிய ஆடல உமை - வாணன மகள

கககசு - உரு "ஆணமை திரிநத பெணமைக கோலததுக, காமனாடிய பேடி யாடலும" (சிலப் சு ருசு - எ), "சுருளிடு தாடி மருளபடு பூஙகுழல, அரிபரந தொழுகிய செழுஙகய னெடுஙகண, விரிவெண டோடடு வெண ணகைத துவாவாயச, சூடக வரிவளை யாடமைப பணைததோள, வளரிள வனமுலைத தளரியன மினனிடைப, பாடகச சீறடி யாரியப பேடி" (சிலப் உஎ : கஅக - சு)

கஉசு வமபமாககள - புதியோா, "வமப மாககத தமபெயா பொறிதத" (சிலப் ரு ககக) கமபலை - முழககம மூதூா - மூதூரில

கஉஎ சுடுமண ஓஙகிய - செஙகலாற செயயபபடடு உயாநத, "சுடுமண ணோஙகிய நெடுநிலை வரைபபு" (பெரும்பாண் சoரு), "சுடுமண ணெடுமதில" (பு - வெ. 113), "சுடுமண ணேறாக் கடிமனை" (சிலப் கச கசசு - எ)

கஉஅ படிவம - தெயவவடிவம

(பி - ம்) கஉரு 'பேடிகாணகுநரும'

நெடுநிலை மண்ணீடு நின்ற வாயிலும்
நாற்பெரு வாயிலும் பாற்பட் டோங்கிய
காப்புடை யிஞ்சிக் கடிவழங் காரிடை
உலையா வுள்ளமோ டுயிர்க்கடன் இறுத்தோர்
தலைதூங்கு நெடுமரந் தாழ்ந்துபுறஞ் சுற்றிய
பீடிகை யோங்கிய பெரும்பலி முன்றில்

---

௪௭. நெடுநிலை மண்ணீடு - நீண்ட தோற்றத்தையுடைய பூத வடிவம், என்றது மயானத்தைப் பாதுகாப்பதொரு தெய்வவிசேட வடிவமென்பர். மண்ணீடென்பதற்குச் சுதையாற் செய்யப்பட்ட பாவையென்பது பொருள், "பாங்குற மண்ணீட்டிற் பண்புற வகுத்து" (௬. ௨௦௦), "ஈங்கிம் மண்ணீட் டியாரென வுணரேன்" (௧௮ : ௧௫௬) என இந்நூலுள்ளும், "கண்ணுள் வினைஞரு மண்ணீட் டாளரும்" (௫ ௩௦) எனச் சிலப்பதிகாரத்துள்ளும் வருதல் காண்க. மண் - சுதை, "மண்மாண் புனைபாவை யற்று", "மண்ணோ டியைந்த மரத்தனையர்" (குறள், ௪௦௭, ௫௭௬)

௪௮. நாற்பெருவாயிலும் - செழுங்கொடிவாயிலும் நலங்கிளர்வாயிலும் வெள்ளிடைவாயிலும் நின்றவாயிலுமாகிய நான்கு பெரியவாயிலும். பாற்பட்டு - பகுதிப்பட்டு.

௪௯. காப்பு - காவல். கடி வழங்கு ஆரிடை - பேய்கள் உலவுகின்ற அரிய இடம்; என்றது மயானத்தை.

௪௮ - ௯. ஓங்கிய ஆரிடையெனக்.

௫௦. உலையாவுள்ளமொடு - தளராத உள்ளத்தோடு. உயிர்க்கடனிறுத்தோர் - உயிராகிய கடனைக்கொடுத்தோர்; உயிர்க்கடனிறுத்தலை, சிலப். ௫. ௭௭ - ௮ - ஆம் அடிகளின் உரையிற்காண்க. இவர்களை, மயானவாசினியது மந்திரசாதகரான பைரவவேஷதாரிகளென்றும், காபாலிகமதத்தினரென்றும் கூறுவர், இஃது அவிப்பலியெனப்படும், "சிரந்தெரிந்தன வறிந்தரிந்துகுவை செய்த பைரவர்கள் செந்நிலம், பரந்தெரிந்துபொடி செய்ய மற்றவை பரிக்க வந்தவர் சிரிப்பரே" (தக்க. ௫௧)

௫௧. தலைதூங்கு நெடுமரம் - உயிர்க்கடனிறுத்தோருடைய தலைகள் தொங்கப்பெற்ற நீண்ட மரங்கள்; பலிகொடுப்போர் சிகையை மரத்தில் முடிந்துவிட்டுத் தலையையரிந்து தூக்கைக்குப் பலிகொடுத்தல் மரபாதலால் இங்ஙனம் கூறினர், "வீங்குதலை நெடுங்கழையின் மிசைதோறுந் திசைதோறும், விழித்து நின்று தூங்குதலை சிரிப்பனகண் டுறங்குதலை மறந்திருக்குஞ் சுடாக்கட் சூரப்பேய" (கலிங்க. கோயில். ௨௧). இதுபோன்ற ஒழுக்கம், வடநூலில் தசகுமார சரித்திரத்தில் உபகாரவர்மாவின் சைசவவிருத்தாந்தத்திற் சொல்லப்பட்டுள்ளதென்பர்.

௫௨. பீடிகை - பீடம். பெரும்பலிபீடிகையோங்கிய முன்றிலெனக்.

(பி - ம்.) ௪௭ 'நெடுநிலைநிறை மண்ணீடு நின்றவாயிலும்' ௪௯ 'கடிவழக்கர்' ௫௦ - ௫௧ 'உயிர்க்கடவத்தோர்தலைதூங்கு'

காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்
அருந்தவர்க் காயினு மரசர்க் காயினும்
ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினும்
நால்வேறு வருணப் பால்வேறு காட்டி
இறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
சுடுமண் ணோங்கிய நெடுநிலைக் கோட்டமும்
அருந்திறற் கடவுட் டிருந்துபலிக் கந்தமும்
நிறைக்கற் றெற்றியு மிறைக்களச் சந்தியும்

---

௫௧ காடமர்செல்வி - துர்க்காதேவி, சண்டிகை யென்றுங் கூறுவர் (மணி ௧௮ ௧௧௫), கானநாடியென்பர் (தக்க ௫௪, ௮௦) கோட்டம் - கோயில் "கோளி யாலமுங் கோழரை மரங்களுங் குழுமித், தூளி யார்ந் தெழு சுடலையு முடலமுந் துவன்றி, மீளி யாக்கைய தாக்கியுண் பேய்க்கண மிகைசூழ், கூளி தாயக்கென வாக்கிய கோட்டமொன் றுளதே" என்னும் நீலகேசிச் செய்யுளாலும் பரணிச்செய்யுட்களாலும் மயானத்தில் துர்க்கை யாலயம் இருந்ததாகத் தெரிகின்றது

௫௦ - ௫௧ இறந்தோருடைய தலைகள் தூங்குகின்ற மரங்களாற் சுற்றப்பட்டுப் பலிபீடிகை ஓங்கிய முன்றிலையுடைய கோட்டம்

௫௫ ஒருங்குடன்மாய்ந்த பெண்டிர் - கணவனுடன் இறந்த மகளிர்

௫௪ - ௫ ஆயினும் ஓர் எண்ணிடைச்சொல், "பொதியி லாயினு மிமய மாயினும், புகாரே யாயினும்" (சிலப் ௧ ௧௪ - ௬) என் புழிப்போல,

௫௬ நால்வேறுவருணம் - அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்

௫௭ இறந்தோர் மருங்கில் - இறந்தவருடம்பைப் புதைத்தவிடத்தே.

௫௮ குறியவும் நெடியவுமாகிய சிறிய மலைகளைக் கண்டாலொத்த, சிலப் ௨௭ ௧௫

௫௧ சுடுமண் - செங்கல் கோட்டம் - அறை, "சமப் புறங்காட், டரசர்க் கமைந்தன வாயிரங் கோட்டம்" (௬ ௧௬௫ - ௬) என்பர் பின்னும்

௫௮ - ௯ கண்டன்ன கோட்டம்

௬௦ பெறுதற்கரிய திறலையுடைய தெய்வங்களையுடைய, திருந்திய பலியிடுதற்குரிய தூண்கள் கந்தம் ஸ்கந்தமென்னும் வடமொழிச் சிதைவு "இலங்கொளிக் கந்தமும்" (மணி ௨௪ ௧௬௨), "கலிகெழு கடவுள் கந்தங் கைவிட" (புறநா ௫௨)

௬௧ நிறைக்கற்றெற்றி - நிறுத்திய கல்லாலாகிய திண்ணை மிறைக்களச்சந்தி - வளைந்த இடத்தினையுடைய பலவழிகளுங் கூடினசந்து, மிறை-வளைவு, "மிறைக்கொளி திருத்தி னேனே" (சீவக ௨௮௪)

(பி - ம்) ௫௫ 'பெண்டிரக' ௫௯ 'சுடுமணோங்கிய' ௬௧ 'நிறைகற் றெற்றியு மிறைகளச்'

தண்டு மண்டையும் பிடித்துக் காவலர்
உண்டுகண் படுக்கு முறையுட் குடிகையும்
தூமக் கொடியுஞ் சுடாத்தோ ரணங்களும்
ஈமப் பந்தரு மியாங்கணும் பரந்து
சுடுவோ ரிடுவோர் தொடுகுழிப் படுப்போர்
தாழ்வயி னடைப்போர் தாழியிற் கவிப்போர்
இரவும் பகலு மிளிவுடன் றரியாது
வருவோர் பெயர்வோர் மாறாச் சும்மையும்
எஞ்சியோர் மருங்கி னீமஞ் சாற்றி

---

௬௨ மண்டை - உண்ணுதற்குரிய ஒருவகை மட்கலம்; இரக்கும் பாத்திரமென்றுங் கூறுவர்; "கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரென", "பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்", "ஏலாது கவிழ்ந்தவெ னிரவன் மண்டை" (புறநா. ௧0௩, ௧௧௫, ௧௭௩) காவலர் - மயானங் காப்போர்.

௬௩ குடிகை - பர்ணசாலை; 'குடீகா' என்னும் வடமொழிச் சிதைவென்பர், இஃது இக்காலத்துக் குடிசையென வழங்குகின்றது.

௬௪ தூமக்கொடி - புகையொழுங்கு, "மீன்சுடு புகையிற் புலவுநாறு நெடுங்கொடி" (புறநா. ௫௨)

௫௩ - ௬௫. கழிபெருங்கோட்டமும், நெடுநிலைக் கோட்டமும், பலிக் கந்தமும், தெற்றியும், சந்தியும், குடிகையும், கொடியும், தோரணங்களும், பந்தரும், யாங்கணும் பரந்தென்க.

௬௬ சுடுவோர் - பிணங்களைச் சுடுவோர். இடுவோர் - கொணர்ந்து அவற்றைச் சும்மா போகடுவோர். தொடுதல் - தோண்டுதல், மணி. ௧௬ ௨௫.

௬௭. தாழ்வயின் அடைப்போர் - பள்ளமாகிய இடங்களிற் பிணங்களை அடைத்துவைப்போர்; தாழ்வயின் - தாழ்ந்த இடம். தாழியிற் கவிப்போர் - பிணங்களைத் தாழியினுள்ளே கவிப்போர், இதனை, "தேவருலக மெய்தினோ னாதலின், அன்னோற் கவிக்குங் கண்ணகன் றாழி" (௨௨௮), "கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த" (௨௩௮) "ஈமத் தாழி யகலி தாக வனைமோ" (௨௫௬), "தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே" (௩௬௪) எனவரும் புறநானூற்றுப் பாடல்களாலுணர்க, இத்தாழி, முதுமக்கட்டாழி யெனவும் வழங்கும்.

௬௮ இளிவுடன் - அருவருப்புடன். ௬௯ சும்மை - ஒலி.

௭0 எஞ்சியோர் - சீவித்திருப்போர். ஈமஞ் சாற்றி - ஈமமுண்டென் பறைச் சொல்லி.

(பி - ம்) ௬௭ 'காழ்வயினடைப்ப' ௬௮ 'இரவும் பகலுமேயாவிடி னறிவரு' ௭0 'எஞ்சினார்மருங்கினேமஞ்சாற்றி'

நெஞ்சு நடுக்குறூஉ நெய்த லோசையும
துறவோ ரிறந்த தொழுவிளிப் பூசலும
பிறவோ ரிறந்த வழுவிளிப் பூசலும
நீண்முக நரியின் றீவிளிக் கூவும
எ௫ சாவோரப் பயிருங் கூகையின் குரலும
புலவூண் பொருந்திய குராலின் குரலும
ஊண்டலை துற்றிய வாண்டலைக் குரலும
நன்னீரப் புணரி நளிகட லோதையின்
இன்னா விசையொலி யென்றுநின் றறாஅது

எக. நெய்தலோசையும் - சாப்பறையின் ஓசையும், "ஓரி னெய்தல் கறங்கக் வோரீ, லீர்ந்தண் முழவின் பாணி ததும்ப" (புறநா கக௪), "பல லவாக கிரங்கும் பாடிமிழ் நெய்தல், கல்லென வொலிக்குங் காடு" (பு - வெ உஎ௪)

எ௨. தொழுவிளிப் பூசல் - துதிமுழக்கம், துறவோராதலால், தொழுதல் கூறப்பட்டது

எ௩ பிறவோர் - இல்லறத்தோர்

எ௫ இறப்போரை அழைக்கும் போர்நதையின் ஒலியும், போர்நதை செத்தோரை அழைக்குமென்றும் கூறுவர், 'போழ்வாய்க்கூகை சுட்டுக குவியெனச் செத்தோரப் பயிரும், கள்ளியம் பறந்தலை" (புறநா உ௪0)

எசு குரால் - கோட்டான்

எஎ உணவாகத் தலைமூளையைக் கடித்துண்ட ஆண்டலைப் பறவைக ளின் குரலும், ஆண்டலைப் பறவை - ஆண்மகனது தலைபோன்ற வடிவ முள்ள ஒருவகைப் பறவை, இதனை, "நீண்ட பலிபீடத்தி லரிந்துவைத்த நெடுங்குஞ்சிச் சிரத்தைத்தந் தினமென்ன றெண்ணி, யாண்டலைப் புள்ளுக ணைந்து பார்க்கு மாலோ வணைதலுமச் சிரமச்ச முறுத்து மாலோ" (கலிங்க கோயில் பாடியது, கசு) எனபதனாலுணர்க, "அழுகுரற் கூகையோ டாண் டலை விளிப்பவும்" (பட்டின உ௫அ), "ஆண்டலை பாட" (முத்தநிருப் ௩), "சுமந் தாமமு மெரியினு மிருளொடு விளக்கா, ஊமைக் கூகையு மோரியு முறழ்றழ கதிக்கும், யாமத் தீண்டிவந் தாண்டலை மாணபில வழைக்கும், தீமைக் கேயிட ஞயதோர் செம்மலை யுடைத்தே" (நீல தருமம் ௩), தக்க உ௩௪ - ஆமதாழிசைக் குறிப்பைப் பார்க்க

எஅ புணரி நளி கடல் - அலைகள் செறிந்த கடல் ஒதையின் - ஓசை யைப்போல

எகூ. இன்னா இசை ஒலி - துன்பத்தை இசைக்கின்ற ஒலிகள்

சுக - எகூ மாரூச சுமமையும், நெய்தலோசையும், தொழுவிளிப

(பி - ம்.) எ௩ 'வாழுவிளிப் பூசலும்' எ௪. 'வீழ்முகநரியின் றீவிளிக் குரலும்' எசு புலாலூண்பொருந்திய குராலூண்குரலும்' எஎ 'ஊன் றலைதுற்றிய' எஅ 'நளிர கடல்'

தானறியு மொடுவையு முழிஞ்சிலு மோங்கிக்
கானறையுஞ் சூரையுங் கள்ளியு மடர்ந்து
காய்பசிக் கடும்பேய் கணங்கொண் டீண்டு
மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்
வெண்ணிணந் தடியொடு மாந்தி மகிழ்சிறந்து
புள்ளிறை கூரும் வெள்ளின் மன்றமும்
சுடலை நோன்பிக ளொடியா வுள்ளமொடு
மடைதீ யுறுக்கும் வன்னி மன்றமும்
விரத யாக்கைய ருடைதலை தொகுத்தாங்
கிருந்தொடர்ப் படுக்கு மிரத்தி மன்றமும்

---

பூசலும், அழுவிளிப்பூசலும், கூவும், குராலும் குரலும், குராலும் ஆகிய இன்னாவிசைகள் அறாதிருக்கப்பெற்று

௪௦ - ௪௧ தானறி முதலிய மரவிசேடங்கள் நெருங்கப்பெற்று

௪௨ காய்பசி - மிக்கபசி (மணி ௬ : ௧௧௭, மணி ௧௧ ௯௯.) கணம் - கூட்டம்

௪௩ மால - மேகம் சினை - கிளை பல பேய்கள் கூட்டங்கொண்டிருத்தற்கு இடமானதுபற்றி வாகையடி, மன்றமெனப்பட்டது பின் வருவனவற்றையும் இப்படியே கொள்க ஊருக்கு நடுவாய எல்லாருமிருக்கும் மரத்தடியை மன்றமென்பர் நச்சினார்க்கினியர், முருகு ௨௨௬

௪௪ தடி - தசை மாந்தி - உண்டு

௪௫ புள் - பேராந்தை, கோட்டான், கழுகு, பருந்து, காக்கை, ஆண்டலைப்புள் முதலியவை இறைகூரும் - தங்குதல் மிக்க வெள்ளில் - விளாமரம்

௪௬ சுடலை நோன்பிகள் - காபாலிகர், "இறைவி சோட்டத்து வீரிரு திங்கள் தக்கவை உறையு ளாகவவ் வுறையுளுங் காட்டக்க துறைவான், பொறையு மாற்றலும் பூமியு மேருவு மனையான், சிறைசெய் சிந்தையா னந்தமில் பொருள்களைத் தெரிந்தான்" (௫௩ம் ௭) என்னும் நீலகேசிச் செய்யுளால் முனிசந்திரனென்ற ஒரு முனிவன் மயானத்திலிருந்து தவஞ்செய்தானென்று தெரிகிறது ஒடியாவுள்ளம் - தளராத உள்ளம்.

௪௭ மடை - சோறு வன்னி - வன்னிமரம்

௪௮. உடைத்தலைகளைச் சேர்த்து

௪௯ இருந்தொடர்ப்படுக்கும் - பெரிய மாலைகளாகச் செய்யும் இரத்திமன்றம் - இலந்தைமரம் நிற்கும் மன்றம், "இரத்தி நீடிய வகன்றலை மன்றத்து" (புறநா ௩௪)

(பி - ம்.) ௪௦ 'ஒடுவையு முழிஞ்சிலு மொடுங்கிக' ௪௧ 'காரையுஞ்', 'கள்ளியும் படர்ந்து' ௪௩ 'ஆலம் பெருஞ்சினை வாகை மன்றம்' ௪௪ 'வெண்ணிணக் குடியொடுமாந்தி' ௪௫ 'வெள்ளிடை மன்றம்' ௪௯ 'இருந்துடி படுக்கும்'

பிணந்தின் மாக்க ணிணம்படு குழிசியில்
விருந்தாட் டயரும் வெள்ளிடை மன்றமும்
அழற்பெய் குழிசியும் புழற்பெய் மண்டையும்
வெள்ளிற் பாடையு முள்ளீட் டறுவையும்
பரிந்த மாலையு முடைந்த கும்பமும்
நெல்லும் பொரியுஞ் சில்பலி யரிசியும்
யாங்கணும் பரந்த வோங்கிரும் பறந்தலை
தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர்
முதியோ ரென்னா னிளையோ ரென்னான்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவும்
அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்

---

௯௦ குழிசி - பானை

௯௧. வெள்ளிடை மன்றம் - வெளியான இடத்தையுடைய மன்றம், “உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்” (சிலப். ௫ ௧௧௭)

௯௨ புழல் - ஒருவகைச் சிற்றுண்டி

௯௩ வெள்ளிற் பாடை இருபெயரொட்டு உள்ளீட்டறுவை - உள்ளே பண்டங்கள் இடுதலைப்பெற்ற உறி, “சுவனமே லறுவையும்” (சிலப் ௧௦ ௯௮) அறுவை - சீலையெனின், உள்ளீடுடையுடைய கிழியுமாம்

௯௪ பரிந்த மாலை - பாடையிற்கட்டி அறுத்தெறியப்பட்ட மாலை, “வெள்ளின் மாலையும் விரிந்தவெண் டலைகளுங் சரிந்த, கொள்ளி மாலையுங் கொடிபடு கூறையு மகலும், பள்ளி மாறிய பாடையு மெலும்புமே பரந்து, கள்ளி யாரிடைக் காந்தோர் தோற்றமுங் கடிதே” (நீல ௯௫ ௪)

௯௫ சில்பலி யரிசி - சிறுபலியாகிய அரிசி, “தூவெள் ளரிசி, சில்பலிச் செய்து” (புறந ௨௩௩ - ௪)

௯௬ பறந்தலை - பாழிடம்

௮௫ - ௯௬. வாகைமன்றமும், வெள்ளின்மன்றமும், வன்னிமன்றமும், இரத்திமன்றமும், வெள்ளிடை மன்றமும் ஆகிய இம்மன்றங்கள் யாங்கணும் அழற்பெய்குழிசி முதலியவைகள் பரந்த பறந்தலையெனக்

௬௫ - ௬ பரந்து அறு பரந்த பறந்தலையெனக்

௯௮. மூ மணி எ. ௮௧ ௧௦௦ கொடுந்தொழிலாளன் - காலன்

௪௧ - ௧௦௧ ஆரிடை பறந்தலை சுடலை தின்னக்கண்டும்

(பி - ம்) ௯௦ ‘பிணந்தீன்மாக்கணிணம்பசிகுழிசியின’ ௯௨ ‘பிறழ் பெய்மண்டையும்’, ‘பிழல்’ ௯௯ ‘இளையோரென்னன் முதியோரென்னன்’

கழிபெருஞ செல்வக கள்ளாட டயாநது
மிகக நலலறம விருமபாது வாழும
மககளிற சிறநத மடவோ ருணடோ
ஆஙகது தன்னையோ ரருங்கடி நகரெனச
சாங்கல னென்போன் றனிவழிச் சென்றோன்
என்புந தடிபபு முதிரமு மியாககையென
றன்புறு மாககட் கறியச சாற்றி
வழுவொடு கிடநத புழுவூன் பிணடத
தலததக மூட்டிய வடிநரி வாயககொண
டுலபபி லின்பமோ டுளைககு மோதையும
கலைபபுற வலகுல கழுககுககுடைந துணடு
நிலைத்தலை நெடுவிளி யெடுககு மோதையும்
கடகஞ செறிதத கையைத தீநாய
உடையக கவவி யொடுஙகா வோதையும
சாநதந தோயநத வேநதிள வனமுலை

௧0௨ மிகபபெரிய செலவமாகிய கள்ளையுணடு விளையாடுதலைச செயது

௧0௪ மடவோா - மூடா

௧0௫ அதுதன்னை - அபபயான தனதை கடி - காவல

௧0௬ தனிவழிச சென்றோனாகிய சாஙகலன

௧0௮ அனபுறு மாககட்கு - உடமபினிடததே அனபுமிகுநத மனிதாகட்கு மாககளென்றா, ஐமபுல வுணாசசியேயன்றி மனவுணாசசி யிலலாதவரென்றற்கு, "மாவு மாககளு மையறி வினவே" (தொல் மரபு சூ ௩௨)

௧0௭ - ௮. யாககை, எனபு முதலியனவாமென்று மாககட்குச சாற்றி

௧0௯ வழு - தாதுவிசேடம, வழுவொடு - வழுவுதலுடனென்றுமாம பிணடமென்றது உடமபை

௧0௮ - ௯ சாற்றிக கிடநதவென்க, இனி, சாற்றி வாயககொணடு உளைககும நரியோதை யெனினுமமையும

௧௧0 அலததகம - செமபஞசுககுழமபு

௧௧௧ உலபபு இல இனபமோடு - கேடிலலாத இனபததோடு

௧௧௪ தீநாய - மயானததிற றிரியும ஒருவகை நாய

(பி - ம்) ௧0௫ 'தன்னை யொருஙகுகடிநகரென' ௧0௭ 'அனபுநதடியும' ௧0௯ 'வழுவொடு தோனறிய புழுவூணபிணடதது' ௧௧௩ 'நிலததலை' ௧௧௫ 'கதுவி'

காய்ந்தபசி யெருவை கவாந்தூ ணேதையும
பணபுகொள யாக்கையின் வெணபலி யாஙகத்து
மண்கனை முழவ மாக வாஙகோர
சஉ0 கருந்தலை வாஙகிக் கையகத் தேந்தி
இரும்பே ருவகையி னெழுந்தோர் பேயமகள்
புயலோ குழலோ கயலோ கணணோ
குமிழோ மூக்கோ விதழோ கவிரோ
பலலோ முத்தோ வெனனு திரங்காது
சஉ௫ கணடொட டுணடு கவையடி பெயாத்துத்
தணடாக களிப்பி னாடுங கூத்துக்
கணடனன் வெரீஇ கடுநவை யெயதி

கக௭ காய்ந்தபசி - மிகக பசி (மணி ௬ அ௨, கக ௬௬) எருவை - தலைவெளுத்த உடல சிவந்திருக்கும் பருந்து, கழுகுமாம, "விசும்பா டெருவை பசுந்தடி தடுப்ப" (புறநா ௬௪)

ககஅ வெணபலி அரங்கத்து - சாமபற்குவையாகிய அரங்கத்திலே

கக௯ மண கனை முழவமாக - மாரச்சனை யமைந்த திரண்ட தணணு மையாக, தணணுமை - ஆடறகுரிய ஒருவகைத் தோறகருவி

ககக - ௯ உலகமோதையும, எடுக்குமோதையும, ஒடுங்காவோதை யும, கவாந்தூணோதையும ஆகிய இவைகள் முழவமாகவெனக

க௨0 கருந்தலையெனறது, ஒரு பெணபிணத்தின தலையை

க௨க பேயமகள் - பெணபேய

க௨௩ குமிழ - குமிழமபூ கவிர - முள்ளு முருக்கமபூ

க௨௪ எனனுது - எனறு கருதாமல்

க௨௫ கண தொடடு உணடு - கணணைத் தோணடி உணடு, "கண டொட டுணட" (முநூ ௫௩) கவை அடி பெயாத்து - கவைத்த அடிகளைப் பெயாத்து, "கருமறிக் காதிற கவையடிப் பேயமகள" (சிறுபாண் க௯௭)

க௨௬ தணடாக களிப்பு - தணியாத களிப்பு, "தணடா வீகைத் தகைமாண குடுமி" (புறநா ௬)

ககக - ௨௩ உலகமோதை முதலியன முழவமாக வெணபலி யரங்கத்தில ஒரு பேயமகள கவையடி பெயாத்து ஆடுங கூத்தைபெனக

க௨௭ கணடனன - கணடு கடுநவை எயதி - அபபேயாற பிடிக் கபபட்டு, "கழலகட் கூளிக் கடுநவைப படடோர" (சிலப் ௫ க௨௫)

க0௯ - ௨௭ செனறேறுங்கிய சாரஙகலனெனபோன கணடு

(பி - ம்) க௨௩ 'அதரோ கவிரோ' க௨௫ 'கவையடிப பெயாத்து', 'கையடிபெயாத்து' க௨௬ 'களிப்பினொடாடுங'

விண்டோர் திசையின் விளித்தனன் பெயர்ந்தீங்
கெம்மனை காணா யீமச் சுடலையின்
வெம்முது பேய்க்கென் னுயிர்கொடுத் தேனெனத்
தம்மனை தன்முன் வீழ்ந்துமெய் வைத்தலும்
பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்தவித்
தீத்தொழி லாட்டியென் சிறுவன் றன்னை
யாருமி றமியே னென்பது நோக்கா
தாருயி ருண்ட தணங்கோ பேயோ
துறையு மன்றமுந் தொல்வலி மரனும்
உறையுளுங் கோட்டமுங் காப்பாய் காவாய்
தகவிலை கொல்லோ சம்பா பதியென

---

கஉஅ விண்டு - நீங்கி விளித்தனன் பெயர்ந்து - கூப்பிட்டுக்கொண்டு பெயர்ந்து

கஉகூ எம்மனை - என் தாயே

கருக தன் தாயின்முன்னே இறக்கவும் மெய்வைத்தல் மணி உரு கசுஎ

க0சு - ருக சாங்கலனென்போன் வீழ்ந்து மெய்வைத்தலும்

கருஉ பார்ப்பானென்றது சாங்கலன் தந்தையை, "பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்த" என்று இங்கே சொல்லுதலாலும், "கண்ணில் கணவனை" (சு கருரு) என்று பின்பு வருதலாலும், சாங்கலனுடைய தந்தை தாயிருவரும் கண்ணை யிழந்தோரென்பது பெறப்பட்டது

கருச மணி சு கசசு

கருரு அணங்கோ பேயோ, மணி சு கசஅ, கரு0 அணங்கு - காமநெறியான் உயிர்கொள்ளுந் தெய்வமகளென்பர், குறள், கூகஅ, பரிமேல்.

கருங - ரு சிறுவன் றன்னை ஆருயிருண்டது

கருசு துறை - நீர்த்துறைகள் தொல்வலி மரன் - பழைய வலியை யுடைய மரம்

கருஎ உறையுள் - தங்குமிடம் காவாய் - காவாமலிருந்தாய்

கருசு - எ புறநா உஉக - சு, கலி க0க கரு - ச

கருஅ தகவிலை கொல்லோ - தகவின்மையை யுடையாயோ, தகவு நின்னிடமில்லையோ என்றுமாம்

(பி - ம்) கஉஅ 'விளிந்தனன்' கஉகூ 'காணூவீமச்' கரு0 'பேய்க்கே முன்னுயிர்' கருக 'தம்முன் வீழ்ந்து மெய்வைப்பப' கருஉ - ங 'ஒழிந்த, விதித்தொழி' கருச 'யாருமிறமியோனென்பது நோக்கா' கருசு 'தொல்பதி மாறனும்'

மகன்மெய் யாக்கையை மாபுறத் தழீஇ
ஈமப் புறங்காட் டெயிற்புற வாயிற்
கோதமை யென்பாள் கொடுந்துயர் சாற்றக்
கடிவழங்கு வாயிலிற் கடுந்துயர் செய்தி
இடையிருள் யாமத் தென்னையீங் கழைத்தனை
என்னுற் றனையோ வெனக்குரை யென்றேன்
பொன்னிறப் பொலிந்த நிறத்தா னொருவன்
ஆருமி லாட்டியென் னறியாப் பாலகன்
ஈமப் புறங்காட் டெய்தினோன் றன்னை
அணங்கோ பேயோ வாருயி ருண்ட
துறங்குவான் போலக் கிடந்தனன் காணாய்
அணங்கும் பேயு மாருயி ருண்ணா
பிணங்குநூன் மார்பன் பேதுகந் தாக
ஊழ்வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது
மாபெருந் துன்பநீ யொழிவா யென்றலும்
என்னுயிர் கொண்டிவ னுயிர்தந் தருளென்
கண்ணில் கணவனை யிவனெடுத் தோம்பும்
இவனுயிர் தந்தென் னுயிர்வாங் கென்றலும்
முதுமூ தாட்டி யிரங்கினள் மொழிவோள்

---

௧௪௧ கோதமை யென்பது அவள்பெயர். கொடுந்துயர் - தன்மகன் இறந்தானென்பது

௧௪௨ மணி ௬ ௪௬.

௧௪௩ இருளையுடைய இடையாமத்தில்

௧௪௫, பொன்னிறப் பொலிந்த நிறத்தான் - சூரியனைப்போல விளங்கிய நிறத்தினையுடைய சம்பாபதி, பொன் - சூரியன், "இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து, விளங்கொளி மேனி விரிசடை யாட்டி" (௧ - ௨) என்று இந்நூற் பதிகத்தில் வருதல் காண்க

௧௪௬ மணி ௬ ௧௩௪ ௧௪௯ என - என்று கோதமை சொல்ல

௧௫௧ மார்பன் - சாங்கலன் பேது கந்தாக - அறியாமை காரணமாக

௧௫௩ என்றலும் - என்று சம்பாபதி சொல்லலும்

௧௫௫ கண்ணில் கணவனை மணி ௬ ௧௩௨ ஓம்பிடும் - பாதுகாப்பான்

௧௫௬ என்றலும் - என்று கோதமை சொல்லலும்

௧௫௭ முதுமூதாட்டி - சம்பாபதி

(பி - ம்) ௧௩௯ 'யாக்கைமாபுற' ௧௪௩ 'அழைத்தாய' ௧௪௬ 'அறியாப பாரப்பான்' ௧௪௭ 'எய்தியோன' ௧௫௧ 'பேயநுகந்தாக' ௧௫௩ 'துன்ப மொழிவாய' ௧௫௪ 'உயிர்தந்தலென'

ஐய முணடோ வாருயிா போறற
செய்வினை மருங்கிற செனறுபிறப பெயதுதல
ஆஙகது கொணர்ந்துநின் ஞரிடா நீககுதல
எஙகெனக காவதொன் றன்றுநீ யிரஙகல
கொலையற மாமெனுங கொடுஙதொழின் மாககள
அவலப படிறறுரை யாஙகது மடவாய
உலக மன்னவாக குயிாககுயி ரீவோா
இலரோ விந்த வீமப புறஙகாட
டரசாக கமைநதன வாயிரங கோடடம
நிரயக கொடுமொழி நீயொழி யென்றலும
தேவா தருவா வரமென் றொருமுறை
நான்மறை யநதணா நன்னூ லுரைககும
மாபெருந தெயவ நீயரு ளாவிடின
யானோ காவே னெனனுயி ரீஙகென
ஊழி முதலவ னுயிாதரி னலல

---

கருஅ - கூ பிறபபெயதுதலில ஐயமுணடோ, " செயவினை வழிததா யுயிாசெலு மெனபது, பொயயில காடசியோா பொருளுரை யாதலின " (சிலப் உஅ கசுஎ - அ, புறநா கஙஉ )

கசு0 அது - அவவுயிரை ஆரிடா - தீாததறகரிய துனபம

கசுக எனககு ஆவதொனறனறு - எனககு இயலுவதான ஒரு காரிய மனறு

கசுந அவலபபடிறறுரை - நேட்டைத தருகினற பொயயுரை அது அவலப படிறறுரை யெனக

கசுரு இலரோ - உளரெனறபடி. புறஙகாட்டில

கசுசு ஆயிரம கோடடம அமைநதன , ஆயிரம - அநேகம , " இறந தோா மருஙகிற சிறநதோா செயத, குறியவு நெடியவுங குனறுகண டனன, சுடும ணோஙகிய நெடுநிலைக கோட்டமும " (சு ருஎ - க) எனறாா முனனும

கசுஎ நிரயக கொடுமொழி - நரகவேதனையைததரும கொடிய வாாததை , எனறது, " இவனுயிா தநதெனனுயிாவாஙகு " (மணி சு · கருசு) எனறதை எனறலும - எனறு சமபாபதி சொலலலும

கசுகூ நூல - வேதம. களO தெயவமாகிய நீ.

களக யான எனனுயிரைத துறபபேன எனறு கோதமை சொலல

களஉ. ஊழி முதலவன - மஹா பரஹமா , " தெயவக கருவுந

(பி - ம்) கசுந 'அலவலைபபடிற்றுரை', 'அவலை படிற்றுரை' கசுரு 'புறஙகாட்டின' கசுஎ 'நிரையததொடு' கசுகூ 'செனனூலுரைககு' களக 'என்னுயிரெனறபின்'

தாழித் தாழி யகவரைத் திரிவோர்
தாங்கரின் யானுந் தருகுவன் மடவாய்
ஈங்கெ ஞற்றலுங் காணாய் யென்றே
நால்வகை மரபி னரூபப் பிரமரும்
நானால் வகையி னுரூபப் பிரமரும்
இருவகைச் சுடரு மிருமூ வகையிற்
பெருவனப் பெய்திய தெய்வ கணங்களும்

---

திசைமுகக் கருவும், செம்மலர் முதியோன் செய்த வந்நாள்'' (மணி பதிகம், ௨௮ - ௯) இகரத்தை அசைநிலையாக்கி ஊழ்வினையாகிய முதல்வ னெனக் கூறினும் பொருந்தும்

௧௭௩. சக்கரவாளமாகிய தாழியினுடைய உள்ளிடத்தே சஞ்சரிப்பவர்

௧௭௪. தரினென்னவே தரலின்மை பெறப்பட்டது

௧௭௩ - ௪ இறந்துபோன உயிரை மீட்டுக்கொடுக்கு மாற்றல் இந்தச் சக்கரவாளத்திலுள்ள தேவர்களுக்கு எங்ஙனமில்லையோ அங்ஙனமே எனக்கு மில்லை யென்றபடி

௧௭௫ ஆற்றல் - வலி என்று - என்று சம்பாபதி சொல்லி.

௧௭௬ நால்வகை மரபின் அரூபப் பிரமரும் - உலகம் முப்பத்தொன் றனுள் இருபத்தெட்டாவதாகிய ஆகாசாநந்தியாயதன லோகம் முதலிய நான்கு உலகங்களிலுமுள்ள அரூபப்பிரஹ்ம சாதியாராகிய நால்வகை யினரும், இவர்களைத் தியானம் ஐந்தனுள் அவிசேஷமெனனும் ஐந்தா வதில் தேறியவர்களென்பர்

௧௭௭. நானால் வகையின் உரூபப் பிரமரும் - மேற்கூறிய உலகங் களுள் பன்னிரண்டாவதாகிய பிரஹ்மகாயிகலோகம் முதலாகிய உலகம் பதினாறிலுமிருக்கிற உரூபப்பிரஹ்ம சாதியாராகிய பதினாறு வகையினரும், இவர்களில் ௧௨, ௧௩, ௧௪-ஆம் உலகங்களிலுள்ளவர்களை ஸ்ரோதாபந்தி என னும் முதலாவது தியானத்தில் தேறியவர்களென்றும், ௧௫, ௧௬, ௧௭-ஆம் உலகங்களிலுள்ளவர்களை ஸ்கிருதாகாமி எனனும் இரண்டாவது தியானத் தில் தேறியவர்களென்றும், ௧௮, ௧௯, ௨௦-ஆம் உலகங்களிலுள்ளவர்களை அநாகாமி எனனும் மூன்றாவது தியானத்தில் தேறியவர்களென்றும், ௨௧-ஆவது முதலிய ஏழுலகங்களிலுள்ளவர்களை அர்ஹந் எனனும் நான்காவது தியானத்தில் தேறியவர்களென்றும் பௌத்த நூல் கூறும்

௧௭௬ - ௭ இருவகைப் பிரஹ்மலோகங்கள் இருபதின் பெயர்களையும் இந்நூற்பதிகத்தின் ௨௮ - ௯ ஆம் அடிகளின் உரையிற் காண்க

௧௭௮ இருவகைச்சுடர் - சந்திர சூரியர்கள்

௧௭௮ - ௯ மேற்கூறிய உலகம் முப்பத்தொன்றனுள் ஆறாவதாகிய மகாராஜிகலோகம் முதலிய உலகம் ஆறிலுமுள்ள அறுவகைத் தெய்வ

(பி , ம்) ௧௭௩ 'அகவயிற்றிரிவோர்' ௧௭௪ 'மடவோயீங் கெனுற்றலுங்' ௧௭௬. 'பிடமரும்' ௧௭௭ 'உருபிதப்பிரமரு', 'உருபப பிடமரு'

௧அ௦ பல்வகை யசுரரும படுதுய ருறாஉம
எணவகை நரகரு மிருவிசும பியஙகும்
பன்மீ னீட்டமு நாளுங கோளும
தன்னகத தடககிய சககர வாளதது
வாநதரற குரியோர் தமைமுன் னிறுததி
௧அ௫ அரநதை கெடுமிவ ளருநதுய ரிதுவெனச
சமபா பதிதா னுரைததவம முறையே
எஙகுவாழ் தேவரு முரைபபக கேடடே
கோதமை யுறற கொடுநதுயா நீங்கி
ஈமச சுடலையின மகனையிட டிறநதபின்
௧௯௦ சமபா பதித னுறற ரோன்ற
எஙகுவாழ் தேவருங் கூடிய விடநதனிற்

---

கணங்கள இநத உலகஙகளின் பெயரைப பதிகத்து உஅ - ௯-ஆம அடியின் உரையிற் காணக 'பெருவனப பெயதிய' எனறூா, விளஙகொளி மேனிய ராதலின

௧அ௦ படுதுயா - மிகக துனபம

௧அ௧ எண்வகை நரகா - மேற்கூறிய உலகம முபபதுதொன் றுனுள் முதலாவதாகிய நரகலோகத்தின் பகுதிகளான மஹாரெளரவம், ரெளரவம், காலஸூதரம, ஸஞசீவனம, மஹாவீசி, தபனம, ஸமபிரதாபனம, ஸமஹதம எனனும் எட்டு நரகஙகளிலுமுளளவாகள

௧அ௨ ஈட்டம - கூட்டம நாள - இருபததேழு நட்சததிரஙகள்

௧அ௩ மேறகூறிய அருபபபிரஹ்மகணலோகம முதலியவறறைத தன்னுள் அடககிய கோளததைச சககரவாளமெனபா, "சககர வாளத தேவரெல்லாம" (மணி கஉ. எஉ), "எணணருஞ் சககர வாள மெஙகணும" (மணி உகூ ௫உ) என வருதல காணக

௧அ௪ வாநதாறகுரியோா - தேவா முனனிறுததி - கோதமைககு முன்னே நிறுததி.

௧அ௫ அரநதை - துனபம கெடும - கெடுமின என — என்று சமபாபதி சொல்ல

௧அ௬ - எ சமபாபதி உரைதத முறையினை, மணி ௬ : ௧எ௩ - ௪-ஆம அடிகளிற காணக

௧அஅ இறக்கத துணிநதமையால் கோதமை கொடுநதுயா நீஙகினள். இதுபோனற நிகழ்சசியைச சிலப்பதிகாரம், உ௫ அஉ - ஆம அடி முதலிய வற்றிற காண்க

௧அ௯. ஈமம - பிணஞசுடுதறகு அடுககும விறகடுககு

௧௯௦ - ௯௧ தோனறககூடிய விடமெனக

(பி - ம்.) ௧அ௨ 'பணமினீட்டமு' ௧அ௪ - ௫ 'உரந்தாற் குரி யோா தம்மைமுன னிறுததிங, காககை' ௧௯௧. 'அஙகுவாழ் தேவருங கூட்டிய'

சூழ்கடல் வளைஇய வாழியங் குன்றத்து
நடுவு நின்ற மேருக குன்றமும
புடையி னின்ற வெழுவகைக குன்றமும்
நாலவகை மரபின மாபெருந தீவும
ஓரீ ராயிரஞ சிறறிடத தீவும
பிறவு மாஙகத னிடவகை யுரியன
பெருமுறை மரபி னறிவுவரக காட்டி
ஆஙகுவா ழுயிரகளு மவவுயி ரிடஙகளும
பாஙகுற மணணீட்டிற பணபுற வகுதது

---

ககஉ சூழ்கடல - பெருமபுறககடல ஆழியஙகுனறதது - சககரவாளகிரியின உடபட்ட இடத்தில்

ககங நடுவிடததே நினறதாகிய, எணபததீராயிரம யோசனை உயரமும அவவுயரததிறகுத தகக பருமையும அமைநதுளள மேருமலையும

ககச அமமேருவின பககததே அதிலிருநது உயரததில ஒனறற கொனறு வரவரப பாதிப பாதியளவு குறைநது குறைநது ஒனறைசசுறறி யொனறுகச சூழ்நதுளள எழு குலகிரிகளும

ககரு மேறகூறிய மேருவும அதனைச சூழ்நதுளள எழுகுலகிரிகளும அககுலகிரிகளுள ஒவவொனறனையும சூழ்நது அவவககிரியின உயர அளவுளள ஆழமும அகலமுமமைநத எழுகடலகளும ஆகிய இவறறை யெலலாம சூழ்நது கிடககும பெருமபுறககடலிலுளள சமபுததீவு முதலிய நானகு மகாதவீபஙகளும இநத நானகினுள தெறகேயுளளது சமபுததீவு, இது நாவலநதீவு எனறுங கூறபபடும, இதனை, "நாவ லோஙகிய மாபெருந தீவு" (மணி உ க), "நாவலொடு பெயரிய மாபெருந தீவதது" (மணி கக. க௦எ) எனபவறறாலுணாக

ககசு மஹாதவீபம நானகினுள ஒவவொனறையும தனிததனியே ஐநநூறு ஐநநூறாகச சூழ்நதுளள இரணடாயிரம சிறு தீவுகளும, இசசிறு தீவுகள அநதரத தீவுகளெனறுஞ சொலலபபடும

ககரு - சு "அநதரத தீவினு மகனபெருந தீவினும" (உரு, உஉச) என்று பினவருதல காணக

ககங - சு இவவடிகளிலுளள வரலாறுகள் பர்மா தேசத்துப் புத்த நூலிலிருந்து தெரிநதுகொளளபபட்டன

ககஎ - அ உரியனவறறைக காட்டி.

ககக உயிரகளெனறது அவவவவுயிரகள வாழுகினற உடமபுகளை

உ௦௦ பாஙகு - பகுதிததிரள, "அடியோர பாஙகு மாயமு நீஙகி" (சிலப்.- கசு. அரு), அழகுமாம மணணீட்டின - சுதையாற செயயபபட்டுளள பாவை வடிவமாக

(பி - ம்) ககஉ 'ஆழிககுனறதது' உ௦௦. 'மணணிடிற'

மிக்க மயனு மிழைக்கப் பட்ட
சக்கர வாளக் கோட்ட மீங் கிதுகாண்
இடுபிணக் கோட்டத் தெயிற்புற மாதலிற்
சுடுகாட்டுக் கோட்ட மென்றல துரையார்
௨0௫ இதன்வர விதுவென் றிருந்தெய்வ முரைக்க
மதனின் னெஞ்சமொடு வான றிய ரெய்திப்
பிறந்தோர் வாழ்க்கை சிறந்தோ ருரைப்ப
இறந்திருள் கூர்ந்த விடையிரு ளியாமத்துத்
தூங்குதுயி லெய்திய சுதமதி யொழியப்
௨௧0 பூங்கொடி தன்னைப் பொருந்தித் தழீஇ
அந்தர மாறா வாறைந் தியோசனைத்
தென்றிசை மருங்கிற் சென்றுதிரை யுடுத்த
மணிபல் லவத்திடை மணிமேகலா தெய்வம்
அணியிழை தன்னைவைத் தகன்றது தானென்

௬ —சக்கரவாளக்கோட்டமுரைத்த காதை முற்றிற்று

---

௨0௧. மயன் - தெய்வத்தச்சன், அசுரத்தச்சனென்றுங் கூறுவர்

௨0௩. இடுதல் - போகடுதல். பிணக்கோட்டம் - மயானம்.

௨0௪. பூ மணி ௬ : ௩0 சுடுகாட்டுக் கோட்டம் சிலப் ௯ ௨0

௨0௫. இருந்தெய்வம் - மணிமேகலா தெய்வம்

௨0௬. மதனில் நெஞ்சமொடு - செருக்கற்ற மனத்துடனே, மதன் - வலியுமாம்

௨0௭. சிறந்தோர் - மணிமேகலை வாழ்க்கையென்றது நிலையாமையை. வாழ்க்கையைச் சிறந்தோர் உரைப்ப

௨0௮. இடையிருள் யாமத்து - நடுயாமத்தில், மணி ௬ ௧௪௩

௨௧0. பூங்கொடிதன்னை - மணிமேகலையை

௨௧௧. அந்தரம் ஆறு - ஆகாயமே வழியாக

௨௧௧ - ௨ முப்பதுயோசனைதூரம் தென்றிசைக்கண்ணே சென்று

௨௧0 - ௧௪ மணி ௧. ௫௫ - ௭

௧ - ௨௧௪ கதிர்மண்டிலம் சொரிய, மேனியள் எத்தி நோக்கி என்னுற்றீரென, அவள் உரைத்தலும், அருந்தெய்வமுரைப்ப, சுதமதி என்னையோவென, நேரிழை கூறும், அங்ஙனங் கூறுகின்ற தெய்வம், இதன் வரவு இது வென்றுரைக்க, சிறந்தோருரைப்ப, தெய்வம் இடையிருள் யாமத்துச் சுதமதியொழியப் பூங்கொடிதன்னைத் தழீஇச் சென்று மணிபல்லவத்தில் வைத்து அகன்றதென முடிக்க.

(பி - ம்) ௨0௪. 'என்பவரறியார்' ௨0௫ 'இதுவென்விருந்' ௨௧0 'பொருந்தினடழீஇ'

ஏழாவது

# துயிலெழுப்பிய காதை

[ஏழாவது மணிமேகலாதேயவம உவவனமபுகுந்து
சுதமதியைத் துயிலேழுப்பியபாட்டு]

மணிமே கலைதனை மணிபல லவததிடை
மணிமே கலாதெயவம வைதது நீங்கி
மணிமே கலைதனை மலாபபொழிற கண்ட
உதய குமர னுறுதுய ரெயதிக
கங்குல கழியினென கையகத தாளெனப
பொஙகுமெல லமளியிற பொருநதா திருநதோன்
முனனாத தோனறி மனனவன் மகனே
கோனிலை திரிந்திடிற கோணிலை திரியும
கோணிலை திரிநதிடின் மாரிவறங கூரும
மாரிவறங கூரின மன னுயி ரிலலை
மன் னுயி ரெலலா மண்ணாள வேநதன
தன் னுயி ரென னுந தகுதியின றாகும
தவததிறம பூணடோ டனமேல வைதத

---

௩ மலாபபொழிற் கண்ட - உவவனததிறகண்ட

௪ உறுதுயா - மிகக துனபம

௫ கையகததாள் - கையினிடத்தே யுளளாள்

௬ பொருநதாது - துயிலாது ௧௩ வறம - வறுமை

அ - ௧௨ இநநூற் பதிகம், ௨௪ - ஆம அடியைப பார்கக, "கோ ணிலை திரிநது நாழி குறைபடப பகலகண மிஞசி, நீணில மாரியினறி விளை வஃகிப பசியு நீடிப, பூணமுலை மகளிர பொற்பிற் கறபழிந தறஙகண் மாறி, யாணையில வுலகு கேடா மாசுகோல கோடி னெனறுன" (சீவக ௨௫௫.)

௧௧ - ௨ புறநா ௧அ௬.

௧௩ தவததிறம - தவததின கூறுபாடு.

(பி - ம்) ௪ 'துயிலெய்தி' அ 'திரிந்திடக் கோணிலை' ௧௨. 'தகுவை யாயின', 'தகுதியையாயிற்' ௧௩. 'தவத்திற்பூணடோ'

அவத்திற மொழிகென் றவன்வயி னுரைத்தபின்
உவவனம் புகுந்தாங் குறுதுயில் கொள்ளும்
சுதமதி தன்னைத் துயிலிடை நீக்கி
இந்திர கோடணை யிந்நகர்க் காண
வந்தே னஞ்சல் மணிமே கலையான்
ஆதிசான் முனிவ னறவழிப் படூஉம்
ஏது முதிர்ந்த திளங்கொடிக் காதலின்
விஞ்சையிற் பெயர்த்துநின் விளங்கிழை தன்னையோர்
வஞ்சமில் மணிபல் லவத்திடை வைத்தேன்
பண்டைப் பிறப்பும் பண்புற வுணர்ந்தீங்
கின்றேழ் நாளி லிந்நகர் மருங்கே
வந்து தோன்று மடக்கொடி நல்லாள்
களிப்புமாண் செல்வக் காவற் பேரூர்
ஒளித்துரு வெய்தினு முன்றிற மொழியாள்
ஆங்கவ ளிந்நகர் புகுந்த வந்நாள்

---

கச அவத்திறம் - கேடுசெய்யுங்காரியம், "தவஞ்செய்வார் அவஞ்செய்வா ராசையுட் பட்டு" (குறள், உசுசு) என்பதில், 'அவம்' என்பது இப்பொருளில் வருதல் காண்க.

சு - கச மணி கஅ அ0 - அரு

க - கச மணிமேகலாதெய்வம் மணிமேகலையை மணிபல்லவத்திடை வைத்து நீங்கிய பொருந்தாதிருந்தோனாகிய உதயகுமரன் முன்னர்த் தோன்றி அவத்திறம் ஒழிகவென்று உரைத்தபின்னென்க.

கஎ. இந்திரகோடணை - இந்திரவிழா

கஅ. ஒ. சிலப். கரு ௬௬ அஞ்சல் - அஞ்சாதே

ககூ ஆதிசால்முனிவன் - புத்தன்

உ0 ஏது முதிர்ந்தது - ஏதுநிகழ்ச்சி முற்றியது

உக. விஞ்சையின் - வித்தையினாலே

உச. இன்றேழ்நாளில் - இற்றைக்கு ஏழாவது நாளில், மணி கக கஉகூ.

உரு. தோன்றும் - தோன்றுவாள் நல்லாள் - மணிமேகலை

உசு பேரூர் - காவிரிப்பூம்பட்டினத்தில்

உஎ உருவை மறைத்து வருவாளாயினும்

(பி - ம்) கச 'அவ்வயினுரைத்தபின்' கரு 'நவவனம்' உக 'குணர்ந்துநின்' உரு 'வந்துகாணகுறும்' உசு. 'பெயரூர்' உஎ 'உன்றிறமொழியாள்', 'ஊன்றிறமொழியாள்'

எங்கு நிகழ்வன வேதுப பலவுள
மாதவி தனக்கியான் வந்த வண்ணமும்
ஏதமி னெறிமக் ளெய்திய வண்ணமும்
உரையாய நீயவ ளென்றிற முணரும
திரைபிரும பௌவததுத தெய்வமொன் றுண்டெனக
கோவலன கூறியிக் கொடியிடை தன்னையென்
நாமஞ் செய்த நன்னா ளணளிருட்
காமன் கையறக் கடுநவை யறுக்கும
மாபெருந தவக்கொடி யீன்றனை யென்றே
நனவே போலக கனவகத துரைதநதெ
ஈங்கிவ வண்ண மாங்கவட் குரையென்
றநதரத தெழுந்தாங கருநதெயவம போயபின்
வெந்துய ரெயதிச சுதமதி யெழுந்தாங்
ககன்மனை யரங்கத தாசிரியா தமமொடு

---

௨௯ நிகழவனவாகிய ஏதுககள

௩௧ ஏதமில நெறி - குற்றமிலலாதவழி ; அஃதாவது விசுததி மாாககம

௩௨ அவள - மாதவி என திறம உணரும - என வரலாற்றை உணாவாள

௩௩ பௌவத்து - கடலினிடதது தெயவம ஒன்று உணடென - எனது குலமுதலவனை விபததினின்று நீங்கிப பாதுகாதத தெயவமொன்று உள்ளதென்று

௩௫ நனனாளிற செறிநத இருளிடததே

௩௩ - ௫ சிலப் க௫ உ௮ - ஆம அடி முதலியவற்றின பொருளை இவற்றுடன ஒப்பிடுக

௩௬ - ௭ சிலப் ௩௰ உ௫ - ௬

௩௯ - ௪௰ மணிமேகலாதெயவம புகுநது நீககி, 'இந்நகரில இந்திர விழாக்காண வநதேன, யான மணிமேகலாதெயவம, இளங்கொடிககு ஏது முதிாநததாதலால அவளை மணிபலலவததில வைததேன, அவள் இந்நகரில இறறைககு ஏழாநாளில தோன்றுவள, ஏதுப பலவுள, மாதவிக குரை, அவள எனறிறமுணரும, இவ்வணணம அவட்கு உரை' என்று போயபினனக

௪௨ அகல மனை அரங்கதது - விசாலிதத வீடாகிய நடனசாலையில. ஆசிரியர் தமமொடு - இயலாசிரியனும, ஆடலாசிரியனும, யாழாசிரியனும, இசையாசிரியனும, குழலோனும, தணணுமையோனுமாகிய இவாகளோடு நினறு.

(பி - ம்) ௩௧ 'ஏதமினின்மக', 'ஏதமுனிமைக' ௩௨ 'உரைப பொருளுணரும' ௩௩ 'பவ்வத தெயவ முணடென' ௩௫ 'நல்லிருள' ௩௬ 'கையாற் கடுநவை' ௪௧ 'எயதியசுதமதி' ௪௨. 'தாசியா தமமொடு'

வகைதெரி மாககட்கு வட்டணை காட்டி
ஆடல புணாககு மாஙகியன் மகளிரிற
கூடிய குயிலுவக கருவிகண டுயின்று
பண்ணுக்கிளை பயிரும் பண்ணியாழ்த தீந்தொடை
கொளைவல லாயமோ டிசைகூட் டுண்டு
வளைசேர செஙகை மெலவிர லுதைதத
வெமமைவெய் துறுது தன்மையிற் றிரியவும
பணபில காதலன் பாததனமை நோனு
துண்கண சிவந்தாங கொலகுகொடி போன்று
தெருட்டவுந தெருளா தூடலொடு துயிலவோர்
விரைபபூம பளளி வீழ்ததுணை தழுவவும

---

௪௩ வகைதெரிமாககட்கு - அவிநயம முதலிய கூறுபாடுகளைத தெரி கின்ற மாந்தாகளுககு வட்டணை காட்டி - கமல வாததனையைக காட்டி, கமலவாததனையாவது கைததலஙகாட்டல, சீவக ௬௭௫

௪௪ அரஙகியல் மகளிரின - நாடகமளிரைபபோல; நாடக மகளி ருடனெனறுமாம

௪௫ கூடியகுயிலுவககருவி - சோநத குழல் யாழ் மததளம குடமுழா இடககையெனபவை, "கூடிய குயிலுவக கருவிக ளெலலாம, குழலவழி நினற தியாழே யாழ்வழித, தணணுமை நினறது தகவே தணணுமைப, பினவழி நினறது முழவே முழவொடு, கூடிநின றிசைதத தாமந திரிகை" (சிலப் ௩. ௧௩௮ - ௪௨, உரை) கணடுயினறு-ஒலியா தடஙகி 'மகளிரின' (௪௪) எனறதனுல அவாகள துயினறமையும பெறபபட்டது ஒபபு கம்ப ௪ 1·11

௪௬ சிலப் ௨௨ · ௧௪௪

௪௬ - ௯ பணணுககிளை - பணணின வகைகளை பயிரும - இசைக கும. தீஙதொடை - இனிய நரமபுகள கொளைவல ஆயமோடு - பாட்டில் வல்லமகளிர் கூட்டததுடனே, கொளை - ஒறறுததலுமாம கூடடுணடு - சோநதனுபவிதது உதைதத - தெறிதத உருது - உறாமையால. தொடை திரியவுமெனக, நேடுரல் ௬௮.

௫௦ - ௫௩ பாததமை - பாததன தனமை, பாதனையை நுகாவான் பாத்தன, "பெணணியலா ரெல்லாருங கணணிற பொதுவுணபா, நண ணேன் பாததநின மாாபு" (குறள், ௧௩௧௧); "வறுமொழி யாளரொடு வமபப பாததரொடு" (சிலப் ௧௬ : ௬௩) நோனுது - பொருமல் துயில வோா - ஊடியமகளிா. வீழ்துணை - விருமபியகணவன துயில்வோா தழுவவும

(பி - ம்) ௪௬ 'பணணுககிழமை பிறமண்ணியாழ்' ௪௭ 'கொளள வல்லாய' ௪௮ 'வளையாா செஙகை' ௪௯ 'வேதுறுது' ௫௦. 'காதல் பாாததமை நோனுது' ௫௧. 'நுண்கண' ௫௨. 'துயிலவோன்'

தளர்நடை யாயமொடு தங்கா தோடி
விளையாடு சிறுதேர் ரீர்த்துமெய் வருந்தி
அமளித் துஞ்சு மைம்படைத் தாலிக்
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்க்குக்
காவற் பெண்டிர் கடிப்பகை யெறிந்து
தூபங் காட்டித் தூங்குதுயில் வதியவும்
இறையுறை புறவு நிறைநீர்ப் புள்ளும்
காவுறை பறவையு நாவுள் ளழுந்தி
விழவுக்களி யடங்கி முழவுக்கண் டுயின்று
பழவிறன் மூதூர் பாயல்கொ ணடுநாட்
கோமகன் கோயிற் குறுநீர்க் கன்னலின்
யாமங் கொள்பவ ரேத்தொலி யரவமும்
உறையுணின் றொடுங்கிய வுணங்கு வுயக்கத்து
நிறையழி யானை நெடுங்கூ விளியும்
தேர்வழங்கு தெருவுஞ் சிற்றிடை முடுக்கரும்
ஊர்காப் பாள ரெறிதுடி யோதையும்
முழங்குநீர் முன்றுறைக் கலம்புணர் கம்மியர்

---

௫௪ தளர்நடையாயம் - சிறார்கூட்டம்
௫௬. ஐம்படைத்தாலி, மணி ௩ ௧௩௮, உரையைப் பார்க்க
௫௮ - ௯ காவற் பெண்டிர் - செவிலித்தாயர் கடிப்பகை. மணி
எ : ௭௩ காவற்பெண்டிர் துயில்வதியவும்
௬௦ இறை - வீட்டின் இறப்பு ௬௧ கா - சோலை.
௬௨ களி - களிப்பு, கூத்துமாம் ௬௩ நடுநாள் - நடு இரவில்
௪௧ - ௬௩ தன்மையிற் பிரியவும், வீழ்துணை தழுவவும், துயில் வதியவும், கருவி கண்டுயின்று நா உள்ளழுந்தி முழவுக்கண்டுயின்று ஊர்பாயல் கொள் நடுநாளிலெனக்
௬௪ கன்னலின் - நாழிகை வட்டிலால், முல்லை ௫௮
௬௫ யாமங்கொள்பவர் - நாழிகைக்கணக்கர்: சிலப். ௫. ௪௯
௬௬ உணங்கு உயக்கம் - உணங்குமையாலுண்டாகிய வருத்தம்
௬௭ நெடுங்கூவிளி - நெடியகூப்பிடுதலின் முழக்கம், மணி. ௭ : ௧௧௫
௬௮. சிற்றிடைமுடுக்கர் - சிறிய இடங்களையுடைய முடுக்குத் தெருக்கள்.
௬௯ துடி - ஒருவகைத் தோற்கருவி
௭௦ கலம்புணர் கம்மியர் - கப்பலிற் சேர்ந்து தொழில் செய்வோர்

(பி - ம்) ௫௪ 'தாங்காதோடி' ௬௨. 'களிப்படங்கி' ௬௪ - ௫, 'குறிநீர்க் கன்னல், யாமங்கொள்வோர்' ௬௬ 'ஒங்கிய'

துழநதடு களளின் றேறபியுண் டயர்நது
பழஞ்செருக குறற வனநதாப பாணியும
அரவாயக கடிபபகை யையவிக சடிபபகை
விரவிய மகளி ரேநதிய தூமததுப
எ௫ புதலவரைப பயநத புனிறுதீா கயககம
தீாவினை மகளிா குளஞு டாவமுமம
வலிதத நெஞசி ஞடவ ரின்றியும

---

எக துழநது அடு களளின தேறபி உணடு அயாநது - துழாவிச சமைதத களவகைகளில நெலலாற சமைதத களளையுணடு தம்மை மறநது; "இலலடு களளின றேறபி பருகி" (பெரும்பாண் கசஉ)

எஉ அனநதா - களளை உணடமையாலுணடாகிய செருககு, "அனநதா நடுகக மலல தியாவது" (பொரு௩ கூச)

எ௩ கடிபபகை - பேயககுப பகையாகவுள்ளதெனறு பொருள, அரவாயககடிபபகை - அரமபோனற வாயினையுடைய வேபபிலை ஐயவிக கடிபபகை - வெண சிறுகடுகு, இவை பேயககுபபகை யெனபதை, புறநா உஅக - ஆம செய்யுளாலும உணாக பேய முதலியவைகள அணுகாதிருத தறகு இருவகைக கடிபபகையும கூறபபடடன, மணி ௩ : க௩ச, உரையைப பாாகக

எச தூமததுப - புகையுடன்

எ௩ - ச மகளிரேநதிய அரவாயககடிபபகை ஐயவிககடிபபகை விரவிய தூமம ஆகிய இநத இரணடுடன செனறு என ஒருசொல வருவிகக

எ௫ - கூ புனிறுதீாமகளிா, கயககநதீாமகளிரெனக, கயககம - கயங குதல புதலவரைபபெறறுப புனிறுதீாநத மகளிா இரவிறசெனறு குளத தில நீராடுதலை, "கணவ ருவபபப புதலவாப பயநது, பனைததேநதிளமுலை யமுத மூறப, புலவுப்புனிறு தீாநது பொலிநத சுறறமொடு, வளமனை மகளிா குளநீ ரயா" (மதுரை கூOO - கூO௩) எனபதனுலுமுணாக புதலவரைப பெறறமகளிா எழுநதுசெனறு பததாவது இரவில நீராடவேணடுமெனறு ஆபஸ்தம்ப க்ருஹ்யததின க௫ - ஆம கணடததுளள அ - ஆம ஸூததிரத தாலும அநநூலை அநுஸரிததுத தோழப்ப ரெனறு வழஙகுகிற வைதிக ஸார்வபௌமரியறறிய க்ருஹ்யரத்னத்தில் சு - ஆம கணடததில நாமகரணப பிரகரணததிலுளள, "தசமேஹ்நி" எனனும ஸூததிரததாலும தெரிகினற தெனபா.

எள வலிதத நெஞசின ஆடவா இனறியும் - பகைமையைக் கருதிய நெஞசினையுடைய வீரா இலலாதிருககவும

(பி - ம்) எக. 'துழநதகளளின தொபபிரணடயநது' எ௩ 'நாவாயக கடிபபகை' எச 'இரவியனமகளிா' எ௫ - கூ 'புதலவாபபயநதபுனிறு தீருகதது', 'விரிவியன மகளிாகுன நாளரவமும', 'புனிறு தீருயககந, தீாவியன'

கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய
௧௫ அந்தி லெழுதிய வற்புதப் பாவை
மைத்தடங் கண்ணுண மயங்கினள் வெருவத்
திப்பிய முரைக்குந் தெய்வக் கிளவியின்

௧௪ - ௫ நெடுநிலை உடைக்கந்து அந்தில - நெடிய தோற்றத்தை யுடைய தூணுகிய அவ்விடத்தே காரணம் காட்டிய - பழவினையாகிய காரணத்தை யாவருக்கும் காட்டுதற்பொருட்டு எழுதிய - மயனென்னும் தெய்வத்தச்சனுல் நிருமிக்கப்பட்ட அற்புதப்பாவை - யாவருக்கும் ஆச்சரியத்தை உண்டுபண்ணுகின்ற பாவை, இது, மேற்கூறிய உலகவறவியிற் சம்பாபதி கோயிலின் கிழக்கேயுள்ள தூணென்றில் தெய்வ கணத்தோனுகிய துவதிகனென்பவனுடைய வடிவம்போல மயனுல் நிருமிக்கப்பட்ட பாவை, முக்காலச்செய்தியையும், கேட்போர்க்குச் சொல்லும் இயல்பையுடையது, பேசுதலபற்றி இது நாவுடைப்பாவையென்றுஞ் சொல்லப்படும் இவற்றை, "கந்துடை நெடுநிலைக் கடவு ளெழுதிய, வந்திற் பாவை யருளு மாயிடின" (௬௫ : ௩௩ - ௪), "கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய, தந்துணைப் பாவையை" (௧௭ : அ௧ - ௯0), "நெடுநிலைக் கந்தி னிடவயின் விளங்கக், கடவு ளெழுதிய பாவையாங் குரைக்கும்" (௨0 . ௧௧0 - ௧௧), "கடவு ளெழுதிய நெடுநிலைக் கந்தின், குடவயி னமைத்த நெடுநிலை வாயின், முதியாள் கோட்டம்" (௨௧ : ௧ - ௩), "என்றிவை சொல்லி யிருந்தெய்வ முரைத்தலும்" (௨௧ . ௩௫), "மனபெருந் தெய்வ கணங்களி னுள்ளேன, றுவதிக னென்பேன ஞென்றுமுதிர் கந்தின், மயனெனக் கொப்பா வகுத்த பாவையி, னீங்கேன" (௨௧ · ௧௩0 - ௩௩), "நெடுநிலைக் கந்தி னின்ற பாவை" (௨௨ · ௨), "இலகொளிக் கந்தி னெழுதிய பாவாய" (௨௨ ௬௧), "நாவுடைப் பாவை நங்கையை யெடுத்தலும்" (௨௨ : ௬௪), "நாவுடைப் பாவையை நலம்பல வேத்தி" (௨௨ ௧0௪) என இந்நூலில் வருவனவற்ருலுணர்க. எழுதிய - பண்ணிய, "கடவு ளெழுதவோர் கற்ரு ராரெனின" (௨௫ . ௧௩0), "கடவு ளெழுதவோர் கற்கே யாதலின" (௨௫ : ௧௬௬), "கடவு ளெழுதவோர் கற்கொண டல்லது" (௨௬ · ௧௪) எனச் சிலப்பதிகாரத்து வருதல் காண்க

௧௬. மைத்தடங்கண்ணுள் - சுதமதி

௧௭ திப்பியம் : இது, திவ்யமென்னும் வடமொழிச்சிதைவு; தேவலோகத்திலிருப்பதென்று பொருள். இவ்வாறு இறந்தகால எதிர்காலச் செய்திகளைக் கூறுதல் பெரும்பாலும் இவ்வுலகவழக்கமன்மையின் இதனை, 'திப்பியம்' என்ருர். "செங்கோல் காட்டிய தெய்வமுந்திப்பியம், பையர் வலகுல பலர்பசி களையக், கையி லேந்திய பாத்திரந்திப்பிய, முதத்தை முதலவி யடிபிழைத் தாயெனச், சித்திர முரைத்த விதூஉந் திப்பியம்" (௧௧ : ௯0 - ௯௪) என்று இந்நூலுள்ளே, 'திப்பியம்' என்பது இப்பொருளில் வருதல் காண்க தெய்வக் கிளவியினுல் திப்பியமுரைக்கும், தெய்வக்கிளவி - தெய்வத்தன்மையுள்ள சொல், வடசொல்லாலெனினுமமையும்.

இரவி வன்ம னொருபெரு மகளே
துரகத தானைத துச்சயன் றேவி
தயங்கிணாக் கோதைத் தாரை சாவுற
மயங்கி யானைமுன் மன்னுயிர் நீத்தோய்
காராளர சணையபிற கௌசிகன் மகளே
மாருத வேகனே டிநககா புகுநது
தாரை தவவை தன்னொடு கூடிய
வீரை யாகிய சுதமதி கேளாய்
இன்றேழ நாளி லிடையிருள யாமத்துத
தன்பிறப பதனொடு நின்பிறப புணாநதிங
கிலககுமி யாகிய நினககிளை யாளவரும
அஞசலென் றுரைதத தவவுரை கேடடு

சூஅ இரவிவனமன - அசோதரநகரததரசன, சுதமதியெனபவளு டைய முறபிறபபில தநதையா யிருநதவன

கூஅ - கூ. மூ. மணி. கக. கநூ - ச துசசயன = தாஜயன் - பகைவாக ளால வருததமுற்று வெல்லபபடுபவனெனறு பொருள்; இவன் அஙகநாட்டி லுள்ள கசசயமெனனும நகாததரசன, சுதமதியெனபவளுடைய முறபிறப பிற் கணவனாக விருநதவன, மணி. கO. ருO - ருச

கOO தாரை - இவள் வீரைககு முனனே பிறநதவள்; வீரை யானை யால் இறநதது கேட்டு இவள் இறநதமையால, 'சாவுற' எனறூர்; மணி. கஉ : சரு - அ

கOக. மயஙகி - மதுவைக குடித்தமையால மயஙகி

கOஉ காராளாசணைப - அஙகநாடடிற கஙகைககரையிலுள்ள தாகிய சமபாநகாம; இபபொருளில காராளரெனபது காாளரெனபதன விகார மெனறும, கொடுமையெனறு பொருளபடுகினற காாளதவம அலலது காாளதையெனபது இசசொறகுப பகுதியெனறும, இககாராளாகள தூககா பூஜை செய்து நரபலி கொடுபபோரெனறும, இபபெயா இககாலதது மஹா ராஷடிா தேசததிற காாடிகளெனறு வழஙகுகிறதெனறுங கூறுவா, மணி. கூ. உகூ

கOச. தாரை தவவை - தாரையாகிய தவவை, தவவை - முன்பிறந்த வள் தாரை யெனபது மாதவியெனபவளுடைய முற்பிறபபுப பெயா.

கOரு வீரையெனபது சுதமதியெனபவளுடைய முறபிறபபுபபெயா.

கOஅ. இலககுமியெனபது மணிமேகலையின முறபிறபபின பெயா, தாரை, வீரை, இலககுமி இமமூவரும சகோதரிகள

கOகூ அஞசல - அஞ்சாதே தெயவம உரைததது

(பி - ம்) கூஎ - அ 'கிளவி யிரவிவனமகனொரு' கOக 'மயஙகியல் யானை' கOஉ 'காராளகசணைப' கOச 'தாரைதனவவை' கOரு. 'சுதை மதி' கOசு. 'இனறேளாளிடையிடை' கOஎ - அ. 'உனபிறப புணாநதிங, கலககுமியாகிய'

நெஞ்ச நடுக்குறூஉ நேரிழை நல்லாள்
காவ லாளர் கண்டுயில் கொள்ளத்
தூமென் சேக்கைத் துயில்கண் விழிப்ப
வலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்கப்
புகர்முக வாரண நெடுங்கூ விளிப்பப்
பொறிமயிர் வாரணக் குறுங்கூ விளிப்பப்
பணைநிலைப் புரவி பலவெழுந் தாலப்
பணைநிலைப் புள்ளும் பலவெழுந் தாலப்
பூம்பொழி லார்கைப் புள்ளொலி சிறப்பப்
பூங்கொடி யார்கைப் புள்ளொலி சிறப்பக்
கடவுட் பீடிகைப் பூப்பலி கடைகொளக்
கலம்பகர் பீடிகைப் பூம்பலி கடைகொளக்

---

ககO நல்லாள் - சுதமதி

ககஉ சேக்கைத் துயில் கண் - படுக்கையில் தூங்குகின்ற ஆடவர் மகளிரென்னும் இருபாலாருடைய கண்கள்

ககங வறிதெழுந்தார்ப்ப - பொருளின்றி முழங்க.

ககச புலம் - அறிவு சங்கம் - புலவர் கூட்டம்.

ககரு வாரணம் - யானை நெடுங்கூ விளிப்ப - நெடியகூப்பீட்டைச் செய்ய, மணி எ. கூஎ கூ - கூப்பீடு, "வினைபுனை நல்லில் இனைகூஉக் கேட்பவும்" (புறநா சச)

ககசா வாரணம் - கோழி

ககஎ பணை - குதிரைப்பந்தி ஆல - ஆட

ககஅ பணை - கிளை ஆல - முழங்க

ககக பூம்பொழில் ஆர்கைப் புள் ஒலி சிறப்ப - பொலிவு பொருந்திய சோலையினிடத்தே நிறைதலையுடைய பறவைகளின் முழக்கம் அதிகரிக்க

கஉO பூங்கொடியார் - மகளிர் புள் - கைவளை, "புட்கை போகிய புன்றலை மகார்" (மலைபடு உருங)

கஉக தெய்வங்களுக்குரிய பீடங்களிற் கொடுக்கப்படும் பொலிவு பெற்ற பலிகளானவை முடிவுகொள்ள

கஉஉ அணிகலங்கள் விற்கப்படுகின்ற அங்காடிவீதியில் மலரால் செய்யப்படும் அர்ச்சனைகளைக் கடையிடங்கள் கொள்ள, "பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி" (சிலப் உஅ உஙக) வாயில்களில் இல்லுறை தெய்வங்களின் பொருட்டுக் காலையிற் பூவிடுதல் மரபு

(பி - ம்) ககங 'வலம்புரிசங்கம்' ககச 'புலம்புரிசங்கம்', 'பொலம் புரிச்சங்கம்' ககஎ ஆர்ப்ப' ககஅ 'கணநிலைப்புள்ளும் ஆர்ப்ப' கஉக 'கடிகொள' கஉஉ 'பூப்பொலிகடிகொள'

துயிலுவர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழக்
கொடுப்போர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ
ஊர்துயி லெடுப்ப வுரவுநீ ரழுவத்துக்
காரிருள் சீத்துக் கதிரவன் முளைத்தலும்
மேவுறு மஞ்ஞையி னினைந்தடி வருந்த
மாநகர் வீதி மருங்கிற் போகிப்
போய கங்குலிற் புகுந்ததை யெல்லாம்
மாதவி தனக்கு வழுவின் றுரைத்தலும்
நன்மணி யிழந்த நாகம் போன்றவள்
தன்மகள் வாராத் தனித்துய ருழப்ப
இன்னுயி ரிழந்த யாக்கையி னிருந்தனள்
துன்னிய துரைத்த சுதமதி தானென்

எ.—துயிலெழுப்பிய காதை முற்றிற்று

---

கஉ௩. தோற்கருவி வாசிப்பாருடைய இடங்களிலெல்லாம் செவ்வை செய்யப்பட்ட வாத்தியங்கள் பரவியெழ, பண - இசையென்றுமாம்

கஉ௪ உபகாரிகளுடைய வாயில்கள்தோறும் கொடுத்தற்குரிய பல பண்டங்களும் பரவுதலுற்றுமிக

கஉ௫ எடுப்ப - எழுப்ப உரவு நீரழுவத்து - கடற்பரப்பில்

கஉ௬ சீத்து - அழித்து

கஉ௭ ஏ - அம்பு, "சுதமதி கேட்டுத் துளக்குறு மயில்போல" (௪ · அ௬) என்றார் முன்னும், மு. முல்லை அ௪

கஉ௯ போயகங்குலில் - சென்ற இரவில்

கஙக "மன்னவன் மகனுக்கு குற்றது பொறாஅ, னன்மணி யிழந்த நாகம் போன்று" (உ௫ க௬௪ - ௫) என்று இவ்வுவமையே பின்னும் வரும், "இருநிதிக் கிழவனும் பெருமனைக் கிழத்தியு, மருமணி யிழந்த நாகம் போன்றதும்" (சிலப் கூ ௫௭ - அ) அவள் - மாதவி

கஙங "இன்னுயி ரிழந்த யாக்கை யென்னத், துன்னிய சுற்றந் துயாக்கடல் வீழ்ந்ததும்" (சிலப் கூ. ௫௯ - ௬௦) என்புழியும் இவ்வுவமை வருதல் காண்க

க-கஙச மணிமேகலாதெய்வம் நீங்கித் தோன்றி உரைத்தபின் புகுந்து நீக்கி உரையென்று போயபின், சுதமதி எழுந்து கேட்டு உளங் கலங்கி நீங்கிப் போகி ஒருபுடையிருத்தலும், பாவை உரைக்கும், அது, 'வரும், அஞ்சல்' என்று உரைத்தது, அதனைக்கேட்டு நடுக்குறுநல்லாள், கதிரவன் முளைத்தலும் போகி மாதவிக்குரைத்தலும், அவள் துயருழப்பத் தான் உயிரிழந்த யாக்கை போல இருந்தனளென முடிக்க.

(பி - ம்) கஉ௫ 'எடுப்பிய', 'எழுப்பிய' கஉ௯ 'போகியகங்குல்' கஙஉ 'மகவாரா'

எட்டாவது

# மணிபல்லவத்துத்துயருற்ற காதை

[எட்டாவது மணிமேகலை
மணிபலலவத்துத்துயிலெழுந்து துயருற்றபாட்டு]

ஈங்கிவ ளின்னண மாக விருங்கடல
வாஙகுதிரை யுடுதத மணிபல லவததிடைத
தததுநீ ரடைகரைச சஙகுழு தொடுபபின்
முததுவிளை கழனி முரிசெம பவளமொடு
விரைமா முருட்டுந திரையுலாப பரபபின்
ஞாழ லோஙகிய தாழகண ணசுமபின்
ஆமபலுங குவளையுந தாமபுணாநது மயங்கி
வணடுண மலர்நத குணடுநீ ரிலஞசி
முடககாற புன்னையு மடறபூந தாழையும
வெயிலவர வொழிநத பயிலபூம பநதா

க இவள் - சுதமதி

ங அடைகரையில தொடுபபு - விளாககொணடு உழுதல, "தொடடபே ருழவ ரோதைப பாணியும" (சிலப் உஎ உங0)

ங - ச அடைகரையாகிய கழனியிலென்றுமாம

ரு விரைமரம - சநதனம அகில முதலியன, "விரைமா மென றகில" (தசு. கஉஉ) எனபா மேலும "வீஙகுதிரை கொணாநத விரை மா விறகின்" (சிறுபாண் கருரு)

சு ஞாழல - புலிநககொன்றை, "பொனனுறு ஞாழற் பூவுடன கடுககும், பேழ்வாயப புலியுகிா" (கல் ருஉ) அசுமபு - சேறு, "வாரசும பொழுகு முனறில" (புறநா ககச)

எ மயஙகி - கலநது.

அ குண்டு நீா இலஞசி - ஆழமான நீரையுடைய பொயகைககரை, இலஞசி : ஆகுபெயா.

கூ முடம் - வளைவு க0. பநதா - நிழல.

கூ - க0. புன்னையும் தாழையும வெயிலின வரவையொழிதத பநதா

(பி - ம்.) க. 'ஈங்கிவரிஙஙனமாக', ச 'முதது விளைகழனி' ரு 'வரைமாமுருட்டு' சு 'தாழ்கணணசுருமபி'

அறலவிளங்கு நிலாமண லறுமலாப பளளித
துஞசு துயிலெழூஉ மஞசி லோதி
காதற சுறற மறநது கடைகொள
வேறிடததுப பிறநத வுயிரே போனறு
பணடறி கிளேயொடு பதியுங் காணுள
கணடறி யாதன கணணிற காணு
நீல மாகட னெடடிடை யனறியும
காலே ஞாயிறு கதிாவிரிதது முளைபப
உவவன மருஙகினி லோரிடங் கொலலிது
சுதமதி யொளிததாய துயரஞ செயதனை
நனவோ கனவோ வெனபதை யறியேன
மனநடுக குறூஉ மாறறந தாராய
வலலிருள கழிநதது மாதவி மயஙகும
எலவளை வாராய விடடகன றனையோ
விஞசையிற றோனறிய விளஙகிழை மடவாள
வஞசஞ செயதனள கொலலோ வறியேன

---

கக அறல - நீா அரிதது ஒழுகுதலால உணடாவது, "மடடற லயாறறு" (புறநா கஎ) நிலாமணல - நிலாவைப போனற வெள ளிய மணல மலாபபளளி - உதிாநது கிடககும மலாாகிய படுககையில

உஉ அஞசிலோதி - அழகிய சிலவானமயிரினையுடையாள, "அஞசி லோதி யாசனுக கொருநாள" (உரு உச) எனபாமேலும, "அஞசி லோதி" (குறிஞ்சி. கஅ0)

க - கஉ மணிபலலவததிற கரையிற கழனியிற பாபபில இலஞசிக கரையில மணலிற பளளியில துயிலெழுநத மணிமேகலை யெனக

கரு கடைகொள - முடிவு கொளள கரு காணுள - காணுளாகி

கசு கணடறியாதனவறறைக கணணிற கணடு

கஎ நெட்டிடை - நெடிய இடம

கக 'உவவனம' எனபது முதல மணிமேகலை கூறறு

உ0 சுதமதி. விளி உக இநத நிலை நனவோ கனவோ

உரு மயஙகும - மயஙகுவாள

உச மெலலிய வளையினையுடையாய, எலவளையுமாம

உரு விஞசையிற் றோனறிய - வித்தையினுலே தோனறிய

(பி - ம்) கக 'துறலவிடஙகு நிலாமணறறுமலா' கச 'ஒதி டதது' கரு 'பதியஙகாணுள' கசு - எ 'காண, நீலமாகடல' கஅ 'காலஞாயிறு' உ0 'ஒழிததாய'

ஒருதனி யஞசுவென றிருவே வாவெனத
திரைதவழ பறவையும விரிசிறைப பறவையும
எழுநதுவீழ சிலலையு மொடுஙகுசிறை முழுவலும
அனனச சேவ லரச னாகப
பனனிறப புளளினம பரநதொருங கீணடிப
பாசறை மனனர பாடி போல
வீசுநீரப பரபபி னெதிரெதி ரிருககும
துறையுந துறைசூழ நெடுமணற குனறமும
யாஙகணுந திரிவோள பாஙகினங காணாள
குரறறலைக கூநதல குலைநதுபின வீழ
அரறறினள கூஉ யழுதன ளேஙகி
வீழதுய ரெயதிய விழுமக கிளவியிற

---

உஎ ஒருதனி - ஒபபறற தனிமையை வாவென - வாவெனறு சொலலிககொணடு

உஅ - கூ அலையில தவழ்நதுசெலலும பறவை முதலிய நீர்வாழ பறவைசசாதிகள நானகும

உஅ - கூக திரைதவழ பறவை முதலியனவாகிய பனனிறப புளளினம

கூஉ போர்குறிததுவநது படைவீடுகளில விட்ட பகையரசரிருவருடைய படைகளிரணடும எதிரெதிரிருததலபோல பாடி - படைவீடு

உஅ - கூச திரைதவழபறவை முதலியன, அனனசசேவல அரசனாக நீர்பபரபபில எதிரெதிரிருககுந துறையெனக இபபடியே, "கமபுட கோழியுங கனகுர னாரையும, செஙகால லனனமும பைஙகாறகொககும, கானக கோழியு நீரநிறக காககையு, முளளு மூழலும புளளும புதாவும, வெலபோர வேநதர முனையிடம போலப, பலவேறு குழூஉககுரல பரநத வோதையும" (கO கககச - கூ) எனறார சிலப்பதிகாரத்தும

கூச - டு துறையும குனறமுமாகிய யாஙகணும திரிவோள - மணிமேகலை பாஙகினம - பககததிலுளள இனஙகளை

உஎ - கூடு திருவே வாவெனத திரிவோள

கூகூ. குரறறலைக கூநதல - பூஙகொததை இடததேயுடைய கூநதல, "குரற்றலைக கூநதல குடசம பொருநதி" (சிலப் கச அஎ), "குரறறலைக கூநதல குலைநதுபின வீழ" (சிலப் கூO கூஅ)

கூஎ கூஉய - கூவி

கூஅ விழுமககிளவியின - துனபததைப புலபபடுததும சொற்களால

(பி - ம்) உஎ 'அஞசுவா னறிவேவாவெனத' உகூ 'சிலாலையு மொடுஙகு சிறைமுழவலும', 'ஒடுஙகுசிறைமூயும' கூக 'புளளும பரநது' கூகூ 'நெறி யெதிரநிறகும' 'எதிரெதிரநிறகும' கூகூ 'குரறறலை கூநதல' கூஅ - கூ 'விழுககிளவிபறறுழ்நது'

ருழ்துய ருறுவோ டநதையை யுளளி
எமமிதிற படுததும வெவவினை யுருபபக
கோறறொடி மாதரொடு வேறறுநா டடைநது
வைவா ளுழநத மணிபபூ ணகலத
தையா வோவென றழுவோணா முனனா
விரிநதிலங கவிரொளி சிறநதுகதிா பரபபி
உரைபெறு முமமுழ நிலமிசை யோஙகித
திசைதொறு மொனபான முழநில மகனறு
விதிமா ணடியின வடடங குயினறு
பதும சதுா மீமிசை விளஙகி
அறவோற கமைநத வாசன மென்றே
நறுமல ரலலது பிறமரஞ சொரியாது
பறவையு முதிாசிறை பாஙகுசெனறதிராது
தேவாசொ ரிடட மாமணிப பீடிகை

---

௩௯ தநதையையுளளி - கோவலனை நினைநது

௪௰. எமமிதிறபடுததும வெவவினை - எமமை இததுனபததினிடத தே அகபபடுததும வெவவிய வினை, "எனனிதிற படுதத வேந்தல" (சீவக எகரு), "எனனிதற படுதத நனனுதன மாதரை" (பெருங் 1 34 93) உருபப - முதிர, "ஊழ்வினை யுருததெதன" (சிலப் கசு உகஎ), கோபிககவெனறுமாம

௪௧ கோறறொடிமாதா - கணணகி வேறறுநாடு - பாணடிநாடு

௪௨ வைவா ளுழநத - கூரியவாளால வெடடுணடு வருநதிய அக லம - மாரபு

௪௫ நிலமிசை முமமுழமோஙகி

௪௬ ஒனபான முழம - ஒனபது முழம

௪௭ விதிமாண - விதி மாடசிமைபபடட ஆடியின வடடஙகுயினறு- பளிஙகினால வடடஞ செயயபபடடு

௪௮ பதுமததையுடைய சதுரம, பதுமமெனறததறகுப புததனுடைய பாதஙகளெனினும பொருநதும மீமிசை - மேறபடட இடம

௪௯ அறவோறகு - புததனுககு

௪௪-௯ சிறநது பரபபி ஓஙகி அகனறு குயினறு விளஙகி அமைநத ஆசனமெனக

௫௰ பிற - பிறவறறை மரம நறுமலரையே சொரியும

௫௧ பறவையும அபபீடிகையின பககததிறசெனறு சிறையொலி யைச செயயாது

(பி - ம்) ௪௰. 'மெயவிதறபடுததது', 'எமமிகறபடுததும' ௪௩. 'ஐயா கோவெனறழுவாள' ௪௭ 'விதிமாண்டாடியின விடடணை குயினறு' ௪௮-௯ 'விளஙகியச, சிறவோா' ௫௰ 'பிறமணஞ்' ௫௧ 'உதிராது'

பிறப்புவிளங் கவிரொளி யறத்தகை யாசனம்
கீழ்நில மருங்கி னாகநா டாளும்
இருவர் மன்னவ ரொருவழித் தோன்றி
எமதீ தென்றே யெடுக்க லாற்றார்
தம்பெரும் பற்று நீங்கலு நீங்கார்
செங்கண் சிவந்து நெஞ்சுபுகை யுயிர்த்துத்
தம்பெருஞ் சேனையொடு வெஞ்சமம் புரிநாள்
இருஞ்செரு வொழிமி னெமதீ தென்றே
பெருந்தவ முனிவ னிருந்தற முரைக்கும்

---

௫௩ பிறப்புவிளங்கு ஆசனம் - கண்டோருடைய பழம்பிறப்புக்களை அவர்களுக்கு விளங்குதற்குக் காரணமாகிய ஆசனம்.

௫௪ கீழ்நிலம் - கீழ்த்திசையிலுள்ள இடம். நாகரென்னும் ஒருவகை மனிதர் வாழும் நாடு நாகநாடெனப்படும்; இந்நாட்டின் பெயர், "நாகநன் னாட்டு நானூறு யோசனை" (௯ : ௨௧), "நாகநாடு நடுக்கின் றாள்பவன்" (௨௪ : ௫௪), "நாக நன்னா டாள்வோன்" (௨௫ : ௧௭௮), "நாகநா டாள்வோன்" (௨௯ : ௩) என இந்நூலினுள்ளே பின்னும் வருதல் காண்க. நாக இலச்சினையை (பாம்பின் அடையாளத்தை) உடைமையின், இவர்களுக்கு இப்பெயரும் நகரென்ற பெயரும் வந்தனவென்று ஊகிக்கின்றனர்.

௫௬ எடுக்கல் ஆற்றார் - எடுக்கும் வன்மை இலராய்.

௫௭ தம் பெரும்பற்று - தம்முடைய பெரிய விருப்பம். நீங்கலும் நீங்கார் - நீங்குதலையும் செய்யார்; "சுழலலுஞ் சுழலும், மோடலு மோடு மொருசிறை யொதுங்கி, நீடலு நீடும்" (௩ : ௧௧௧ - ௩) என்றார் முன்னும், "கறைமிட றணியலு மணிந்தன்று" (புறநா. ௧).

௫௮ நெஞ்சு புகையுயிர்த்து - மனங்கொதித்து; "வஞ்சினஞ் சாற்றி நெஞ்சுபுகை யுயிர்த்து" (௪௮ : ௩௭) என்பர் மேலும், "ஊதுலை தோற்க வுயிர்க்குமென் னெஞ்சன்றே" (௧௮ : ௧௩) என்றார் சிலப்பதிகாரத்தும்.

௬௧ பெருந்தவ முனிவன் - புத்தன்; பொறிகளை யடக்கி நெடுநாள் மிக்க நியமத்தோடிருந்து அரிய தவஞ்செய்தது பற்றி இவனைப் பெருந்தவ முனிவனென்றார்; "ஆதிசான் முனிவ னறவழி" (௭ : ௧௧), "பொது வறி விகழ்ந்து புலமுறு மாதவன்" (௧0 : ௮௪), "போதி மாதவன் பூமியிற் றோன்றும்" (௧௫ : ௨௯), "பிணிப்பறு மாதவன் பீடிகை" (௨௫ : ௩௪) என இந்நூலுள்ளே வருதல் காண்க; "பொருந்து போதியில், விருந்த மாதவர், திருந்து சேவடி, மருந்து மாகுமே" (௩), "பூதலத்து ளெவ்வுயிர்க்கும் பொதுவாய திருமேனி, மாதவனீ" (௧௧), "மாதவரின் மாதவனீ வானவருள் வானவனீ" (௧௧) "மருளறுத்த பெரும்போதி மாதவரைக் கண்டிலமால்" (௧௫) என்பன வீரசோழியம் யாப்புப்படல உதாரணங்கள்.

(பி - ம்) ௫௭ 'பற்றி' ௬0 'ஒளிமினெம' ௬௧ 'பெருந்தகை முதல்வனிந்தற முரைக்கும்'

பொருவறு சிறப்பிற புரையோ ரேத்தும
தரும பீடிகை தோன்றிய தாஙகென்

அ.—மணிபலலவததுத்துயருற்ற காதை முற்றிற்று.

---

சுஉ புரையோா - ஈணடு, பெளததரில உயாநதோா, ' புரையோாப பேணிப போகலும போகுவை " (மணி உக அ௲), " அரசுவீற றிருநது புரையோரப பேணி " (மணி உ௫ . அக), " புரையோா தாழுமிப பூமபொழி' லிழிநது " (மணி உஅ கக௨ )

௫௨ - ௬௲ மாமணிப பீடிகை, அறததகையாசனம, தருமபீடிகை அஙகே தோனறியது

௪௲ - ௬௲ அழுவோளமுனனாத தோனறிய தெனக

௫௪ - ௬௲. இவவடிகளிறகூறிய வணணமே, " வேக வெநதிற னுகநாட டரசா .. திருநதொளி யாசனம " (௯ ௫அ - ௬௨) எனறு பினனுங கூறுவா

க - ௬௲. இவள இனனணமாக, மணிபலலவததிடைத துயிலெழும அஞசிலோதி, போனறு காணுளாயக கணடு, திருவே வாவெனறு அழுவோள முனனாத தருமபீடிகை ஆஙகுத தோனறியதெனக

---

ஒனபதாவது

# பீடிகைகண்டுபிறப்புணர்ந்த காதை

[ஒனபதாவது மணிமேகலை மணிபலலவததிடைப பீடிகைகணடு பிறபபுணர்ந்த பாட்டு]

---

ஆங்கது கணடு ஆயிழை யறியாள
காநதளஞ செஙகை தலைமேற குவிநதன

---

க அதுகணட - புததபீடிகையைககணட ஆயிழை - மணிமேகலை யானவள அறியாள - தனனை அறியாளாயினுள இது பதுமைபறறி வநத மருட்கையெனனும மெயபபாடு

(பி - ம்,) உ 'குவிநத'

தலைமேற் குவிந்த கையள் செங்கண்
முலைமேற் கலுழ்ந்து முத்தத் திரளுகுத்தத்தின்
இடமுறை மும்முறை வலமுறை வாராக்
கொடிமின் முகிலொடு நிலஞ்சேர்ந் தென்ன
இறுநுசுப் பலச வெறுநிலஞ் சேர்ந்தாங்
கெழுவோள் பிறப்பு வழுவின் றுணர்ந்து
தொழுதகை மாதவ துணிபொரு ளுணர்ந்தோய்
காயங் கரையினீ யுரைத்ததை யெல்லாம்
வாயே யாகுதல் மயக்கற வுணர்ந்தேன்
காந்தார மென்னுங் கழிபெரு நாட்டுப்
பூருவ தேயம் பொறைகெட வாழும்
அத்தி பதியெனு மரசாள் வேந்தன்
மைத்துன னாகிய பிரம தருமன

---

௩ - ௪ செங்கண் கலுழ்ந்து - சிவந்த கண்கள் கலங்கி முலைமேல் முத்தத்திரள் உகுத்து - கொங்கைகளின்மேலே நீர்த்துளிகளைச் சொரிந்து அதின் - அபபீடிகையினது

௬ மின்கொடி மணிமேகலையினுடைய உருவத்திற்கும், முகில் அவள் கூந்தலுக்கும் உவமை

௭ அலச - வருந்த (தக்க. ௭௨) நிலஞ்சேர்ந்து - வணங்கி

௮ எழுவோள் தனது முற்பிறப்பின் செய்தியை நன்குக அறிந்து

௯ 'தொழுதகை மாதவ' என்பதுமுதல், 'என்றெடுத் தோதினை' (௬௯) என்பது இறுதியாகவுள்ளவை, பிரமதருமனென்னு முனிவன் முற் பிறப்பில் தனக்குக் கூறியவற்றைப் புத்தபீடிகைக் காட்சியாலறிந்து, அம்முனிவனை எதிர்பெய்து மணிமேகலை கொண்டு கூறுகின்றவை யெனக் கொள்க

௧௦ காயங்கரை யென்பது ஒரு நதியின் பெயர் உரைத்ததை, ஐ சாரியை எல்லாம் - முழுவதும்

௧௧. வாயேயாகுதல் - உண்மையாதலை, வாய் - உண்மை, "பொய் யறியா வாய்மொழியால்" (மதுரை ௧௯)

௧௨ பலதேயங்களைத் தன்னுள்ளே பெற்றதென்பார், 'காந்தார மென்னுங் கழிபெரு நாடு' என்றார்

௧௩ பொறை - பாரம், என்றது பாவத்தை

௧௫ பிரமதருமன் விளி

(பி - ம்) ௩ 'கையினள்' ௪ - ௫ 'கவிழ்ந்துமுத்தத்திரளுகுத்தத் தடமுறை' ௬ - ௭ 'நிலஞ்சோந்தென்ன, விறுநுசுப்பலைய' ௮ 'உணர்ந்தே' ௧௨ - ௩ 'கழிபெருநன்னாட்டுப், பூறுவதேசம்'

வெவ்வினை யுருப்ப விளிந்துகே டெய்தி
மாதவி யாகியுஞ் சுதமதி யாகியும்
கோதையஞ் சாய னின்னொடுங் கூடினர்
ஆங்கவர் தந்திற மறவணன் றன்பால்
பூங்கொடி நல்லாய் கேளென் றுரைத்ததும்
உரைத்த பூங்கொடி யொருமூன் றுமந்திரம்
தனக்குரை செய்துதா னேகிய வண்ணமும்
தெய்வம் போயபின் றீவ திலகையும்
ஐயெனத் தோன்றி யருளொடு மடைந்ததும்
அடைந்த தெய்வ மாபுத் திரன்கை
வணங்குறு பாத்திரம் வாய்மையி னளித்ததும்
ஆபுத் திரன்றிற மறவணன் றன்பால்
கேளென் றுரைத்துக் கிளரொளி மாதெய்வம்
போகென மடந்தை போந்த வண்ணமும்
மாதவன் றன்னை வணங்கின ளுரைத்தலும்
மணிமே கலையுரை மாதவன் கேட்டுத்
தணியா வின்பந் தலைத்தலை மேல்வரப்
பொற்றொடி மாதர் நற்றிறஞ் சிறக்க
உற்றனர் வாயி னிவாதிற முரைக்கேன்
நின்னொடு தெய்வ நினக்கெடுத் துரைத்த

---

தாரை நிலாமுற்றத்தின்மேல் ஏறி வீழ்ந்தும் இறந்தமையால், 'தாரையும் வீரையும், வெவ்வினை யுருப்ப விளிந்து' என்றார், மணி கஉ சரு - அ

கஎ - அ ழ மணி கO · எரு - ச கக திறம் - வரலாறு

உக பூங்கொடி - மணிமேகலாதெய்வம் மூன்றுமந்திரம் · மணி. கO : அO - கக

உச ஐயெனத் தோன்றி - விரைவாகத் தோன்றி.

உரு தெய்வம் - தீவதிலகை உஎ - அ மணி கக. ருஉ.

உகூ போக என - போவாயென்று சொல்ல

மேல்வருவன அறவணவடிகளுடைய கூற்று

நஉ தலைத்தலை மேல்வர மணி உ ரு.

நந மாதர் · விளி நற்றிறம் - நல்ல கூறுபாடுகள்

நச உரைக்கேன் - உரைப்பேன்.

(பி - ம்) உசு 'வணங்குபாத்திர' உஅ 'கேளென்றுரைத்த' நந 'பொற்றொடிமாதவர்'

அந்நா ளன்றியு மருவினை கழூஉம்
ஆதி முதல்வ னடியிணை யாகிய
பாதபங் கயமலை பரவிச் செல்வேன்
சச்சய மாளுங் கழற்கால் வேந்தன்
துச்சயன் றனையோர் சூழ்பொழிற் கண்டேன்
மாபெருந் தானை மன்ன நின்னொடும்
தேவியர் தமக்குந் தீதின் றேயென
அழிதக வுள்ளமோ டாற்றின ளாகி
ஒளியிழை மாதர்க் குற்றதை யுரைப்போன்
புதுக்கோள் யானைமுன் போற்றாது சென்று
மதுக்களி மயக்கத்து வீரை மாய்ந்ததூஉம்
ஆங்கது கேட்டோ ராரமிய மேறித்
தாங்காது வீழ்ந்து தாரைசா வுற்றதூஉம்
கழிபெருந் துன்பங் காவல னுரைப்பப்
பழவினைப் பயனீ பரியலென் றெழுந்தேன்
ஆடுங் கூத்திய ரணியே போல
வேற்றோ ரணியொடு வந்தீரோவென
மணிமே கலைமுன் மடக்கொடி யாதிறம்
துணிபொருண் மாதவன் சொல்லியு மமையான்

---

௩௬ அந்நாள் அன்றியும் - அந்நாளிற் சென்றதல்லாமலும்

௩௮ பாதபங்கயமலை: மணி ௧௦: ௬௧-௮.

௩௮-௪௦ செல்வேன் துச்சயனை ஓர் பொழிலிற் கண்டேன்.

௪௪. உற்றதை - உற்ற துன்பத்தை.

௪௫. புதுக்கோள் யானை - புதிதாகப் பிடித்துக்கொண்டு வரப்பட்ட யானை; குறுந் ௧௨௧.

௪௭. அது - வீரைமாய்ந்தது அாமியம - நிலாமுற்றம்

௪௯ கழிபெருந் துன்பம் - மிகப்பெரிய துன்பம், அவ்விருவரும் இறந்த பெரியதுன்பமுமாம், கழிதல் - நீங்குதல்

௪௮-௯ மாய்ந்ததும் சாவுற்றதுமாகிய துன்பத்தைத் காவலனுரைப்ப.

௫௦. பரியல் - வருந்தாதே

௫௧-௨ "ஆடுங் கூத்தர்போ லாருயி ரொருவழிக், கூடிய கோலத் தொருங்குநின் றியலாது" (சிலப் ௨௮ · ௧௬௫-௬)

௫௪ அமையான் - தணியானாகி

(பி-ம்) ௩௭ 'மாதவ முதல்வனடி' ௩௮ 'பங்கயமலர்பரவிச' ௪௨ 'தீங்கின்றேயென' ௪௩. 'ஆற்றானாகி' ௪௫ 'யானையைப் போற்றாச்' ௪௭ 'கேட்டாளரமிய' ௫௧ 'ஆடுகூத்தரணியே' ௫௨ 'வேற்றோரணி'

பிறவியு மறவியும் பெற்றியி னுணர்ந்த
நறுமலர்க் கோதாய நலகினை கேளாய
தரும தலைவன் றலைமையி னுரைத்த
பெருமைசா லறவுரை பெருகா தாகி
இறுதியி னறகதி செல்லும் பெருவழி
அறுகையு நெருஞ்சியு மடர்ந்துகண் ணடைத்தாங்கு
செயிர்வழங்கு தீக்கதி திறந்து கல்லென்
றுயிர்வழங்கு பெருநெறி யொருதிறம் பட்டது
தண்பனி விழுங்கிய செங்கதிர் மண்டிலம்
உண்டென வுணர்த லல்ல தியாவதும்
கண்டினி தின்மையிற் காட்சி போன்றது
சலாகை நுழைந்த மணித்துளை யகவையின்
உலாநீர்ப் பெருங்கட லோடா தாயினும்
ஆங்கத் துளைவழி யுகுநீர் போல
ஈங்கு நல்லற மெய்தலு முண்டெனச்
சொல்லலு முண்டியான் சொல்லுதல் தேறாய்

---

௫௫ அறவி - புண்ணியத்தோடு கூடியவழி

௫௬ நலகினை கேளாய - உவந்து கேளாய, நலகுதல் - உவத்தல், "நலகினு நலகா ஞயினும" (புறநா ௮௦)

௫௫ - ௬ மணி ௨௧ ௧௦௫ - ௬

௫எ. தருமதலைவன - புத்தன, மணி ௧௧ ௬௦

௫௯ இறுதியில நறகதி - நிருவாணம பெருவழி - தருமம.

௬௦ அறுகை - அறுகமபுல கண்ணடைத்தாங்கு - இடம அடைக்கப படடாறபோல

௬௧. செயிர - குற்றம

௬௨ உயிரவழங்கு பெருநெறி - பிறந்திறக்கும உயிர்களெல்லாம போகும்வழி (சிலப் ௨௮ ௧௭௩ - ௪.) ஒருதிறமபட்டது - ஒருவழிப்பட்டது

௬௩. செங்கதிர்மண்டிலம - சூரியமண்டலம.

௬௪. யாவதும - சிறிதும. ௫௯ - ௬௫. பெருவழி போன்றது

௬௬ சலாகை - சிறிய நாராசம அகவையின - உள்ளிடத்தே.

௭௦ யானசொல்லலும் உண்டு. தேறாய - தெளியாய

௭௦ - ௭௧ மக்கள் தேறாராதலின

(பி - ம்.) ௫௯ 'இறுதிநறகதி' ௬௦ 'படர்ந்து கண்ணடைத்த' ௬௧-௨ 'கல்லென் றுயிர்' ௬௩ 'தனமணிவிழுங்கிய' ௭௦ 'சொல்லுமுண்டியான'

மல்லன்மா ஞாலத்து மக்களே யாதலிற்
சக்கர வாளத்துத் தேவ ரெல்லாம்
தொக்கொருங் கீண்டித் துடிதலோ கத்து
மிகுகோன் பாதம் விழுந்தன ரிரப்ப
எரு இருளபரந்து கிடந்த மலர்தலை யுலகத்து
விரிகதிர்ச் செல்வன் றோன்றின னென்ன
ஈரெண் ணூற்றோ டீரெட் டாண்டிற்
பேரறி வாளன் றோன்றுமதற் பிற்பாடு
பெருங்குள மருங்கிற் சுருங்கைச் சிறுவழி
அ௦ இரும்பெரு நீத்தம் புகுவது போல
அளவாச் சிறுசெவி யளப்பரு நல்லறம்
உளமலி யுவகையோ டுயிர்கொளப் புகூஉம்
கதிரோன் றோன்றுங் காலை யாங்கவன்
அவிரொளி காட்டு மணியே போன்று

---

எரு தொக்கு - கூடி துடிதலோகம் - துஷிதலோகம், இஃது உலகம் முப்பத்தொன்றனுள் ஒன்பதாவது, மஹாராஜிகலோக முதலிய தெய்வ லோகம் ஆறனுள் நான்காவது

எச மிகுகோன் - சிறந்ததேவன், இவன் பெயர் பிரபாபாலனென்று சில புத்தநூல்களால் தெரிகின்றது

எஉ - ச மணி கூ௦ எ - கூ எசு செல்வன் - சூரியன்

எரு - சு புத்தன் தோற்றத்துக்குச் சூரியோதத்தை உவமை கூறி யிருத்தலை, இந்நூலிற் பலவிடத்தும் காணக (௧௦. ௧௦-௧௧, ௩உ அரு - சு, உக ககசுரு - எ, உசு சகு)

எஅ பேரறிவாளன் - புத்தன் பிற்பாடு - பின்னுக, இஃது ஒரு சொல, "பெண்ணணி கோலம் பெயர்ந்தபிற பாடு" (சிலப் கங க)

எச - அ பிறப்பத் தோன்றும்

எசு - அ தோன்றினனெனனப் பேரறிவாளன் தோன்றுவான்

எகூ சுருங்கை - மதகு சிறுவழி - சிறுவழியில

அ௦ நீத்தம் - வெள்ளம் அக செவி - செவியில

அஉ உயிர் உவகையோடு கொள்ள

எகூ - அஉ சிறுவழியில நீத்தம்புகுவதுபோலச் சிறுசெவியில நல்லறம்புகும்

அங காலை - காலத்தில் அச மணி - சூரியகாந்தம்

(பி - ம்) எக 'மக்களே திரசசெல்வனறோனறினி யாதலிற' எங 'துடிதபோகத்து' எரு 'விண்பரந்துகிடந்த' எகூ 'விசித்திரச் செல்வன்' எகூ 'சுருங்கிற சிறுநெறி' அஉ 'உளமலைபுவகை' அங 'காலையாங்கணவி'

மைத்திருள் கூர்ந்த மனமாசு தீரப்
புத்த ஞாயிறு தோன்றுங் காலைத்
திங்களு ஞாயிறுந் தீங்குறா விளங்கத்
தங்கா நாண்மீன் றகைமையி னடக்கும்
வானம் பொய்யாது மாநிலம் வளம்படும்
ஊனுடை யுயிர்க ளுறுதுயர் காணா
வளிவலங் கொட்கு மாதிரம் வளம்படும்
நளியிரு முந்நீர் நலம்பல தரூஉம்
கறவைகன் றார்த்திக் கலநிறை பொழியும்
பறவை பயன்றுய்த்துத் துறைபதி நீங்கா
விலங்கு மக்களும் வெரூஉப்பகை நீங்கும்
கலங்கஞர் நரகரும் பேயுங் கைவிடும்

---

௮௫. மைத்து - கறுத்து

மேல்வருவன. புத்தன் அவதரிக்குங் காலத்து உளவாகும் நற்குறிகள்.

௮௭ தீங்கு உறா விளங்க - தீமைகள் உறாமல் விளங்க, விரோதமில்லாம லிருக்கவென்றபடி.

௮௮ நாண்மீன் - நட்சத்திரங்கள் ௮௯. வானம் - மேகம்.

௯0 உடம்புமெலிந்த உயிர்கள் துயரைக்காணா, உடையுயிர் வினைத்தொகை ஊனுடையுயிர் - மக்கள்முதலிய உயிர்களுமாம்

௯௧ வளிவலம் கொட்கும் - காற்று வலமாகச் சுழலும், "வலமாதிரத்தான் வளிகொட்ப" (மதுரைக். ௫) மாதிரம் - திசை, மலையுமாம், "மாதிரங் கொழுக்க" (மதுரைக். ௧0)

௯௨ நளி இரு முந்நீர் - நீர்செறிந்த பெரியகடல், "நளியிரு முந்நீர் நாவா யோட்டி" (புறநா. ௬௬), முந்நீர் எழுவாய் நலம் ஓர்க்கோலை சங்கமொளிர்பவளம் வெண்முத்த, நீர்ப்படு முப்பிறோ டைந்து" (சிலப். ௧0 ௧0௭, மேற்.) என்னும் வளங்கள்

௯௩ கறவை - கறத்தலையுடைய பசுக்கள் கன்று ஆர்த்தி - கன்றை உண்ணச்செய்து கலம் நிறை பொழியும் - கறவைக்கலமும் அதனினின்றும் பால்சொரியும் சாலும் வழியும்படி பாலைப்பொழியும், நிறை - சால, "பீரிவாய் பரந்த நீரறு நிறைமுதல்" (பதிற். ௧௫), "கன்றருத்தி மங்கையர் கலநிறை பொழிதர, நின்றமேதி" (சீவக. ௬௬) கறவைகள் பொழியும்

௯௪ பறவைகள் நீங்கா, புறநா. ௨0 துய்த்து அனுபவித்து, புசித்தென்றுமாம்

௯௫ மிருகசாதியும் மனிதசாதியும் தம்முள் அஞ்சுதற்குக் காரணமாகிய பகைமையை ஒழியும்

௯௬ அஞர் - துன்பம் அஞரை நரகசாதியும் பேய்சாதியும் விட்டொழியும்

(பி - ம்.) ௮௫. 'மனமாசுகழூஉம்' ௮௯ 'வளம்படும்' ௯0 'உயிர்கள் விறுவ துயர்' ௯௧ 'வலங்கொள்ளும்' ௯௫ 'பெரும்பகை நீக்கும்'

கூனுங் குறளு மூமுஞ் செவிடும்
மாவு மருளு மன்னுயிர் பெறாஅ
அந்நாட் பிறந்தவ னருளறங் கேட்டோர்
இன்னாப் பிறவி யிகந்தோ ராதலிற்
போதி மூலம் பொருந்திய சிறப்பி
னாதன் பாத நவைகெட வேத்துதல்
பிறவி தோறு மறவேன் மடக்கொடி
மாதர் நின்னால் வருவன விவ்வூர்
ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள
ஆங்கவை நிகழ்ந்த பின்ன ரல்லது
பூங்கொடி மாதர் பொருளுரை பொருந்தாய்

---

கூஎ மூ சிலப். இ. ககஅ கூன் - வளைவு, ஈண்டு வளைவையுடைய வடிவத்திற்கு ஆகுபெயர் குறள் - குறுகியவடிவம், மக்களுள் நீரக் குறியானைக் குறளென்றும், அவனிற் சிறிது நெடியானைச் சிந்தென்றும் கூறுவர் ஆசிரியர் நச்சினார்க்கினியர் (தொல். செய். கூ சO) ஊமம் - ஊமை

கூஅ மா - விலங்குவடிவாகப் பிறப்பது மருள் - அறிவின்றி மயங்கியிருப்பது உயிர் - ஈண்டு மக்களுயிர்

கூஎ - அ கூன்முதலிய வடிவங்களை உயிர்கள் பெறமாட்டா கூன் முதலிய ஆறனோடு குருட்டையும் மணைபோற் பிறப்பதாகிய பிண்டத்தையுங் கூட்டி எண்வகையெச்சமென்பர், இதனை, "சிறப்பில் சிதடு முறுப்பில் பிண்டமும் கூனுங் குறளு மூமுஞ் செவிடு, மாவு மருளு முளப்பட வாழ்நர்க் கெண்பே ரெச்ச மென்றிவை யெல்லாம் பேதைமை யல்ல தூதிய மில்லென" (புறநா. உஅ) என்பதனாலும், "குறளொடு செவிடு மூங்கை கூன் மருள் குருடு மாவே, யுறுமுறுப் பில்லாப் பிண்ட மோதிய வெண்மெய்யெச்சம்" (சூடாமணி கஉ. கச) என்பதனாலும் உணர்க

கூகூ அருளறம் வினைத்தொகை, தயாதருமமுமாம்

கOO இன்னா - துன்பம் இகந்தோர் - கடந்தோர்

கOஉ பாதம் - பாதத்தை நவை - குற்றம்

கOஉ - ங ஏத்துதலை மறவேன், மறவேனென்றுமாம்

கOச மாதர் விளி இவ்வூர் - இவ்வூரில்

கOரு மூ மணி உக ககூO ஏது நிகழ்ச்சியென்பதன் பொருளை, மணி ங ச - ஆம் அடியின் குறிப்பிற் காண்க

கOச - ரு வருவனவாகிய ஏது நிகழ்ச்சி

கOஎ பொருளுரை மெய்வார்த்தை, என்றது தருமோபதேச மொழிகளை, "பொய்யில் புலவன் பொருளுரை" (மணி உஉ : கக), "பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலின்" (சிலப். உஅ ககூஅ)

(பி - ம்) கூகூ 'பிறந்தவருளறங்' கOO. 'இகழ்வோராதலிற்' கOங - ச 'மறவேனயானு மடக்கொடியாதலின்மாதர் மாதர்நின்னால'

ஆதி முதல்வ னருந்துயர் கெடுக்கும்
பாதபங் கயமலை பரசின ராதலின்
ஈங்கிவ் விருவரு மிளங்கொடி நின்னொடு
ஓங்குயர் போதி யுரவோன் றிருந்தடி
தொழுதுவலங் கொண்டு தொல்வினை நீங்கிப்
பழுதி னன்னெறிப் படர்குவர் காணாய்
ஆருயிர் மருந்தா மமுத சுரபியெனும்
மாபெரும் பாத்திர மடக்கொடி பெற்றனை
மக்கள் தேவ ரெனவிரு சார்க்கும்
ஒத்த முடிவி னோற முரைக்கேன்
பசிப்பிணி தீர்த்த லென்றே யவரும்
தவப்பெரு நல்லறஞ் சாற்றின ராதலின்
மடுத்தத் தீக்கொளிய மன்னுயிர்ப் பசிகெட
எடுத்தனள் பாத்திர மிளங்கொடி தானென்.

கஉ.—அறவணர்த்தொழுத காதை முற்றிற்று.

---

கOஅ ஆதிமுதல்வன் - புத்தன் கOகூ பரசினர் - துதித்தார்

கOஅ - கூ ஆதிமுதல்வனது பாதபங்கயமலை

கக0 இருவர் - மாதவி சுதமதியென்பவர் இளங்கொடி - விளி

கக௧. உரவோன் - புத்தன், உரம் - அறிவு

ககரு பழுது இல் நன்னெறி - குற்றமில்லாத நல்லவழி, இதனை விசுத்திமார்க்கமென்பர் நெறி - நெறியில் படர்குவர் - செல்குவர்

கOகூ - ககரு பரசினராதலின், இவரிருவரும் நின்னொடு உரவோனடியைத் தொழுது வலங்கொண்டு நீங்கிப்படர்குவர்

ககசு இருசார்க்கும் - இரண்டு பகுதிக்கும்

ககஅ அவ்வறம், தீர்க்கல் ஆகும் அவரும் - அறவணவடிகளும்

கககூ தவப்பெரு நல்லறம் - மிகப்பெரிய நல்லதருமம்

கஉ0 கொளிய - கொளுத்தினாற்போன்ற

கஉக இளங்கொடி பாத்திரத்தை எடுத்தனள்

க - கஉக இளங்கொடி அவர்தம்முடன் அடிகள் யாங்குளரென்று வினவ அயக் குறுகி மாதவனடியை வணங்கி எதிர் உரைத்தலும் கேட்டு, அவரும் தவப்பெரு நல்லறம் சாற்றினராதலின், இளங்கொடி பாத்திரமெடுத்தனளென முடிக்க

(பி - ம்.) கOகூ 'பங்கயமலர்' ககஅ 'அன்றேயாவரும்' கஉ0 'மடுத்த தீக்கதிமன்னுயிர்' கஉக 'எடுத்த பாத்திரம்'

பதின் மூன்றாவது

# ஆபுத்திரன் றிறமறிவித்த காதை

[பதின்மூன்றாவது மணிமேகலைக்கு அறவணர் ஆபுத்திரனறிறங்கூறிய பாட்டு]

---

மாபெரும் பாத்திர மடக்கொடிக் கருளிய
ஆபுத் திரன்றிற மணியிழை கேளாய்
வார ணாசியோர் மறையோம் பாளன்
ஆரண வுவாத்தி யபஞ்சிக னென்போன்
பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து
கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சித்
தென்றிசைக் குமரி யாடிய வருவோள்

---

உ. திறம் - வரலாற்றை

௩ வாரணசி - காசி மறையோம்பாளன் - வேதத்தைப் பாதுகாத்தலை யுடையான், அந்தணனென்றபடி, "வயனங் கோட்டிலோர் மறையோம் பாளன்" (கரு) என்பா பிறரும்

௪ ஆரண உவாத்தி - வேதம் ஓதுவிப்பவன், உவாத்தி உபாத்தி யாயனென்னும் வடமொழிச் சிதைவு வேதத்திற் சில பாகத்தையேனும் வேதாங்கங்களையேனும் சீவனத்தின் பொருட்டு ஓதுவிப்பவன் உபாத்தியா யன், இதனை மனுஸ்மிருதி, ௨-ஆம் அத்தியாயம், ௧௪௧ - ஆம் சுலோகத்திற் காண்க இப்பெயர் தமிழ் நூல்களில் உவாத்தியன், உவாத்தியான், உவாத்தி யெனவும் வழங்கும் அபஞ்சிகன் காரணப் பெயர், பங்கமில்லாதவனென் பது பொருள்

௩ - ௪ மணி கரு எ௮ - க

௫ பார்ப்பனி சாலி - அவன் மனைவி சாலியென்பாள், அந்தணர் களிற் கணவனைப் பார்ப்பானென்றும், மனைவியைப் பார்ப்பனியென்றும் கூறுதல் மரபு, "பார்ப்பான றனனொடு கணணிழந் திருந்தவித், தீத்தொழி லாட்டி" (சு. கரு௨ - ௩) என்று முன்பு வந்திருத்தல் காண்க காப்புக் கடை கழிந்து - காவலின் எல்லையைக்கடந்து, கற்பொழுக்கம் நீங்கி யென்றபடி

• ௬ கணவனுக்குப் பிழை செய்ததனையாலுண்டாகும் தண்டத்திற்குப் பயந்து, தண்டம் - தண்டனை, "கொண்டோற் பிழைத்த தண்டந்தாங்கி" (பெருங் க ௩௬ கரு௪)

௫ - எ மணி ௫ ௩எ - ௮. ஆடிய - ஆடுதற்பொருட்டு

(பி - ம்) உ 'இழாய் கேளாய்' ௩ - க 'வாருணசி யோர் மறை மேம் படுநஞ்ஞான அகத்துத் துஞ்சிருள் யாமத்தீன்ற' ௪ 'ஆரணவு வாத் திகன்'

சூன்முதிர் பருவத்துத் துஞ்சிரு ளியவிடை
ஈன்ற குழவிக் கிரங்கா ளாகித்
தோன்றாத் துடவையி னிட்டன ணீங்கத்
தாயிற் றூவாக் குழவித் துயர் கேட்டோர்
ஆவந் தணைந்தாங் கதன் றுயர் தீர
நாவா னக்கி நன்பா லூட்டிப்
போகா தெழுநாட் புறங்காத் தோம்ப
வயனங் கோட்டிலோர் மறையோம் பாளன்
இயவிடை வருவோ னிளம்பூதி யென்போன்
குழவி யேங்கிய கூஉக்குரல் கேட்டுக்
கழுமிய துன்பமொடு கண்ணீ ருகுத்தாங்

அ. துஞ்சிருள் - யாவரும் தூங்குதற்குக் காரணமாகிய இருளில், செறிந்த இருளுமாம். இயவு இடை - வழியினிடத்தே.

கூ. குழவிக்கு - குழந்தைக்கு.

க0. துடவை - தோட்டம், "தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை" (பெரும்பாண். உ0க), "தொய்யாது வித்திய துளர்படு துடவை" (மலைபடு. கஉஉ).

கூ - க0. மணி. கரு. அரு - எ.

கக. தூவாக்குழவி - உண்ணாத குழந்தை. துயர் - பசித்துயரத்தால் ஒழியாமல் அழுது கூப்பிடும் ஒலி, ஆகுபெயர், "தாயில் தூவாக் குழவி போல, ஓவாது கூஉம் நின் னுடற்றியோர் நாடே" (புறநா. ச).

கஉ. ஆ - பசு. அதன் றுயர் - அக்குழந்தையின் பசித்துன்பம்.

கச. புறங்காத்து ஓம்ப - பாதுகாக்க, இவை ஒருபொருட் பன்மொழி, புறங்காத்தல் - பாதுகாத்தல், "வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" (தொல். செய். சூ. கக0), "மெலிவில் செங்கோ னீபுறங் காப்ப" (புறநா. சஉ) இதனால் ஆபுத்திரனென்பது இவனுக்குப் பெயராயிற்று.

கரு. வயனங்கோடு - ஓரூர். மறையோம்பாளன். மணி. கங. ரு.

கசு. வருவோன் - மனைவியுடன் வருவோன், பின், "காதலி தன்னொடு கைதொழு தெடுத்து" (உ0) என்பதனால், 'மனைவியுடன்' என்பது கொள்ளப்பட்டது. பூதி என்பது அவன் பெயர், "தந்தை பூதியுந் தன்மனை கடிதர" (க0எ) என்று இக்காதையிலேயே பின்பு வருதல் காண்க.

கஅ. கழுமிய - கலந்த, புறநா. உருஅ. கண்ணீர் - உவகைக் கண்ணீர்.

(பி - ம்) அ 'சூன்முதிருயக்கத்துத் துஞ்சிருள்யாமத்து' கூ 'இரங்கினளாகி' க0 'இட்டனணீங்கித' கஉ 'அணைந்தாங்காங்கதன் றுயர் கெட' கரு 'வயவனங் கோட்டில்', 'வனயனங் கோட்டி'

ஆமக னல்ல னென்மக னென்றே
காதலி தன்னொடு கைதொழு தெடுத்து
நம்பி பிறந்தான் பொலிகநங் கிளையெனத்
தம்பதிப் பெயர்ந்து தம்மொடுங் கூடி
மார்பிடை முந்நூல் வனையார் முன்னர்
நாவிடை நன்னூ னன்கன நவிற்றி
ஓத்துடை யந்தணர்க் கொப்பவை யெல்லாம்
நாத்தொலை வின்றி நன்கன மறிந்தபின்
அப்பதி தன்னு ளோரந் தணன்மனைவயிற்
புக்கோ னங்குப் புலைசூழ் வேள்வியிற் •
குரூஉத்தொடை மாலை கோட்டிடைச் சுற்றி
வெரூஉப்பகை யஞ்சி வெய்துயிர்த் துப் புலம்பிக

---

௧௯ ஆமகன் அல்லன் - பசுவினுடைய மகனல்லன், பசுப் பார்த்துக் காத்ததனைக் கண்டோனாதலின் இங்ஙனங் கூறினன்.

௨௦ காதலி - மனைவி. கைதொழுது - அக்குழந்தையைத் தனக்குத் தந்தது தெய்வமென்றெண்ணி அத்தெய்வத்திற்கு அஞ்சலிசெய்து, "பழுதில் காட்சிப் பைந்தொடி புதல்வனைத், தொழுதனள் வாங்கி" (௨௫ : ௧௭௮ - ௯) என்று இந்நூலுள்ளே பின்பு வருதல் காண்க.

௨௧ நங் கிளை பொலிக என்று. ௨௨ பதி - ஊர்.

௨௩ முந்நூல் - பூணுநூல். வனையார் முன்னர் என்பது வினையெச்சத் திரிபு; முந்நூல் வனைதல் விளக்கி நின்றது.

௨௪ நன்னூல் - வேதம் வேதாங்கங்கள். நவிற்றி - நவிற்ற, நவிலுதல் - கூறி அடிப்படுதல், "நல்லோர் குழீஇய நாநவி லவையத்து" (மலைபடு ௭௭), "மறைநவி லந்தணர் நுவலவும் படுமே" (புறநா ௧).

௨௫ ஓத்து - வேதம்.

௨௬ நாத்தொலைவு. மணி. ௨௪ ௧௧, சிலப். ௩ ௪௪.

௨௮. புலை சூழ் வேள்வியில் - அசுத்தமாகிய ஊன்றின்றலைச் செய்கின்ற யாகசாலையில், சூழ்தல் - செய்தல் (தக்க ௨௭௩, உரை), கருதலுமாம். புலையும் வேள்வியும் ஆகுபெயர்.

௨௯ நிறம்பொருந்திய தொடுக்கப்பட்ட மாலை கொம்பினகண்ணே சுற்றப்பட்டு.

௩௩ வெரூஉப்பகை - அச்சத்தைத்தருமபகை, வெரூஉ - அச்சம், "வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை" (பொரு ௧௭௪.) புலம்பி - வருத்தமுற்று, புலம்பு - வருத்தம், "புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சி" (மலைபடு ௪௧)

(பி - ம்) ௨௪ 'நன்கினிநவிற்றி' ௨௫. 'ஒப்புமை யெல்லாம்' ௨௭. 'மனைவியிற் புக்கோ னங்கப்புலைசூழ்வேள்வியில்' ௨௯ 'குருஉக்கொடி'

கொலைநவில் வேட்டுவர் கொடுமர மஞ்சி
வலையிடைப் பட்ட மானே போன்றாங்கு
அஞ்சி நின் றழைக்கு மாத்துயர் கண்டு
நெஞ்சுநடுக் குற்று நெடுங்கணீ ருகுத்தாங்கு
கள்ள வினையிற் கடுந்துயர் பாழ்பட
நள்ளிருட் கொண்டு நடக்குவ னென்னும்
உள்ளங் கரந்தாங் கொருபுடை யொதுங்கி
அல்லிடை யாக்கொண் டப்பதி யகன்றோன்
கல்லத ரத்தங் கடவா நின்றுழி
அட்டாக் குறுமாக் களொ டந்தண ரெல்லாம்
கடத்திடை யாவொடு கையகப் படுத்தி
ஆகொண் டிந்த வாரிடைக் கழிய
நீமக னல்லாய் நிகழ்ந்ததை யுரையாய்
புலைச்சிறு மகனே போக்கப் படுதியென

---

௩௧. கொலை நவில் வேட்டுவர் - கொல்லுதலைச் செய்கின்ற வேட்டுவருடைய கொடுமரம் - வில்

௩௩. அழைக்கும் ஆ துயர் - கூப்பிடுகின்ற பசுவின் துயரத்தை

௩௦ - ௩௩ புலம்பிப் போன்று அஞ்சி நின்று அழைக்கும் ஆ

௨௮ - ௩௩ புக்கோன் ஆவினது துயரத்தைக் கண்டெனக்

௩௫ - ௬ திருட்டுத் தொழிலால், பசுவினது மிக்க துன்பம் இல்லையாம்படி, கடுந்துயர் - மரணத்துன்பமுமாம் பாழ்படக் கொண்டெனக்

௩௬ நள்ளிருள் - செறிந்த இருட்டு, "வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்" (பொருந. ௭௨)

௩௭ உள்ளம் கரந்து - தன்னெண்ணத்தை மறைத்து

௩௯. கல்லதரத்தம் - பருக்கைக்கற்கள் பொருந்திய சின்னெறியையுடைய அருநெறி, "கல்லத ரத்தங் கடக்க" (சிலப். ௧௬. ௫௭)

௪௦ அட்டாக் குறுமாக்களொடு - நெருக்குதலைச்செய்யும் அறிவில்லாதாரோடு, "ஒலித்தொருங் கீண்டிய ஆரக்குறு மாக்களும்" (௧௫ ௫௧) என்பர் பின்னும். குறுமாக்கள் - கலி ௮௨

௪௧ கடம் - அருநெறி

௪௧ ஆ கொண்டு - பசுவைக் கைப்பற்றிக்கொண்டு ஆரிடை - அரியவழி

௪௪ ஊனை விரும்பிப் பசுவைக் கவர்ந்தானென்று நினைந்து, 'புலைச் சிறுமகனே' என்றார் போக்கப்படுதி - விலக்கப்படுவாய்

(பி - ம்) ௩௧. 'கொடுவரமஞ்சி' ௩௫. 'களவினையாகியிக் கடுவினை பாழ்பட' ௩௮. 'ஆகொண்டப்பதி' ௪௨. 'ஆகொண்டந்த' ௪௩ 'நீமகனல்லாய்' ௪௪ 'புலைச்சிரக்கனே போகப்படுதி'

அலைக்கோ லந்தண னறைந்தனன் கேட்ப
ஆட்டி நின் றலைக்கு மந்தண ருவாத்தியைக்
கோட்டினிற் குத்திக் குடர்புய்த் துறுத்துக்
காட்டிடை நல்லாள் கதழ்ந்து கிளர்ந்தோட
ஆபுத் திரன்றா னாங்கவர்க் குரைப்போன்
நோவன செய்யன்மி னொடிவன கேண்மின்
விடுநில மருங்கிற் படுபுல் லார்ந்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாட் டொட்டுஞ் சிறந்ததன் றீம்பால்
அறந்தரு நெஞ்சோ டருள்சுரந் தூட்டும்
இதனொடு வந்த செற்ற மென்னை
முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ

---

௪௫ அலைக்கோல் - வருத்துதலைச் செய்யும் கோல். அறைந்தனர் - அடித்தனராய்.

௪௬ ஆட்டி அலைக்கும் - மிகவும் வருத்துகின்ற; இவை ஒரு பொருட் பன்மொழி.

௪௭ கோடு - கொம்பு. குடர் புய்த்துறுத்து - குடரைப் பிடுங்கி; "கோடுபுய்க்கல்லா துழக்கு நாட்கேள்" (கலி. ௱௩), "புய்த்தெறி கரும்பின் விடுகழை" (புறநா. ௨௮).

௪௮ கதழ்ந்து கிளர்ந்தோட - விரைந்தெழுந்தோட; கதழ்தல் - விரைதல், "கதழ்வும் துனையும் விரைவின் பொருள" (தொல். உரி. சூ. ௧௭); கிளர்தல் - எழுதல், "கால்கிளர்ந் தன்ன வேழம்" (புறநா. ௮௨).

மேல் வருவன ஆபுத்திரன் கூற்று.

௫௦ நொடிவன - சொல்லுவனவற்றை.

௫௧ மேய்தற்கு அரசனால் விடப்பட்ட நிலத்தினிடத்தே தானே உண்டாகிய புல்லை மேய்ந்து; பசுக்கள் கவலையின்றி மேய்தற்கு அரசனால் விடப்பட்ட நிலம் கோசஞ்சார பூமியெனப்படும்.

௫௩ பிறந்தநல் மக்களுக்கு. தீம்பால் - இனியபால்.

௫௫ இதனொடு - இப்பசுவினிடத்து; உருபுமயக்கம். செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது; புறநா. ௱௨.

௫௬ முன்னியது - எண்ணியது. உரைமோ, உரையுமென்னும் ஏவற் பன்மை உயிர்மெய் கெட்டு ஓகாரம்பெற்று வந்தது; என்றென்று ஒரு சொல் வருவிக்க.

(பி - ம்.) ௪௫ 'கேட்புழி' ௪௮ 'கழிந்துகிளர்ந்தோட' ௫௦ 'நோவன செய்யே னொடியாது கேண்மோ', 'நோவல்செய்யல்' ௫௧ 'விடுபுலமருங்கு' ௫௩ 'தொட்டுச்சிறந்த தீம்பால்' ௫௬ 'முதுமொழி மாக்கண்முன்யா துரைமோ'

பொன்னணி நேமி வலங்கொள்சக்கரக்கை
மன்னுயிர் முதல்வன் மகனெமக் கருளிய
அருமறை நன்னூ லறியா திகழ்ந்தனை
தெருமர லுள்ளத்துச் சிறியை நீயவ
வாமக னாதற் கொத்தனை யறியாய்
நீமக னல்லாய் கேளென விகழ்தலும்
ஆன்மக னசலன் மான்மகன் சிருங்கி
புலிமகன் விரிஞ்சி புரையோர் போற்றும்
நரிமக னல்லனோ கேச கம்பளன்
ஈங்கிவர் நுங்குலத் திருடி கணங்களென்
றோங்குயர் பெருஞ்சிறப் புரைத்தலு முண்டால்
ஆவொடு வந்த வழிகுல முண்டோ
நான்மறை மாக்காள் நன்னூ லகத்தென
ஆங்கவர் தம்முளோ ரந்தண னுரைக்கும்
ஆங்கிவன் றன்பிறப் பியானறி குவனென

---

௫௭ நேமி - சக்கரத்தின் சூடு, வட்டமுமாம் வலம் - **வெற்றி**, வலப்பக்கமுமாம் நேமியையுடைய சக்கராயுதம்

௫௮ மன்னுயிர்முதல்வன் - திருமால் மகன் - பிரமன்

௬0 தெருமரல் - சுழற்சி சிறியை - சிறுமையையுடையாய்

௬௧ நூற்பொருளையறியும் அறிவிலானென்பார், 'ஆமக னாதற் கொத்தனை' என்றார், "விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனை யவர்" (குறள், ௪௧0) என்று வருதல் காண்க

௬௨ இகழ்தலும் - அவ்வந்தணர் இகழ்ந்து பேசுதலும்

மேல் வருவன ஆபுத்திரன் கூற்று

௬௩ அசலனென்பவன் ஆனின்மகன், ஆன் - பசு சிருங்கியென்பவன் மானின் மகன், சமீக முனிவருக்குப் பசுவினிடம் பிறந்தவனென்னும் பாரதம், ஆதி ௫0 - ஆம் அத்.

௬௪ விரிஞ்சியென்பவன் புலியின்மகன் புரையோர் - மேலோர்

௬௫ கேசகம்பளனென்பவன் நரியின் மகன், அசிதகேசகம்பள ரென்று ஒரு முனிவர்பெயர் பௌத்த நூல்களிற் காணப்படுகின்றது

௬௮ - ௯ ஆவொடு - ஆவால். நன்னூலகத்து ஆவொடு வந்த அழிகுல **முண்டோ?** இல்லையென்றபடி முன்னம், 'ஆமக னாதற் கொத்தனை' (௬௧) **என்று** அந்தணர் இகழ்ந்ததற்குப் பரிகாரம் கூறுகின்றவனாதலின், **'ஆவொடு வந்த வழிகுல முண்டோ'** என்றான்

௭0 - ௭௧ இவன் பிறப்பை யான் அறிகுவனென்று ஓரந்தணன் **உரைப்பான்**

**(பி - ம்)** ௫௭. 'வலங்கொள்சக்கரக்கை' ௫௮. 'எமக்களித்த' ௬0 'சிறியோய்நீயவ' ௬௩ - ௪. 'சிருங்கிப், புலிமகன்விருஞ்சி' ௬௫ 'தேசிகம் பலின' ௬௬ 'மாக்கண்ணன்னூலக'

நடவை வருத்தமொடு நலக்கூர் மேனியள்
வடமொழி யாட்டி மறைமுறை யெய்திக்
குமரி பாதங் கொள்கையின் வணங்கித்
தமரிற் றீர்ந்த சாலியென் போட்டினை
யாது நின்னூ ரீங்கென் வரவென
மாமறை யாட்டி வருதிற முரைக்கும்
வாரணாசியோர் மாமறை முதல்வன்
ஆரண வுவாத்தி யரும்பெறன் மனைவியான்
பார்ப்பார்க் கொவ்வாப் பண்பிற் றொழுகிக்
காப்புக்கடை கழிந்து கணவனை யிகழ்ந்தேன்
எறிபய முடைமையி னிரியன் மாக்களொடு
தெற்கட் குமரி யாடிய வருவேன்

---

௭௨. நடவை - வழி. நலக்கூர் மேனியள் - இளைத்த உடம்பை யுடையாள்.

௭௩. வடமொழி யாட்டி - பார்ப்பனி; இந்நூலில், ௫ : ௪௦-ஆம் அடியிற் பார்ப்பாரை வடமொழியாளரென்று கூறியிருத்தல் காண்க. மறைமுறை யெய்தி - வேதவிதிப்படியே சென்று.

௭௪. குமரியாடப்போந்தோர், ஆங்குள்ள குமரித்தெய்வப் படிமத்தை வணங்குதல் மரபு.

௭௫. தமரிற்றீர்ந்த - தனக்குச் சிறந்தோரினின்றும் நீங்கிய.

௭௪ - ௫. வணங்கித் தீர்ந்த சாலி. ௭௬. ஈங்கு வரவு என்னென.

௭௭. உரைக்கும் - உரைப்பாள்.

௭௮. வாரணசி = வாராணஸீ - காசி. வடமொழியில் ஸித்தாந்த கௌமுதி என்னும் நூலின் அவ்யயீபாவப் பிரகரணத்தில், "யஸ்யசாயாம" என்னும் ஸூத்ர வியாக்யானத்தில் 'வாராணஸீ' என்பதற்கு, 'நல்ல ஜலத்துக்குத் தூரத்திலில்லாத நகரீ' என்று தத்துவபோதினி யுரையின் ஆசிரியர் பொருள் செய்திருப்பதாகக் கூறுவர்.

௭௯. 'உவாத்தி' என்பது, "தவாஅக் காதலொடு தகையாழ் காட்டும், உவாத்தி யாதலின்" (௧. ௪௪ : ௧௫௦ - ௫௧) என்ப பெருங்கதையிலும் வந்திருத்தல் காண்க.

௮௦. ஒழுகி - நடந்து.

௮௧. காப்புக்கடை கழிந்து; மணி. ௧௫ : ௫.

௮௨. எறிபயம் - அடித்தலாலுண்டாகும் அச்சம். இரியல் மாக்கள் - கெடுதலுற்ற மாக்கள், விரைந்து செல்லும் மாக்களென்றுமாம்.

௮௩. ஆடிய - நீராடும்பொருட்டு.

(பி - ம்.) ௮௧ 'கணவனையிகழ்ந்தேன்' ௮௨ 'எறிபயமுடைமையின்', 'நெறிபயமுடைமையின்' ௮௩ 'தெக்கட்குமரி', 'தக்கண குமரி'

பொற்றேர்ச் செழியன் கொற்கையம் பேரூர்க்
காவதங் கடந்து கோவலர் இருக்கையின்
ஈன்ற குழவிக் கிரங்கே னாகித்
தோன்றாத் துடவையி னிட்டனன் போந்தேன்
செல்கதி யுண்டோ தீவினை யேற்கென
றல்லலுற் றழுத அவ்வை மகனிவன்
சொல்லுதல் தேற்றேன் சொற்பய மின்மையிற்
புல்லல் ஓம்பன்மின் புலைமக னிவனென
ஆபுத் திரன்பின் அமர்நகை செய்து
மாமறை மாக்கள் வருங்குலங் கேண்மோ
முதுமறை முதல்வன் முன்னர்த் தோன்றிய
கடவுட் கணிகை காதலஞ் சிறுவர்
அருமறை முதல்வ ரந்தண ரிருவரும்
புரிநூன் மார்பீர் பொய்யுரை யாமோ

---

௪௪ செழியன் - பாண்டியன் கொற்கை - பாண்டியர்களின் பழைய இராசதானி

௪௫ கோவலர் - இடையர்

௪௭ துடவை - தோட்டம் ௪௬ - ௭ மணி. ௧௩ : ௬ - ௧௦

௪௮ தீவினையேற்குச் செல்கதியுண்டோ

௫௦ பயம் - பிரயோசனம், இன்மையிற் சொல்லுதல் தேற்றேன்

௫௧ புல்லலோம்பன்மின் - தீண்டலைச் செய்யாதொழிக. இவன் புலைமகன் - இவன் அசுத்தமுடைய மகன். புலை - வியபிசாரமுமாம், இது மலைநாட்டு வழக்கென்ப

௫௨ அமர்நகை - விரும்புஞ் சிரிப்பு

௫௩ கேண்மோ, கேளுமென்னும் ஏவற்பன்மை உயிர்கெட்டு ஓகாரம் பெற்றுவந்தது, நன். வி. சூ. ௩௪௪

௫௪. முதுமறைமுதல்வன் - பிரமன்

௫௫ கடவுட்கணிகை - திலோத்தமை யென்பாள். சிறுவர் - பிள்ளைகள்

௫௬ முதல்வராகிய அந்தணரிருவரும். இருவர் - வசிஷ்டர், அகஸ்தியர்

௫௫ - ௬ அந்தணரிருவரும் காதலஞ்சிறுவரென்க

௫௪ - ௬ வசிஷ்டரும் அகஸ்தியரும் திலோத்தமையின் பிள்ளைகளென்பதைப் பின்வரும் வாக்கியத்தாலுணர்க, "வசிஷ்டனும் அகஸ்தியனும், பிரஹ்மா திலோத்தமையென்னும் அப்ஸரஸைக் கண்டகாலத்துக் கலசத்து ஜனித்தனர்" (நீல சமய)

(பி - ம்) ௫௨ 'ஆபுத்திரனுனமர்நகை'

சாலிக குணடோ தவறென வுரைதது
நான்மறை மாககளை நகுவன னிறப
ஓத லநதணாக கொவ்வா னென்றே
தாதை பூதியுந தனமனை கடிதர
ஆகவா களவென்ன றநதணா ருறைதரும
கிராம மெஙக ணுங கடிகையிற கலவிட
மிகக செலவதது விளஙகியோா வாழும
தககண மதுரை தானசென றெயதிச
சிநதா விளககின் செழுஙகலை நியமத
தநதின முனறி லமபலப பீடிகைத
தஙகினன வதிநதத தககணப பேரூா

௯௮ தவறு - குற்றம ௯௯ நகுவனன - சிரிப்பவனுகி

௧௦௦ ஒவவான - பொருநதான, என்றது ஆபுததிரனை

௧௦௧ தாதை - தகப்பன கடிதர - நீககு

௧௦௩ கடிகை - பிசசைப்பாததிரம கலஇட - கலலைப போகட, உலகததிற கடிகையிற கலலிடுவாா எககாலததும இலராகவும இவனுககும இஙஙனம நிகழநததேயென்று இரஙகிக கூறினா, 'கடிகையிற கலலிடுவாரில' என்பது ஒரு பழமொழி, இதனைப பின்வரும வெணபாவாலுணாக "நினைதத நிதுவென்றந நீாமையை நோககி, மனததறிநசெவா மாணடாா - புனதத, குடிகை யிரடடுங குளிாவரை நாட, கடிகையிற கலலிடுவா ரில" (பழ ௨௪௬)

௧௦௫ தககணமதுரை - தென்றிசைககண உள்ள மதுரை, என்றது கூடறபதியை தககணம, வடசொறறிரிபு, சிலப் ௧௪ அக, அடியார்க்

௧௦௬ சிநதாவிளககு - ஸரஸவதீதேவி, மணி பதிகததின ௬௦ - ஆம அடிககுறிபபைபபாாகக நியமம - கோயில, ஸரஸவதீதேவியின கோயிலாதலின, அதறகுக கலைநியமமெனபது பெயராயிறறு, மணி ௧௪. ௧௦ - ௧௧, ௧௭ - ௮

௧௦௭ முனறில அமபலபபீடிகை — சிநதாதேவியின கோயில வாயிற கண உள்ள மனறினிடததில அமபலபபீடிகை — அமபலமாகிய பீடிகை, அஃது உயாததிககடடபபடடிருததலின, பீடிகையெனபபடடது, பீடிகையெனபதறகுக கோயிலவாயிறகண உள்ள பலிபீடமெனினும பொருநதும, இஙஙனங கொளளுஙகாற பீடிகையையுடைய அமபலமென மாறுக

௧௦௮. தஙகினன வதிநது - தஙகி, ஒருபொருட் பனமொழி தககணப பேரூா - மதுரையில

(பி - ம்) ௧௦௦ 'ஒவவாயெனறே' ௧௦௨ 'ஆஙகவாகளவ' ௧௦௩ 'கடிகையிறகலலிட'

ஐயக் கடிஞை கையி னேந்தி
ககo மையறு சிறப்பின் மனைதொறு மறுகிக்
காணார் கேளார் கான்முடப் பட்டோர்
பேணுந ரில்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருகென் றிசைத்துட னூட்டி
உண்டொழி மிச்சி லுண்டோ டுதலை மடுத்துக்
ககரு கண்படை கொள்ளுங் காவலன் றானென்

கங.—ஆபுத்திரன்றிறமறிவித்த காதை முற்றிற்று.

---

ககo மை - குற்றம் மறுகி - சுழன்று

ககக காணார் - குருடர் கேளார் - செவிடர்

ககஉ பேணுநரில்லோர் - அகதிகள் பிணி - நோய்

ககக - ௨ மணி உ௮ ௨௨௨ - ௩

ககங யாவரும் - மேற்கூறப்பட்ட காணார் முதலிய யாவரும் உடன் ஊட்டி - ஒருங்கு உணச்செய்து, உடன் - உடனேயென்றுமாம்

ககச உண்டொழி மிச்சில் உண்டு - அவர்கள் உண்டொழிந்த மிகுதியை யுண்டு, இது, "விருந்தோம்பி, மிச்சின் மிசைவான்" (அரு) என்ற குறளின் பொருளைத் தழுவி வந்தவாறு காண்க ஓடு - பிச்சைப் பாத்திரம் தலைமடுத்து - தலையணையாகக்கொண்டு

ககரு கண்படை - உறக்கம் காவலன் - காத்தலையுடையவன், என்றது ஆபுத்திரனை காவலன் கண்படை கொள்ளுமென்க

க - ககரு அணியிழை, ஆபுத்திரன்றிறங்கேளாய், பார்ப்பனி சாலி, கழிந்து அஞ்சி வருவோள் இரங்காளாகிக் குழவியை இட்டு நீங்க, ஆ சேட்டு அணைந்து நக்கி ஊட்டிப் போகாது ஓம்ப, பூதியென்போன் கேட்டு உவந்து என்மகனென்று எடுத்துப் பெயர்ந்து கூடி நவிற்ற, அறிந்தபின் புக்கோன் ஆ துயர் கண்டு உற்று உவந்து உள்ளங்கரந்து ஒதுங்கி அச்சனேற்றுணியக் கடவாநின்றுழி அந்தணரெல்லாம் குறுமாக்களோடு சென்று கையகப்படுத்திக் கேட்ப, நல்லா குத்திப்புயத்துறுத்து கூட, ஆபுத்திரன் உரைப்போன், 'உரைமோ' என, அந்தணரிகழ்தலும் ஆபுத்திரன், 'நன்னூலகத்து ஆவொடு வந்த அழிகுலமுண்டோ' என ஓரந்தணனுரைசெக்கும், அங்ஙன் முரைப்பவன், 'புல்லலோம்பன்மின், புலைமகனிவன்' என ஆபுத்திரனை நகைசெய்து, 'சாலிக்குத் தவறுண்டோ' என்றுரைத்து நகுவனனிற்ப, பூதி ஒவ்வானென்று கடிதர, கிராமமெங்கணும் கலவிட்ட காவலன் மதுரை சென்றெய்தி வதிந்து எந்தி மறுகி இசைத்து ஊட்டி மிச்சிலுண்டு மடுத்துக் கண்படை கொள்ளுமென வினைமுடிவு செய்க

(பி - ம்) ககஉ 'பேணினரில்லோர்' ககச 'தலையடுத்து', 'தலையெடுத்து' ககரு 'காவேன்றென்ன'

பதினைகாவது

# பாத்திரமரபுகூறிய காதை

[பதினன்காவது மணிமேகலைக்கு அறவணர் அமிர்தசுரபியெனனும பாத்திரம சிநதாதேவி ஆபுத்திரற்குக கொடுத்தவணணம கூறிய பாட்டு ]

ஆங்கவற கொருநா ளமபலப பீடிகைப
பூங்கொடி நல்லாய புகுநதது கேளாய
மாரி நடுநாள வலவிருண மயககத்
தாரிடை யுழநதோ ரமபல மரீஇத
துயிலவோ னறனனைத தொழுதன னேததி
வயிறுகாய் பெருமபசி மலைக்கு மென்றலும

க ஆங்கவறகு - ஆபுததிரனுக்கு, ஆங்கவன் - ஒருசொல், "ஈங் கிவள" (திருச்சிற் கக) எனபுழிபபோல அமபலபபீடிகை - அமபலததில அமபலம - பலருஞசெனறு தங்குதறகுரிய பொதுவிடம இது மனறமென வும கூறபபடும அமபலப பீடிகை மணி கரு கoஎ, கசு நிகூ

உ நல்லாயெனறது மணிமேகலையை புகுநதது - நேர்நதது

க - உ அவறகுப புகுநதகைக கேள

ஙு மாரிநடுநாள - மழைததுளிகளையுடைய இடையாமததில வல விருணமயககதது - வலிய இருடகலபபில, 'இருணமயககதது' எனற தனால, நடுநாள இடையாமமாயிறறு, "புதையிருளகூர, நெறியா ரருள பெற நாநடு நாளிடை நீநதுதும" (தஞ்சை உகரு) என வருதல காணக

ச அரியவழியில வருநதி வநதோராகிய கூததா முதலியோா அம பலததை யடைநது, கூததா முதலியோாவநது தஙகுமிடம அமபலமென பதை, " மனறில வதியுநா சேட்புலப பரிசிலா" (மலைபடு, சகூஉ) என பதனுலுணாக

ரு துயிலவோனறனனை - ஆபுததிரனை

சு மலைக்கும - மாறுபடுததும, வருததுமெனறபடி, "மலைததல போகிய சிலைததாா மாாப" (புறநா கe) வயிறுகாய பெருமபசி மணி. கக ககO, கஎ நிஎ

ச - சு உழநதோா மரீஇத தொழுது எததிப பசி மலைக்குமெனறலு மெனக

(பி - ம்) ச அமபலம விருஅய' சு. 'மலையுமென்றலும' 'அலைக்கு மெனறலும'

ஏற்றா ணல்லது வேற்றா ணில்லோன்
ஆற்றுவது காணா னாரு ரெய்தக்
கேளிது மாதோ கெடுகநின் றீதென
யாவரு மேத்து மிருங்கலை நியமத்துத்
தேவி சிந்தா விளக்குத் தோன்றி
ஏடா வழியல் லெழுந்திது கொள்ளாய்
நாடுவறங் கூரினுமிவ் வோடுவறங் கூராது
வாங்குநர் கையகம் வருந்துத லல்லது
தான்றொலை வில்லாத் தகைமைய தென்றே
தன்கைப் பாத்திர மவன்கைக் கொடுத்தலும்
சிந்தா தேவி செழுங்கலை நியமத்து

---

ஏ. ஏற்றாண் - இரந்துண்ணுமுணவு; வேற்றாண் இல்லோன் - வேறு உணவில்லாத ஆபுத்திரன்.

அ. ஆற்றுவது காணான் - உதவும்வழியைக் காணானாகி; ஆற்றுதல் - உதவுதல்; "ஒருவீ ரொருவீர்க் காற்றுதிர்" (புறநா. ௫அ) ஆர் அஞர் - தீர்தற்கரிய வருத்தம்.

இனி ஆபுத்திரன் வருத்தம் தீரும்படி அவனுக்குச் சிந்தாதேவி அமுதசுரபி யெனனும் பாத்திரங்கொடுத்தமை கூறுவார்.

௯. இதுகேள் நின் தீதுகெடுக.

௧௦. யாவரும் ஏத்தும் - எச்சமயத்தினரும் துதிக்கும்; நியமம் - கோயில். கலைநியமம்: மணி. ௧௫ ௧௦௬.

௧௧. தேவியாகிய சிந்தாவிளக்கு.

௧௨. அழியல் - வருந்தாதே; இது கொள்ளாய் - இப்பாத்திரத்தைக் கொள்.

௧௩. வறங்கூரினும் - வற்கடம் மிகினும்; வறம் - வற்கடம், பஞ்சம்; "ஞாலம் வறந்தீரப் பெய்யக் குணக்கேர்பு, காலத்திற் றோன்றிய கொண்மூப்போல" (கலி. அ௨) வறங்கூராது - வறுமையுறாமல்; பு. மணி. ௨௫ ௧௪௪.

௧௫. தான் என்றது பாத்திரத்தை; என்று - என்று சொல்லி.

௧௪ - ௫. மணி. ௧௧ ௪௯ - ௫௦, ௧௭ ௫ - ௬.

ஏ - ௧௬. இல்லோன் ஆருறெய்தச் சிந்தாவிளக்கு, 'நின் தீது கெடுக' எனத் தோன்றி, 'கொள்வாய், கூராது, தகைமையது' என்று பாத்திரத்தைக் கொடுத்தலும்.

மேல்வருவன, பாத்திரம்பெற்ற மகிழ்ச்சியால் ஆபுத்திரன் சிந்தாதேவியைத் துதிக்குந் துதிகள்.

(பி - ம்.) ௯. 'நின்றீயமை' ௧௨. 'ஏடாபரியவெழுந்திதுகேளாய' ௧௩. 'இவரோடுவறங' ௧௫. 'தானறொலைவறியாத்தகைமையது'

நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்
வானோர் தலைவி மண்ணோர் முதல்வி
ஏனோ ருற்ற விடர்களை வாயெனத்
தான்தொழு தேத்தித் தலைவியை வணங்கி
ஆங்கவர் பசிதீர்த் தந்நா ளொட்டு
வாங்குகை வருந்த மன்னுயி ரோம்பலின்
மக்களு மாவு மரஞ்சேர் பறவையும்
தொக்குடன் ஈண்டிச் சூழ்ந்தன விடாஅது
பழுமரத் தீண்டிய பறவையி னெழூஉம்
இழுமென் சும்மை யிடையின் றொலிப்ப

௧௮ நந்தாவிளக்கே - கெடாத தீபமே, மைவிளக்கு அழிதன் மாலைத்தாதலின், 'நந்தாவிளக்கே' என்றான், இது தெரிதருதேற்ற வுவமையெனனும் அலங்காரம் இவள் வாக்கின் மடந்தையாதலின், 'நாமிசைப் பாவாய்' என்றான்

௧௭ - ௨௦. அடுக்கிய விளிகளால் சிந்தாதேவிபால் ஆபுத்திரனுக்குள்ள அன்பு மிகுதி விளங்கும்

௨௧ தொழுது - அஞ்சலிசெய்து தலைவி - சிந்தாதேவி

௩ - ௨௧. மணி ௨௫ : ௧௩௯ - ௫௩

௨௩ வாங்குகை வருந்த மணி ௧௯ ௪௯ மன்னுயிர் என்றார், விலங்கு முதலியனவும் உண்பிக்கப்படுதல் நோக்கி ஓம்பலின் - பாதுகாத்தலினாலே

௨௪ மாவும் - விலங்குகளும்.

௨௫ உடன் தொக்கு ஈண்டி - ஒருமிக்கச் சேர்ந்து திரண்டு விடா - விடாவாய்

௨௬ பழுமரத்து ஈண்டிய - பழுத்தமரத்தின்கண்ணே வந்து கூடிய பழுமரம், ஆலமரமுமாம் பறவையின் - பறவைபோல, பொருந. ௯௪ பெரும்பாண். ௨௦, புறநா. ௧௭௩, நாலடி, ௨௦௨, சீவக. ௮௨௮ எழூஉம் எழுப்புகின்ற

௨௭ சும்மை - ஒலி இடையின்று இடையீடில்லாமல் இடை - இடையீடு, "எய்தத லறியா திடையின்றி" (பு - வெ ௨௮௦)

௨௪ - ௭ மணி ௨௮ ௨௨௨ - ௩௨

௨௦ - ௨௭ ஆபுத்திரன் களைவாயெனத் தொழுது ஏத்தி வணங்கி அந்நாள் தொட்டு அவர் பசிதீர்த்து ஓம்பலின் விடாவாய் எழூஉஞ்சும்மை இடையின்றொலிப்பவெனக்

மேலே, ஆபுத்திரனுடைய புண்ணியமிகுதியைத் தனது பாண்டுகம்பள நடுக்கத்தாலறிந்து இந்திரன் அவனுக்கு வரங்கொடுத்தற் பொருட்டு விருத்தவேதியன் வடிவுகொண்டு வருதலைக் கூறுவார்

(பி - ம்) ௨௪ 'அருஞ்சிறைப்பறவையும்'

ராண்டுநீ ஞாலத் திவண்செய லிந்திரன்
பாண்டு கம்பளந் துளங்கிய தாதலிற்
றளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி
வளைந்த யாக்கையோர் மறையோ னாகி
மாயிரு ஞாலத்து மன்னுயி ரோம்பும்
ஆருயிர் முதல்வன் றன்முன் றோன்றி

---

உக பாண்டு கம்பளம் - வெள்ளைக்கம்பளமாகிய ஆசனம் துளங்கியது - நடுங்கச்செய்தது

உஅ - க ஆபுத்திரன் அறச்செயல் இந்திரனுடைய பாண்டுகம்பளத்தை நடுங்கச்செய்தது இப்பூவுலகில் தானம் சீலம் முதலியவற்றிற் சிறந்த பௌத்தர் உளராயினும், அவர்களுக்கு ஏதேனும் துன்பமுளதாயினும் இந்திரனுடைய பாண்டுகம்பளம் நடுங்குமென்றும், அக்குறிப்பால் அவற்றை யறிந்துவந்து அவர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தலும் தீங்குகளை ஒழித்தலும் இந்திரனுடைய கடப்பாடென்றும் தெரிகின்றது புத்த தருமவொழுக்கினனாகிய வணிகனொருவன் கப்பல் கவிழப்பெற்றுக் கடலில்வருந்தியதைத் தனது பாண்டு கம்பளத்தின் நடுக்கத்தாலறிந்த இந்திரன் அவ்வணிகனை அத்துன்பத்தினின்று நீக்கிப் பாதுகாத்தனனென்று இந்நூல் உக - ஆம் காதையில் (கஈ - உஈ) வருதல் காண்க, " நமி விநமி என்பாரிருவர் குமாரர் தபச்சரணம் பண்ணியருளாநின்ற பகவானை யடைந்து நமஸ்கரித்துக் கந்தபுஷ்பாதிகளாற் பூசித்து நாநாவித ஸ்தோத்திரங்களை அதிமதுரமாகப் பாடிநின்று விண்ணப்பம் செய்வார் பகவானே தம்மாற் புத்திரபௌத்திராதி பந்து ஜனங்களுக்கு வேறு வேறு இராச்சியம் கொடுக்கப்பட்டன, யாங்கள் அப்பொழுது சந்நிகிதமாயினமல்லேம், இப்பொழுது எங்களுக்கு விபவங்களைப் பிரஸாதித்தருளவேண்டுமென்று நிரப்பந்தித்துநின்று துதிப்ப, இதனைத் தரணேந்திரன் தனது ஆசனாங்கம்பித்தலில் அறிந்து கடிது வந்து மனுஷ்ய ரூபத்தைக்கொண்டு பருவதம்போலச் சலியாது எழுந்தருளிநின்ற பகவானது தைரியாதிசயத்தினைக் கண்டு விஸ்மிதனாகிப் பிரதக்ஷிணம்பண்ணித் துதித்துக் குமாரர்களை நோக்கிச் சொல்லுவான " என்று ஸ்ரீபுராணத்துள்ள முதலாவது விருஷபதீர்த்தங்கரர் புராணத்தில் வருதலால், இப்படியே தனது ஆசன நடுக்கத்தால் அறியவேண்டுவனவற்றை யறிந்து நல்லுயிர்களுக்குச் செய்யவேண்டுவனவற்றை இந்திரன் செய்வானென்று கூறுதல் சைன சம்பிரதாயமென்றும் தெரிகின்றது

ருO - ருக தளர்ந்த நடையின் - நடை தளர்தலால், தண்டுகால் ஊன்றி - தான்பிடித்த தண்டினையே காலாகவூன்றி, நாலடி கச வளைந்த யாக்கை மறையோன் ஆகி - கூனிய உடம்பையுடைய வேதியனாகி, " தளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி, வளைந்த யாக்கை மறையோன் " (சிலப். கரு சச - ரு) ஆகி ஊன்றியெனக்

ருரு ஆருயிர்முதல்வன் - ஆபுத்திரன், " ஆருயி ரோம்புநன் ",

(பி - ம்) உக 'பாண்டென்ன பவனத் துளங்கிய' ருக 'யாக்கை மறையோனாகி'

இந்திரன் வந்தே னியாது நின்கருத்
துன்பெருந் தானத் துறுபயன் கொள்கென
வெள்ளை மகன்போல் விலாவிற நக்கீங்
கெள்ளினன் போமென் றெடுத்துரை செய்வோன்
ஈண்டுச் செய்வினை யாண்டுநுகர்ந் திருத்தல்
காண்டகு சிறப்பினுங் கடவுள ரல்லது
அறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர்
நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரு மில்லாத் தேவர்நன் னாட்டுக்

---

"அருந்தே மாந்த வாருயிர் முதல்வனை" (௫௧, ௬௮) என இவனை இக்காதையிலேயே பின்பு கூறுதல் காண்க.

௩௪ யாதுநின் கருத்து - உன்னுடைய எண்ணம் என்ன?

௩௫ தானங்கள் பலவற்றுள்ளும் சிறந்தமையின், அன்னதானம் பெருந்தானமென்னப்பட்டது. உறுபயன் - மிக்க பிரயோசனம். கொள்க என - கொள்கவென்று இந்திரன் சொல்ல.

இனி, இங்ஙனங் கூறிய இந்திரனுக்கு ஆபுத்திரன் விடை பகர்ந்தது கூறுவார்.

௩௬ வெள்ளைமகன் போல - பயனில்லாத சொல்லையுடையவன் போல, "வெள்ளைக் கோட்டி" (சிலப் ௩௦ ௧௬௮) என்பதற்கு, 'பயனில் உரைக்கோட்டி' என்று பொருள் கூறுவர் அரும்பதவுரையாசிரியர்.

௩௭ எள்ளுதல் - இகழுதல். போம் - ஏவற்பன்மை. செய்வோன் - பெயர்.

௩௮ ஈண்டுச்செய்வினை - இவ்வுலகத்துச் செய்யும் புண்ணியங்களின் பயனை. ஆண்டு - அவ்விடத்தில்.

௩௮ - ௯ நுகர்ந்திருத்தல் காண்டகு - அனுபவித்திருத்தலைச் செய்கின்ற நுங்கடவுளரென்றுன், தனக்கு அவர் அயலென்னுங்கருத்தால், "நின்றநின் காமமி றனையும்" (திருச்சிற் ௭௯) என்புழிப்போல.

௪௦ புறங்காத்தோம்பல் மணி ௧௩ ௬௪.

௪௨ யாவருமில்லா - அறஞ்செய் மாக்கள் முதலியோர்களில் ஒருவருமில்லாத.

௩௮ - ௪௨ தேவருலகம் வினைப்பயன் அனுபவிப்போர்க்கேயன்றி அறஞ்செய் மாக்கள் முதலியோர்க்கு இடமன்றென்பதை, "பொலம்பூங் காவி னன்னாட் டோரும், செய்வினை மருங்கி னெய்த லல்லதை, உடையோ ரீதலு மில்லோ ரிரத்தலும், கடவ தன்மையிற் கையற வுடைத்து" (புறநா. ௩௮) எனவும், "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" (குறள், ௧௦௫௮, பரி மேற்) எனவும்,

(பி - ம்) ௩௬ 'வெள்ளைகள் போல விலாவிற' ௩௭ போனமென'

கிறைவ னாகிய பெருவிறல் வேந்தே
வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தவர்
திருந்துமுகங் காட்டுமென் றெய்வக் கடிஞை
உண்டி கொல்லோ வுடுப்பன கொல்லோ
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவையீங் களிப்பன தேவர்கோ னென்றலும்
புரப்போன் பாத்திரம் பொருந்தூண் சுரந்தீங்
கிரப்போர்க் காணா தேமாந் திருப்ப
நிரப்பின் றெய்திய நீணில மடங்கலும்

---

'ஈவாரும் ஏற்பாருமின்றி எல்லாரும் ஒரு தன்மையராதலின் ஒப்புரவு புத்தேளுலகத்து அரிதாயிற்று' (குறள், ௨௧௩, பரிமேல்.) எனவும் வருவனவற்றாலுணர்க.

௪௨ - ௩. 'யாவரும் பெருவிறல் வேந்தே' என்பது இகழ்ச்சி.

௪௪. மு. மணி. ௨௩. ௧௩௫.

௪௪ - ௫. வந்தோரரும்பசி - வந்தோருடைய பொறுத்தற்கரிய பசியை; களைந்து - நீக்கி; அவர் திருந்துமுகங்காட்டும் - அவருடைய இனிய முகத்தை யான் காணக்காட்டும், என்றது அவர் திருந்துமுகங்காட்டும் என தெய்வக் கடிஞையேயமையும், உண்ணற் கொடுக்கப்படுவன எனக்கு இன்பஞ்செய்யாவாகலின், அவை வேண்டாவென்றவாறு, "ஈத்துவக்கு மின்பம்" (குறள், ௨௨௮) என்று வருதல் காண்க. காட்டும் முற்று. தெய்வக்கடிஞை யென்றான், வாங்குநர் கையகம் வருத்துதலல்லது தான் தொலைவில்லாத் தன்மைத்தாதலின்.

௪௮. ஈங்கு அளிப்பன - எனக்கு அளிப்பன; ஈங்கு, தன்மையை யுணர்த்திற்று, "ஒழிக காம மீங்கென" (சீவக. ௭௨) என்புழிப்போல. தேவர்கோன் விளி.

௪௬ - ௮. உண்ணலளிக்கப்படுவன உண்டி முதலியவற்றுள் யாவை யென்று ஆபுத்திரன் இந்திரனை இகழ்ந்து கூறலும்.

௩௭ - ௪௮. எடுத்துரைசெய்வோன் என்றலுமெனக்.

இனி, தன்னை ஆபுத்திரன் அவமதித்தானென்று இந்திரன் சினந்து அவன் அன்னதானஞ்செய்தற்கு இடமில்லையாகும்படி மழை பெய்வித்து நாட்டை வளப்படுத்தி இரப்பாரை இலையாக்கினமை கூறுவார்.

௪௯. புரப்போன்பாத்திரம் - உயிர்களைப் பாதுகாப்பவனுடைய பிச்சைப் பாத்திரம்.

௫௦. ஏமாந்திருப்ப - ஆபுத்திரன் உண்பித்தற்கு ஆசையடைந்திருக்கும்படி, "அருந்தே மாந்த நெஞ்சம்" (புறநா. ௧௦௧), துன்பமுற்றிருப்ப வென்னினுமமையும்.

௫௧. நிரப்பு - வறுமை.

(பி - ம்) ௪௪ 'அருந்துபசிகளைந்து' ௪௯ 'பொழிந்தீண்சுரப்பு'

பரபபு நீராற பலவளஞ சுரககென
ஆஙகவன பொருடடா லாயிரங கணணோன
ஓஙகுயர பெருஞசிறப புலகோரக களிததலும
பனனீ ராண டு பாணடி நனனாடு
மனனுயிர மடிய மழைவள மிழநதது
வசிததொழி லுதவ மாநிலங கொழுபபப
பசிபபுயி ரறியாப பானமைத தாகலின
ஆருயி ரோமபுந ரமபலப பீடிகை
ஊணொலி யரவ மொடுஙகிய தாஙகு
விடருந தூர்ததரும விடடேற றாளரும

ருங ஆஙகவன பொருடடு - ஆபுததிரனபொருடடு, ஆஙகவன ஒரு சொல

ருச அளிததலும - இநதிரன கொடுததலும

ருO - ருச ஏமாநதிருபபச சிறபபை இநதிரன அளிததலும

ருரு மணி உஅ கருஎ

ருரு - சு பனனீராணடுவருடம மழை வளததை இழநததாகிய பாணடி நாடு, மணி உரு கOக - உ

ருஎ வசி - மழை, மணி க எக, வசிததொழிலுதவ மணி உஅ உகக ருஅ பசிபபு - பசிததல

ருரு - அ பாணடிநனனாடு பானமைததாகலின

ருகூ ஆபுததிரன பலநாளிருநது அறஞசெயததறகிடனாயதுபறறி அம பலம அவனதாகக கூறபபடடது அமபலப பீடிகை மணி கக கOஎ, கச க

சுO ஊணொலி அரவம - மககளும மாவும பறவையும ஒருஙகு வநது சோறறை உணணுதலால ஒலிககும ஒலி, ஒலியரவம வினைததொகை

சுக விடர - தீயநடையையுடைய காமுகர, ஒரு விததையையுடையவ ரெனறு கூறுவர பிரதாபருத்திரீய வடநூலாசிரியரெனபர தூர்ததர - பரத தையை நுகருங காமுகர விடடேறறாளர - இகழநது கடுஞசொற சொலலு வோர விடருநதூர்ததரும மணி சடு சுO, "விடருந தூர்ததரும விடடேறுரைபப" (பெருங் க கூடு உஉசு), "சிறறினமாவது விடருமதூர ததருநடருமுளளிடடகுழு" (குறள், சசு, அவ) எனறும, "நகைவகைய ராகிய நடபினரானர விடரும தூர்ததரும வேழமபருமபோனறு பலவகை யால நகுவிததுத தாம பயன கொணடு ஒழிவார" (குறள், அகஎ), எனறும பரிமேலழகரெழுதியிருககினறனர இவவடியிலுளள விடரமுதலிய மூனறு பெயர்களுள மூனறாவதாகிய விடடேறறாளரெனபதறகுச சரியாக முறை யே 'நடர', 'வேழமபர' எனபனவறறைப பரிமேலழகர் அமைததிருததலை நோககுமிடதது விடடேறறாளரெனபதறகு நடரெனறேனும வேழமபரென

(பி - ம்) ருசு 'வளஙகரநதது' ருஎ - அ 'வசிதொழிலுதவமாநிலங கொழுதிபபசியுயிர' ருஅ - சுகூ 'பானமையதாக, வடடும'

நடவை மாககளு நகையொடு வைகி
வடடுஞ் சூதும வமபக கோடடியும
முடடா வாழககை முறைமைய தாக
ஆபுத திரனறா னமபல நீஙகி
ஊரூா தோறு முணபோா விஞஅய
யாரிவ னெனறே யாவரு மிகழநதாங
கருநதே மாநத வாருயிா முதலவனை
இருநதாய நீயோ வெனபா ரினமையிற
றிருவின செலவம பெருஙகடல கொளள
ஒருதனி வரூஉம பெருமகன போலத
தானே தமியன வருவோன றனமுன

றேனும பொருளகொளளுதல பொருததமுடைததெனத தோறறுகினறது இனிச சுறறததினினறும, நடபினினறும நீஙகிப பிறரையும அவவணணம செயவிபபோனை விடடேறறியெனறல வழககினகண உணமையின, விட டேறறுள ரெனபதறகு அததனமையையுடையோரெனறு பொருள கூறி னும பொருநதும

சுஉ நடவை - வழி வைகி - விடா முதலியோா தஙகுதலால

சுங வடடு - உணடையுருடடுதல, "அரஙகினறி வடடாடியறறே" (குறள், சOக), "கலலாச சிறாஅா நெலலிவட டாடும" (நறறிணை, ங) வம பககோடடி - பயனில சொறகளைச சொலலுவோா கூடடம, "புலலா வெழுததிற பொருளில வறுஙகோடடி" (நாலடி கருரு), "வெளளைக கோடடியும விரகினி லொழியின" (சிலப் ஙO ககூஅ)

சுச முடடா வாழககை - குறையாத வாழககை, "முடடா வின பதது முடிவுல கெயதினா" (சிலப் கரு ககஎ)

ருக - சுச பீடிகை ஓஙகியதாகி முறைமையதாகவெனக

சுசு உணபோா விஞஅய - உணபோரைவிஞவி

சுஎ இகழநது - இகழதலால

சுஅ அருநதேமாநத - பிறா உணண ஆசைபபடட, மணி சஅ எஉ, புறநா சOக) ஆருயிாமுதலவனை ஆபுததிரனை

சுகூ நீ இருநதாயோவெனறு விஞவுவோரிலலாமையால

சுஎ - கூ இகழதலால இனமையின

எO செலவததைககடல கொளள

எக பெருமகன - அரசன, "பெருநில முழுதாளும பெருமகன" (சிலப் க ஙக)

எஉ உணபோாபலரிடையே யிருநதோன இபபோது மிகததனிமை யுறறுனெனபாா, 'தானே தமியன வருவோன' எனறு ஆசிரியா இரஙகிக

(பி - ம்) சுசு 'உணபோாவிஞவ' சுஅ 'இருநதேமாாநத' எO 'செலவமொருகடல' எஉ 'தமியேவருவோன'

மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
சாவக நன்னாட்டுத் தண்பெயல் மறுத்தலின்
ஊனுயிர் மடிந்த துரவோ தென்றலும்
அமரர்கோ னாணையி னருந்துவோர்ப் பெறாது
குமரி மூத்தவென் பாத்திர மேந்தி
அங்க நாட்டுப் புகுவதென் கருத்தெனா
வங்க மாக்களொடு மகிழ்வுட னேறிக்
காலவிசை கடுக்கக் கடல்கலக் குறுதலின்
மாலிதை மணிபல் லவத்திடை வீழ்த்துத்

---

கூறினார். இப்படியே, "காட்டேந்து பூஞ்சாரல் கடந்தான் காலிற் கழலானே", "கானம் வழங்கன மேவிக் காலினனேகி னானே" (சீவக. க௨௨௯, ௧௪௨௨) எனத் திருத்தக்கதேவர் நடந்துசென்ற சீவகனைப்பற்றி இரங்கிக் கூறி யிருத்தல் காண்க.

௭௦ - ௭௨. "நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செய்யுநீர, செய்யா தமைகலா வாறு" (௨௧௯) என்னும் குறளை இவ்வடிகளின் பொருளோடு ஒப்பிடுக.

௭௩. மாநீர் - கடல். வங்கம் - கப்பல்.

௭௪. தண்பெயல் மறுத்தலின் - தண்ணிய மழை இல்லாது போனமையால்.

௭௫. ஊன் உயிர் மடிந்தது - உடம்போடு கூடியவுயிர் அவ்வுடம்பினின்றும் நீங்குகிறது என்றலும் - என்று வங்கம் வந்தோர் கூறலும்.

௭௬. இந்திரன் கட்டளையினால் உண்போரைப் பெறாமல், ஆணையிற் பெறாதெனக், ஆணை - கட்டளை. வரங்கொடுத்தற்கு வந்த இந்திரன் ஆபுத்திரன் தன்னை மதியாததுபற்றிக் கோபங்கொண்டு இரப்போர் இலராகும் வண்ணம் நாடுவளஞ்சுரக்கும்படி மழைபெய்வித்தமையின், இங்ஙனம் கூறினார். இதனை இக்காதையில் ௬௪ - ஆம் அடி முதலிய வற்றாலுணர்க.

௭௭. குமரி மூத்த என்பாத்திரம் - ஒரு கன்னிப்பெண் வறிதே மூத்தாற்போன்றனது பாத்திரம், கொடுப்போருங் கொள்வோருமெனறித்தானும் பயனிழந்து கழிந்த குமரியை ஈண்டு உவமைகூறினமையின் தானும் ஏற்பாருமேயன்றிப் பாத்திரமும் பயனிழந்து கழிந்ததேயென்று ஆபுத்திரன் இரங்கியவாறாயிற்று. "அற்றாரக்கொன் றாற்றாதான் செல்வம் மிகநலம், பெற்றா டமியண்மூத் தற்று" (குறள், ௧௦௦௭), குமரிமூத்த மணி. ௨௨ ௧௪௩. பாத்திரம் - பாத்திரத்தை.

௭௮. அங்கநாடு இவை ஒருசொன்னீர்மைய என் கருத்தெனா - என்றெண்ணமென்று ஆபுத்திரன் நினைந்து.

௮௦. கால் - காற்று. கடு இதை - கப்பற்பாய்.

(பி - ம்) ௭௪ - ௮ 'சாவகநன்னாட்டுப் புகுவது பொருளென, வங்க' ௮௦. 'காலவிசைநடுக்கிக்கடல்'

தங்கிய தொருநாட் டாளுங் கிழிந்தனன
இழிந்தோ னேறின னென்றிதை யெடுத்து
வழங்குநீர் வங்கம் வலலிருட் போதலும்
அரு வங்கம் போயபின் வருந்துதுய ரெய்தி
அங்கு வாழ்வோர் யாவரு மின்மையின்
மன்னுயி ரோம்புமிம் மாபெரும பாததிரம்
என்னுயி ரோம்புதல் யாஞெ பொறேன்
தவநீா மருங்கிற் றனிததுய ருழந்தேன
கூo சுமநதென பாததிர மென்றனன் ருழுது
கோமுகி யெனனுங் கொழுநீ ரிலஞ்சியின்
ஓரியாண் டொருநாட் டோன்றென விடுவோன்
அருளறம் பூண்டாங் காருயி ரோம்புநா
உளரெனி லவாகைப புகுவா யெனறுங்
கூரு குண்ணு நோனபோ டியிரபதிப பெயாப்புழி
அநநா ளாங்கவன் றனபாற செனறேன்
என்னுற றனையோ வெனறியான் கேட்பத்

---

அஉ ஒருநாள் கபபல தஙகியது

எக - அஉ ஏறி ஆஙகு இழிநதனன

அகூ அஙகு - மணிபலலவததில

அஎ ஓமபும முற்று பாததிரம மன்னுயிரோம்புமெனக

அக இபபாததிரமடைவதறகு முற்பிறபபில மிகக நலவினை செய்த
நான அதனையொழிநது பினனாச சிறிது தீவினையுஞசெய்த பககத்தானே
தனிததுத துயரததையுழநதேன, சிலப். கச உசு

கூo பாததிரம சுமநது என - எற்போரிலலாத இவ்விடததில் இபபாத்
திரததை யான சுமததலால வருமபயன யாது?

கூஉ. ஓயாணடொரு நாளெனறது, வைசாகசுதத பௌாணிமையை.

கூகூ அருளறம - தயாதருமம, மணி. ரு: எஙு - ஆம் அடியின் குறிப
பிற் காணக

கூச. புகுவாயென்று - புகுவாயென்று சொலலிப பாததிரத்தைக்
கோமுகியில விடுதது.

கூரு. பட்டினிவிட்டிருத்தலாகிய விரதத்தால் உயிரை விடுகையில்;
" உண்ணு நோனபோ டியிரபதிப பெயர்த்ததும" (சிலப். உஎ : அகூ)

கூஎ யானெனறது அறவணவடிகள் என உற்றனையோ - யாது
துன்பமடைநதாயோ?

(பி - ம்) அஉ 'தயஙகியதொருநாள்' அஅ 'யாஞெபோற்றேன்'
கக 'எனனுமிகொழுநீா' கூச 'பதைசசெலவாயெனறுஙகு'

தன்னுற் றனபல தானெடுத் துரைத்தனன்
குணதிசைத் தோன்றிக் காரிருள் சீத்துக்
குடதிசைச் சென்ற ஞாயிறு போல
மணிபல் லவத்திடை மன்னுடம் பிட்டுத்
தணியா மன்னுயிர் தாங்குங் கருத்தொடு
சாவக மாளுந் தலைத்தாள் வேந்தன்
ஆவயிற் றுதித்தன னாங்கவன் றானென்.

௧௪ —*பாத்திரமரபுகூறிய காதை முற்றிற்று

---

௯௮ தன்னுற்றனபல - தன்னையடைந்த பல துன்பங்களை

௯௯ சீத்து - நீக்கி

௧௦௧ உடம்பிட்டு "தம்முடம் பிடாஅது" (பொருந ௯௧)

௧௦௨ தன்னாற் பசி தணிக்கப்படாத நிலைபெற்ற உயிரைப் பாதுகாக்கும் எண்ணத்துடன்

௧௦௫ தாள் - முயற்சி வேந்தன் - பூமிசந்திரன்

௧௦௬ ஆங்கவன் - ஆபுத்திரன்.

௧௦௫-௬ ஆபுத்திரனைப்பெற்ற பசு மண்முகனென்னும் முனிவனிடத்ததாயினும் பூமிசந்திரனுடைய நாட்டகத்ததாதலின், 'வேந்தனா' எனப்பட்டது

௧௦௨-௬ உயிர் உடம்பினீங்குங் காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது அஃது அதுவாய்த் தோன்றுமென்பது எல்லா நூல்களுக்கும் ஒத்த துணிபாகலின், 'மன்னுயிர் தாங்குங் கருத்தொடு, ஆவயிற் றுதித்தனன்' என்றார், குறள், ௩௫௮, பரிமேல்

௧-௧௦௬ உழந்தோர் மலைக்குமென்றலும், இல்லோன் அஞரெய்த, சிந்தாவிளக்குத் தோன்றிப் பாத்திரங்கொடுத்தலும், ஆபுத்திரன் ஓம்பலின், வீடாவாயலிப்ப, இந்திரன்கொள்கென, உரைசெய்வோன், 'யாவையீங்களிப்பன தேவர்கோன்' என்றலும், ஆயிரங்கண்ணோன் உலகோர்க்களித்தலும், பாண்டிநன்னாடு பானமைத்தாகலின், பீடிகை முறைமையதாக, ஆபுத்திரன் நீங்கி உண்போரை வினாவி என்பாரின்மையின் வருவோன்றன்முன் வந்தோர் மடிந்தென்றலும், வங்கமேறி இழிந்தனன், வங்கம் வல்லிருட்போதலும் துயரெய்தி விடுவோன் புகுவாயென்று உயிர்ப்பதிப்பெயர்ப்புழிச்சென்றேன், கேட்ப உரைத்தனன், அவன் ஆவயிற்றுதித்தனனென வினைமுடிவு செய்க

(பி - ம்) ௯௮ 'தன்னுறு துன்பம்' ௯௯ 'காரிருள் தீர்த்து' ௧௦௫. 'தலைத் தார்வேந்தன்' * 'அமுதசுரபியென்னும் பாத்திரமரபு கூறிய காதை முற்றும்'

பதினைந்தாவது

# பாத்திரங்கொண்டு பிச்சைபுக்க காதை

[பதினைந்தாவது மணிமேகலை பாத்திரங்கொண்டு பிச்சைக்குப் பெருந்தெருப்போய பாட்டு]

இன்னுங் கேளா யிளங்கொடி மாதே
அநநா ளவனை யோமபிய நலலாத
தணணென் சாவகத தவள மாலவரை
மணமுக னெனனு மாமுனி யிடவயிற்
பொனனின கோட்டது பொற்குளம புடையது
தனனலம பிறாதொழத தான்சென் றெய்தி
ஈனு முனன மின்னுயிாக கெலலாம
தானமுலை சுரநது தனபா லூடடலும
மூனறு காலமுந தோனறநன குணாநத
ஆனற முனிவ னதனவயிற றகதது
மழைவளஞ சுரபபவு மனனுயி ரோமபவும்
உயிாகா வலனவந தொருவன றோனறும
குடாதொடா மாலை பூணபா னலலன்
அடாபபொன முடடை யகவையி னெனப

---

உ. அநநாள - சாலியெனபவள ஈனறு போகடடுப போனநாளில்; மணி கரு கo அவனை - ஆபுததிரனை

ரு சாவகம - சாவகநாடு ரு கோட்டது - கொம்பையுடையது

உ-அ நலலா, மாமுனியிடததிற் கோட்டதாய்க குளமபுடையதாய்ச சென்றெயதி உயிாககெலலாம தன பாலூட்டலுமெனக

கo முனிவன - மணமுகன அதன வயிறறகதது - அபபசு வயிற்றில.

கஉ உயிாகாவலனாகிய ஒருவன் வநது தோனறுவான

கo-கஉ அதன வயிறறகததுத தோனறுமெனக

க௪ பொன அடாமுட்டை அகவையினுன் - பொற்றகட்டாலாகிய முட்டையின உள்ளிடததுளளான என - எனறு மணமுகமுனிவன சொலல

கரு-௬ அஙஙனந தோனறுவோன்குடா மாலை பூணபானல்லன் ;

(பி-ம்) ௪ 'மனமுகனென்னு' அ 'நான்முலை சுரநதுநன்பா லூட்டலும' கo 'ஆன்வயிற்றகதது' க௪ 'ஆவயிற்றுன' 'அகவையிற்றுன்'

பிணிநோ யின்றியும் பிறந்தறஞ் செய்ய
மன்பல் லுகத்திடை மன்னுயிர் நீத்தோன்
தற்காத் தளித்த தகையா வதனை
ஒற்கா வுள்ளத் தொழியா தாதலின்
ஆங்கவ் வாவயிற் றமரர்கண முவப்பத்
தீங்கனி நாவ லோங்குமித் தீவினுக்
கொருதா னாகி யுலகுதொழத் தோன்றினன்
பெரியோன் பிறந்த பெற்றியைக் கேணீ
இருதிள வேனிலி லெரிகதி ரிடபத்
தொருபதின் மேலு மொருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவையிற்
போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து
மண்ணக மெல்லா மாரி யின்றியும்
புண்ணிய நன்னீர் போதொடு சொரிந்தது
போதி மாதவன் பூமியிற் றோன்றும்
கால மன்றியுங் கண்டன சிறப்பெனச்

---

முட்டை அகவையினென்ன, "குடாதொடா மாலை சூழா தாங்கோ, ரடாப் பொன் முட்டையு ளடங்கிய வண்ணமும்" (௨௫ எ௨-௩) என்பர் பின்னும்

க௫ பிணிநோயின்றியும் - பிணியாலுளதாகும் வருத்தம் இல்லாமலும்

க௬ உயிர் நீத்தோன் - உயிரைத் துறந்தவனாகிய ஆபுத்திரன்.

க௫-௬ நோயின்றியும் அறஞ்செய்தற்பொருட்டு உயிர் நீத்தோனென்க, "உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி" (க௪ ௬௫) என்று முன்பு வந்திருத்தல் காண்க

க௭ தகை - அழகு, தகுதியுமாம்

க௮ ஒற்கா - தளராத, இஃது ஒல்காவென்பதன் விகாரம், "ஒல்க லுள்ளமொ டொருபுடைத் தழீஇ" (புறநா க௬௫)

க௬-௨க நீத்தோன் அவ்வாவயிற்றுத் தோன்றினன்

௨௨ பெற்றி - பேறு ௨௩-௬, பு மணி கக ௪0

௨க-௬ போழ்தத்துத் தோன்றினனென்ன இயையும்

௨௯ போதிமாதவன் - புத்தன்

௩0 சிறப்புக்கள் காணப்பட்டன

௨௯-௩0 புத்தன் தோன்றுங்காலத்து உளவாகுஞ் சிறப்புக்களை, மணி. க௨ அ௬ - ஆம் அடி முதலியவற்றிற் காண்க

(பி - ம்) க௭ 'தகையாத்தகுதி' ௨௨ 'பெற்றியதுகேள்' ௨௩ 'எறிகதிரிடபத்' ௨௯ 'போதி நாதன்'

சக்கர வாளக் கோட்டம் வாழும்
மிக்க மாதவர் விரும்பினர் வியந்து
கந்துடை நெடுநிலைக் கடவு ளெழுதிய
அந்தில் பாவை யருளு மாயிடின்
அறிகுவ மென்றே செறியிருட் சேறலும்
மணிபல் லவத்திடை மன்னுயிர் நீத்தோன்
தணியா வுயிருயச் சாவகத் துதித்தனன்
ஆங்கவன் றன்றிற மறவண னறியுமென
நீங்கென் னுழைவை வருத்திய திதுகேள்
மண்ணாள் வேந்தன் மண்முக னென்னும்
புண்ணிய முதல்வன் றிருந்தடி வணங்கி
மக்களை யில்லேன் மாதவ னருளாற்
பெற்றேன் புதல்வனை யென்றவன் வளர்ப்ப
அரைசாள் செல்வ மவன்பா லுண்மையின்
நிரைதார் வேந்த னாயின னவன்றான்
துறக்க வேந்தன் றுய்ப்பிலன் கொல்லோ
அறக்கோல் வேந்த னருளிலன் கொல்லோ
சுரந்து காவிரி புரந்துநீர் பரக்கவும்
நலத்தகை யின்றி நல்லுயிர்க் கெல்லாம்

---

௩௪ அந்தில் - அவ்விடத்து, "அந்தி லரங்கத் தகன்பொழி லகவயின" (சிலப். ௧௧ ௬)

௨௮ - ௩௫ நீர் சொரிந்தது, சிறப்புக்கண்டனவென்று மாதவர் வியந்து அறிகுவமென்று பாவைபாற் செறியிருளிற் செல்லுதலுமெனக்

௩௯ என்னுழைவை வருத்தியதென்றது, முனிவர்களுக்கு ஆபுத்திரன் வரலாற்றை யான் சொல்லும்படி அப்பாவை செய்ததென்றவாறு.

௪௦ வேந்தன் - பூமிசந்திரன்

௪௫ நிரைதார். வினைத்தொகை அவன்றான் - ஆபுத்திரன்றான்
இதுகாறும் ஆபுத்திரன்திறம் கூறப்பட்டது

௪௬ துறக்கவேந்தன் - இந்திரன் துய்ப்பு இலன்கொல்லோ - அவி நுகர்ச்சி இலனாயினனோ

(பி - ம்) ௩௧ 'கோட்டகவாழு' ௩௭ 'தணியாதுயருறு.சாவகத்து' ௪௧ 'திருந்தடிபொருந்தி' ௪௪ 'அவன்வயினுண்மையி' ௪௬ 'துப்பிலன் கொல்லோ' ௪௮ 'புரிந்து நீர்க்காக்கவும்'

அலத்தற் காலை யாகிய தாயிழை
வெண்டிரை தந்த வமுதை வானோர்
உண்டொழி மிச்சிலை யொழித்துவைத் தாங்கு
வறனோ டுலகின் வான்றுயர் கெடுக்கும்
அறனோ டொழித்த லாயிழை தகாதென
மாதவ னுரைத்தலு மணிமே கலைதான்
தாயர் தம்மொடு தாழ்ந்துபல வேத்திக்
கைக்கொண் டெடுத்த கடவுட் கடிஞையொடு
பிக்குணிக் கோலத்துப் பெருந்தெரு வடைதலும்
ஒலித்தொருங் கீண்டிய வூர்க்குறு மாக்களும்
மெலித்துகு நெஞ்சின் விடரும் தூர்த்தரும்

௫௦ அலத்தற்காலை ஆகியது - வறுமைக்காலம் உண்டாயிற்று. ஆயிழை: விளி

௪௬ - ௫௦ இப்படியே, "செங்கோல் கோடியோ அறியேன்" (௨௮ : ௧௮௮ - ௯௧) என்று பின்வருதல் காண்க.

௫௨ மிச்சில் - மிகுதி ஒழித்து வைத்தாங்கு - பயன்படுத்தாது வைத்தாற்போல

௫௩ வறன் ஓடு உலகு - வறக்கடமான காலம் பரந்தவுலகம், "வறனோடின வையகத்து வான்றருங் கற்பினாள்" (கலி ௧௬.)

௫௪ அறன் ஓடு ஒழித்தல் - அமுதசுரபியைப் பயன்படுத்தாது வைத்தல்

௫௩ - ௪, மணி ௨௧. ௧௫௭ - ௮

௫௫ மாதவன் - அறவணவடிகள்

௫௬ தாயர் - மாதவி, சுதமதி ௫௭ கடிஞை - பிச்சைப்பாத்திரம்

௫௮ பிக்குணிக்கோலத்து - பிக்குணிக் கோலத்துடன், துறந்தோர்களில் ஆண்பாலாரைப் பிக்ஷுக்களென்றும், பெண்பாலாரைப் பிக்ஷுணிகளென்றும் கூறுதல் பௌத்தசமய மரபு கோலம் - வேடம்

௫௫ - ௮ மணிமேகலை ஏத்திக் கடிஞையொடு கோலத்தோடு பெருந்தெருவடைதலுமெனக்

இனிப் பெருந்தெருவிற் பிச்சைக்குப் போந்த மணிமேகலையின் பிக்குணிக் கோலத்தைக் கண்டோருடைய மனவருத்தத்தைக் கூறுவார்

௫௯ குறுமாக்கள் - அறிவில்லாத சிறியார், "அடாக்குறு மாக்கள்" (௧௫ . ௪௦) என்றார் முன்னும், "ஊர்க்குறு மாக்கள்" புறநா (௯௪)

௬௦ மெலிந்து, மெலித்தென்றாயது விகாரம் விடரும் தூர்த்தரும்: மணி. ௧௪ . ௬௧

(பி - ம்) ௫௨ 'ஒளித்துவைத்தாங்கு' ௫௯. 'ஒளித்தொருங்கீண்டிய' ௬௦ 'விடமருந்தூர்த்தரும்'

கோடிக்கோ சம்பிக் கோமக னாகிய
வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை
வஞ்சஞ் செய்துழி வான்றளை விடீஇய
உஞ்சையிற் றோன்றிய யூகி யந்தணன்
உருவுக் கொவ்வா வுறுநோய் கண்டு
பரிவுறு மாக்களிற் றாம்பரி வெய்தி
உதய குமர னுளங்கொண் டொளித்த
மதுமலர்க் குழலாள் வந்து தோன்றிப்
பிச்சைப் பாத்திரங் கையி னேந்தியது
திப்பிய மென்றே சிந்தைநோய் கூர
மனமனை மறுகின் மாதவி யீன்ற

---

சுக. கோசம்பி - கௌசாம்பிநகரம், இது, முதலிற் குசாம்பனென்பவனால் நிறுவப்பட்டதாதலின் இப்பெயர் பெற்றதென்பர், இது பாகதம், "கொடியணி நெடுமதிற் கோடிக்கோ சம்பி" (பெருங். க. ருச. எசு) கோமகனாகிய - அரசனாகிய

சுஉ. வடி - திருத்தம், "வானுட்கும் வடிநீண்மதில்" (புறநா. கஅ) வத்தவன் - வத்ஸதேசத்தானாகிய உதயணன், "வயந்தக் குமரன் வத்தவற் குரைப்ப" (பெருங். க. சங. அங.)

சுஉ - ங. வத்தவன்றன்னை வஞ்சஞ் செய்துழி - (தனக்குத் திறைகொடாதநுப்பற்றிச் சினந்து சாலங்காயனனென்னுந் தன்மந்திரியால் யந்திர யானையைக்காட்டி வஞ்சனமாகப் பிடிப்பித்துப் பிரச்சோதனனென்னுமரசன்) உதயணனைச் சிறைப்படுத்திய பொழுது

சுச. உஞ்சையில் - உச்சயினிநகரத்தில், இஃது அவந்திநாட்டிலுள்ளது, பிரச்சோதனனுடைய இராசதானி, இதனையே அவந்தியென்றும் வழங்குவர் தோன்றிய - வேற்றுருவங்கொண்டு தோன்றிய யூகியந்தணன் - பிரமசுந்தர யோகியென்பவருடைய குமாரன், உதயணனுடைய மந்திரிகள் நால்வருளொருவன்

சுசு. பரிவுறுமாக்களில் - துன்பமுற்ற சனங்களைப்போல
சுக - சு. பிரச்சோதனன் உதயணனை வஞ்சித்துச் சிறைப்படுத்திய பொழுது அவனைச் சிறைமீட்டற்கு யூகியென்பவன் மாறுவடிவங்கொண்டு உச்சயினி நகரப்பெருந்தெருவை யடைந்ததும், அதனைக் கண்டோர் பலரும் பரிவுற்றுச் சூழ்ந்ததுமாகிய இவற்றை உதயணகுமாரகாவியத்துள்ள உஞ்சைக் காண்டத்தாலுணர்க

எ0. திப்பியம் - காண்டு ஆச்சரியமென்னும் பொருளைத்தந்து நின்றது சிந்தைநோய்கூர - மனவருத்தம் மிக, சிந்தை - சிந்தாகுலம், "என்றுண்டாங் கொல்வினிக் கட்படு நாளெனுஞ் சிந்தையே" (சீவக. ககருக)

சுசு - எ0. குறுமாக்களும் விடரும் தூர்த்தரும், மாக்களிற் பரிவெய்தி, குழலாள் தோன்றி ஏந்தியது திப்பியமென்று நோய்கூரவெனக.

அங்கவ டன்றிற மயர்ப்பா யென்றே
செங்கோல் காட்டிய தெய்வமுந் திப்பியம்
பையர வல்குல் பலர்பசி களையக்
கையி லேந்திய பாத்திரந் திப்பியம்
முத்தை முதல்வி யடிபிழைத் தாயெனச்
சித்திர முரைத்த விதூஉந் திப்பியம்
இந்நிலை யெல்லா மிளங்கொடி செய்தியிற்
பின்னறி வாமெனப் பெயர்வோன் றன்னை
அகல்வாய் ஞால மாரிரு ளுண்ணப்
பகலர சோட்டிப் பணையெழுந் தார்ப்ப
மாலை நெற்றி வான்பிறைக் கோட்டு

---

௯ அவள் - மணிமேகலை அயர்ப்பாய - மறப்பாய

க0 செங்கோல் காட்டிய - செங்கோன்முறைமையை யெடுத்துக் காட்டிய தெய்வமுமென்றது மணிமேகலா தெய்வத்தை, உண்மை எதிர்ந்து தழீஇயது திப்பியம் மணி. எ கஎ

௯-க0 உதயகுமரனுக்கு மணிமேகலாதெய்வம் செங்கோன் முறைமையை எடுத்துக்காட்டி, மணிமேகலை திறத்தை மறப்பாயென்று கூறியதனை, "கோணிலை திரிந்திடிற் கோணிலை திரியும் . அவன் வயி னுரைத்தபின்" (எ அ-கச), "பொன்றிகழ் மேனி யொருத்தி தோன்றி . அங்கவ டன்றிற மயர்ப்பா யென்றனள்" (கஅ அக-௩) என இந்நூலுள்ளே முன்புவந்தவாற்றானுணர்க

கக-உ களைய வேந்திய பாத்திரம்

க௩ முத்தைமுதல்வி மணி. கஅ கசச பிழைத்தாய - தவறு செய்தாய.

கச இதூஉம - இதுவும்

க௫ இந்நிலையெல்லாம - செங்கோல் காட்டிய தெய்வமுதலிய மூன்றன் வரலாற்றையும இளங்கொடி - மணிமேகலை

க௬ பெயர்வோன்றன்னை - பெயர்ந்து செல்லும உதயகுமரனை

இனி இராத்திரியை யானையாக உருவகித்துக் கூறுவார

கஅ பகல் அரசு - சூரியனாகிய அரசனை பணை - பறை, யானை செல்லுங்கால் அதன்வரவை எல்லார்க்கும் தெரிவித்தற்குப் பணை முழங்கும, "வெரூஉப்பறை நுவலும பரூஉப்பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம" (பொருந. கஎக-உ)

க௯ மாலை நெற்றி - அந்திக்காலமாகிய நெற்றி பிறைக்கோடு - பிறையாகிய தந்தம

(பி-ம்.) கக. 'பசிகெடுப்ப' க௫ 'உன்னிலை யெல்லாயிளங்கொடி செய்தியிற்'

அதிர்கழல் வேந்த னடிபிழைத் தாரை
ஒறுக்குநர் தண்டத் துறுசிறைக் கோட்டம்
விருப்பொடும் புகுந்து வெய்துயிர்த்துப் புலம்பி
ஆங்குப் பசியுறு மாருயிர் மாக்களை
வாங்கு கையகம் வருந்தநின் றூட்டலும்
ஊட்டிய பாத்திர மொன்றென் றியந்து
கோட்டங் காவலர் கோமகன் றனக்கிப்
பாத்திர தானமும் பைந்தொடி செய்தியும்
யாப்புடைத் தாக விசைத்துமென் றேகி
நெடியோன் குறளுரு வாகி நிமிர்ந்துதன்
அடியிற் படியை யடக்கிய வந்நாள்
நீரிற் பெய்த மூரி வார்சிலை
மாவலி மருமான் சீர்கெழு திருமகள்

---

சஉ. பிழைத்தாரை - பிழை செய்தாரை

சங. தண்டத்து - தண்டத்தினையுடைய சிறைக்கோட்டம் - சிறைச்சாலை

ஙo - சசு மணிமேகலை நுணித்தனராமென வாங்கிப் புகுந்து நின்று மாக்களை ஊட்டலுமெனக்

இவள் பலரையும் உண்பித்தலைக் கண்ட கோட்டங்காவலர் வியப்புற்றுச்சென்று அரசனுக்குத் தெரிவித்தல் இனிக் கூறப்படும்

ருo. யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக இசைத்தும் - சொல்லுவேம்

சஎ - ருo கோட்டங்காவலர் வியந்து தானமும் செய்தியும் கோமகனுக்கு இசைத்துமென்றேகியெனக்

ருக. திருமால் வாமனனாகிப் பேருருவங்கொண்டு

ருஉ அடக்கிய - அடக்க அந்நாளில் அடக்கிய அந்நாளென இயைத்துப் பெயரெச்சத் தொடராக்கினுமமையும்

ருங நீரிற் பெய்த - நீருடன் பூமியைக்கொடுத்த, பூமியைத் தாரை வார்த்துக் கொடுத்தவென்றபடி

ருஉ - ங. அடக்கிய நீரிற் பெய்தவென வியைக்க

ருச மாவலி மருமான் மகள் - மகாபலியின் வழித்தோன்றலாகிய அரசனுடைய மகள், அரசன் பெயர் புலப்படவில்லை *

---

* மகாபலியின் பரம்பரையரசர் யாரென்று வினவியபொழுது அரசாங்கத்துச் சிலாசாசன பரிசோதகர்களுள் ஒருவராக இருந்த, ஸ்ரீ வி.

(பி - ம்.) ருஉ - ங. 'அனனுளாங்கத்து பெய்தி'

சீதத்தி யென்னுந் திருத்தகு தேவியொடு
போதவிழ் பூம்பொழில் புகுந்தனன் புக்குக
கொம்பரத் தும்பி குழலிசை காட்டப்
பொங்கர் வண்டின நல்லியாழ் செய்ய
வரிக்குயில் பாட மாமயி லாடும்

௫௫ சீத்தியென்று பெயர் கூறப்படும் செல்வமிக்க தேவியுடன்

௫௬. போது - மலரும் பருவமுள்ள அரும்பு

௫௭ குழல் - வேயங்குழல் ௫௮ பொங்கர் - சோலை

௫௭ - ௮ இவ்வடிகளிற் போலவே, "குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட, மழலை வண்டின நல்லியாழ் செய்ய" (௪ ௩ - ௪) என்று முன்பு வந்திருத்தல் காண்க

௫௯ வரி - வரிப்பாட்டு கீற்றுமாம்

ரங்கையரவர்கள் அன்புடன் எழுதி யனுப்பியவிடை வருமாறு 'பாண வம்சத்து அரசர்கள் மகாபலியின் பரம்பரையைச் சேர்ந்தவர், அவர்களின் கல்வெட்டுக்கள், வட ஆர்க்காடு ஜில்லா வேலூருக்கடுத்த திருவல்லமென்கிற கிராமத்திலும், மைஸூர் ஸமஸ்தானத்தில் தல்கான்போடே என்கிற ஊரிலும் கிடைத்திருக்கின்றன, 'மூவுலகிலும் தொழப்பட்டவனும் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் தலைவனுமிருக்கின்ற பரமேசுவரனுக்குத் வாயில் காக்கும்படியாக நியமிக்கப்பட்ட மகாபலி குலத்தைச் சேர்ந்தவன்' என்று சில பாணவரசர்கள், தங்களுக்குரிய கல்வெட்டுக்களிற் சிறப்பிக்கப்பட்டிருக்கிறார்கள் பாணகுலத்தைச் சேர்ந்த செப்புப் பட்டயங்கள் இரண்டு உண்டு அவற்றில் ஒன்று, சிதம்பரம் கனகஸபையின் முகட்டைப் பொன்வேய்ந்த பராந்தகனென்று சொல்லப்பட்ட வீரநாராயணச்சோழன் பாணவம்சத்தை நின்மூலஞ்செய்து அவர்களின் நாட்டைக் கங்கவம்சத்தைச் சேர்ந்த அத்திமல்லனென்ற அரசனுக்குக் கொடுத்ததாகச் சொல்லுகின்றது இந்த வீரநாராயணன் கி பி 10-ஆம் நூற்றாண்டின் முற்பாதியிற் சீவித்திருந்தான் மற்றொரு செப்புப்பட்டயத்திற் கீழே எழுதப்பட்டிருக்கும் வம்சாவலி கிடைத்தது பலி, அவன் மகன் பாணன், அவன் குலத்திற் பிறந்தவன் பாணாதிராசன், இவ்வம்சத்தைச் சேர்ந்த அநேக அரசர்கள் மரித்தபிறகு இருந்தோன ஜயநந்தி வர்மன் (இவன் ஆந்திரதேசத்திற்கு மேற்கிலிருந்த நாட்டை ஆண்டவன்), அவன் மகன் முதலாம் விசயாதித்தன், அவன்மகன் ஜகதேக மல்லனென்கிற மல்லதேவன், அவன்மகன் பாணவித்தியாதரன், அவன்மகன் பிரபு மேருதேவன், அவன் மகன் முதலாம் விக்கிரமாதித்தன், அவன் மகன் புகழ்விப்பவர் கண்டனென்கிற இரண்டாம் விசயாதித்தன், அவன்மகன் விசயபாகுவென்று கூறப்பட்ட இரண்டாம் விக்கிரமாதித்தன் (இவன் கிருஷ்ணராஜனென்ற அரசனுக்கு நேசன்) இந்த அரசர்களின் காலம் தெரியவில்லை"

(பி - ம்.) ௫௫ 'சீதத்தையெனும்', 'சீத்திகையெனும்' ௫௬. 'பொருந்தினள்புக்கு', 'புகுந்தனள்புக்கு' ௫௭. 'கொம்பலாத்து குழலிசைகாட்ட'

மணிமலர்ப் பூம்பொழி லகவயி னிருந்த
பிணவுக்குரங் கேற்றிய பெருந்தா மரைக்கண்
மடவோர்க் கியற்றிய மாமணி யூசல்
கடுவ னூக்குவது கண்டுநகை யெய்தியும்
பாசிலை செறிந்த பசுங்காழ்க் கழையொடு
வாலவீ செறிந்த மராஅங் கண்டு
நெடியோன் முன்னொடு நின்றன னாமெனத்
தொடிசேர் செங்கையிற் றொழுதுநின் றேத்தியும்
ஆடற் கூத்தினோ டவிநயந் தெரிவோர்
நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்
பண்ணியாழ் நரம்பிற் பண்ணுமுறை நிறுப்போர்

---

௭௨ பிணவுக்குரங்கு - பெண்குரங்கு, "பன்றி புல்வாய் நாயென் மூன்றும் ஒன்றிய வென்ப பிணவென் பெயர்க்கொடை" (தொல். மரபு ௫௮) என்னும் சூத்திரத்தில், 'ஒன்றிய' என்றதனால், பிண வென்பது குரங்குக்கும் கொள்ளப்பட்டது.

௭௩ மடவோர்க்கு - மகளிர்க்கு.

௭௪ கடுவன் - ஆண்குரங்கு, "குரங்கி னேற்றினைக் கடுவ னென்றலும்" (தொல். மரபு ௬௮) ஊக்குவது - செலுத்துதலை.

௭௨-௪ கடுவன், பிணவுக்குரங்கை யேற்றி ஊசலை ஊக்குவது கண்டு நகையெய்தியுமெனக் ௭௫ கழை - மூங்கில்.

௭௬ வாலவீ - வெள்ளியமலர் மராஅம் - வெண்கடம்பு.

௭௭ நெடியோன் - கண்ணன் முன் - தமையன், என்றது பலதேவனை.

௭௫-௭ கழைக்குக் கண்ணனும் வெண்கடம்பிற்குப் பலதேவரும் உவமைகள் மராத்திற்குப் பலதேவர் கலி. ௨௬ ௧, கார். ௧௯.

௭௮ தொடி - வீரவளை, "தொடித்தோட்கை" (மதுரை. ௩௪)

௭௯ அவிநயம் - கதைதழுவாதே பாட்டுக்களின் பொருள்தோன்றக் கைகாட்டி அபிநயிப்பது.

௮0 நாடகம் - கதைதழுவி வருங்கூத்து காப்பியம் - காவ்யம் நாடகக் காப்பியமாகிய நன்னூலெனக் நுனிப்போர் - கூர்ந்து ஆராய்வோர் "நூற்பொரு ளுணர்ந்தோர் நுனித்தனர்" (௩௮) என இக்காதையிலேயே முன்பு வந்திருத்தல் காண்க.

௮௧ பண்களையுடைய வீணைநரம்புகளிற் பண்களை முறையே நிறுத்துவோர்.

(பி - ம்.) ௭௨. 'பெருந்தாமரைக்கண்' ௭௪ 'கண்டு மகிழ்வெய்தியும்' ௭௫ 'காலிக்கழையொடு'

தண்ணுமைக் கருவிக் கண்ணெறி தெரிவோர்
குழலொடு கண்டங் கொளச்சீர் நிறுப்போர்
பழுநிய பாடல் பலரொடு மகிழ்வோர்
ஆரம் பரிந்த முத்தங் கோப்போர்
ஈரம் புலர்ந்த சாந்தந் திமிர்வோர்
குங்கும வருணங் கொங்கையி னிழைப்போர்
அஞ்செங் கழுநீ ராயிதழ் பிணிப்போர்
நன்னெடுங் கூந்த னறுவிரை குடைவோர்
பொன்னணி யாடியிற் பொருந்துபு நிற்போர்
ஆங்கவ ரமரோ டகலிரு வானத்து
வேந்தனிற் சென்று விளையாட் டயர்ந்து

---

அஉ தண்ணுமைக்கருவி - மத்தளம், இதனை உத்தமத்தோற் கருவியென்பர். கண்ணெறி தெரிவோர் - அதன் முகத்தில் அடித்தலை ஆராய்வோர்; கண் - வாத்தியங்களின் முகம். "பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்து" (சிலப். ந. சுக)

அங குழலொடு கண்டங்கொள - வேய்ங்குழலோடு மிடற்றுப்பாடல் பொருந்தும் வண்ணம்; சீர் - தாளவறுதி.

அச பழுநிய பாடல் - முற்றுப்பெற்ற இசைப்பாடல். மகிழ்வோர் - மகிழ்ந்து பாடுவோர்.

அரு ஆரம் பரிந்த முத்தம் - ஆரம் அறுபடுதலாற் சிந்திய முத்துக்கள்.

அசு புலர்ந்த சாந்தம் - உலர்ந்த சந்தனம்.

அஎ குங்குமவருணம் - சிவந்த தொய்யிற்குழம்பு. இழைப்போர் - எழுதுவோர்.

அஅ ஆயிதழ் பிணிப்போர் - அழகிய இதழ்களைத் தொடுப்போர்.

கூo. ஆடி - கண்ணாடி.

எகூ - கூக தெரிவோரும், நுனிப்போரும், நிறுப்போரும், தெரிவோரும், நிறுப்போரும், மகிழ்வோரும், கோப்போரும், திமிர்வோரும், இழைப்போரும், பிணிப்போரும், குடைவோரும், நிற்போருமாகிய அமரர்களோடென்க.

கூக - உ வானத்து வேந்தனில் - இந்திரன்போல, "வேந்தன்மேய தீம்புன லுலகமும்" (தொல். அகத். ரு), "வேந்தனும் வேந்து கெடும்" (குறள், அகூகூ) என வருதலால், வேந்தனென்றதற்கே இந்திரனென்று பொருள்கூறினும் இழுக்காது. விளையாட்டு அயர்ந்து - விளையாட்டை விரும்பிச்செய்து.

(பி - ம்.) அச 'பழனிப்பாடல் பலவொடு மகிழ்வோர்' அரு - அ 'கோப்போர், செங்கழுநீரார் சேயிதழ் பிணிப்போர்' அகூ. 'கூந்தனறு விரை' கூo. 'பொன்னணியாடி', 'பொன்னணி யாடியின்'

குருந்துந் தளவுந் திருந்துமலர்ச் செருந்தியும்
முருகுவிரி முல்லையுங் கருவிளம் பொங்கரும்
பொருந்துபு நின்று திருந்துநகை செய்து
குறுங்கா னகுலமு நெடுஞ்செவி முயலும்
பிறழ்ந்துபாய் மானு மிறும்பகலா வெறியும்
வம்மெனக் கூஉய் மகிழ்துணை யொடுதன்
செம்மலர்ச் செங்கை காட்டுபு நின்று
மன்னவன் றானு மலர்க்கணை மைந்தனும்
இன்னிள வேனிலு மிளங்காற் செல்வனும்
எந்திரக் கிணறு மிடுங்கற் குன்றமும்
வந்துவீ ழருவியு மலர்ப்பூம் பந்தரும்
பரப்புநீர்ப் பொய்கையுங் கரப்புநீர்க் கேணியும்
ஒளித்துறை யிடங்களும் பளிக்கறைப் பள்ளியும்
யாங்கணுந் திரிந்து தாழ்ந்துவிளை யாடி

---

௯௩ தளவு - செம்முல்லை. செருந்தி - ஒருமரம், இது செருந்தெனவும் வழங்கும்.

௯௪ முருகு - வாசனை. கருவிளை - ஒருமரம், "அந்தணர் அணிகிளர் சந்தனக் குழையும், கருவிளங் கோடும்" (பொருந். ௧௪௧ ...) பொங்கர் - சோலை, கிளையுமாம்.

௯௬ நகுலம் - கீரி. ௯௭ இறும்பு - குறுங்காடு. வெறி - ஆடு.

௯௮ வம்மெனக் கூஉய் - வாருமென்று கூவி; வாருமென்றது ... என நின்றது, "கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉய்" (பொருந். ௧௦௧) மகிழ்துணை - இராசமாதேவி.

௯௯ காட்டுபு - காட்டி. ௧௦௦ மலர்க்கணை மைந்தன் - மன்மதன்.

௧௦௧ இன்னிள வேனில் - இனிய இளவேனிற்பருவம், அஃதாவது சித்திரை வைகாசி மாதங்கள், 'சிலப். ௮' இள. இளங்காற் செல்வன் - தென்றற்காற்றாகிய செல்வன், "சிறுகாற் செல்வன் மறுகிற் றூற்ற" (சிலப். ௪ : ௧௮)

௧௦௨ எந்திரக்கிணறு - நீரை நிறைக்க வேண்டுமாயின் நிறைத்தும் போக்கவேண்டுமாயிற் போக்குதற்குரிய கிணறு. இடுங்கற்குன்றம் - செய்குன்று.

௧௦௪ கரப்புநீர்க்கேணி - மறைதலையுடைய நீரையுடைய கிணறு; இதனை அந்தக்கேணி யென்பர்.

௧௦௫ பளிக்கறை - பளிங்கறை. பள்ளி - இடம்.

௧௦௬. யாங்கணும் - கிணறும் குன்றமும் அருவியும் பந்தரும் பொய் ...

(பி - ம்.) ௯௩ 'குருகுந்தளவு திருமலர் சொரிந்து', 'குருந்துந்தளவுந் திருமலர்ச் செருந்தியும்' ௯௭. 'விரும்புகயாவெறியும்', 'இரும்பகலாவெறி' ௧௦௨ 'இடுதற்குன்றமும்' ௧௦௪ 'கரப்புநீர்க்கணியு'

மகத வினைஞரு மராட்டக் கம்மரும்
அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடிக்
கொண்டினி தியற்றிய கண்கவர் செய்வினைப்
பவளத் திரள்காற் பன்மணிப் போதிகைத்
தவள நித்திலத் தாமந் தாழ்ந்த
கோணச் சந்தி மாண்வினை விதானத்துத்
தமனியம் வேய்ந்த வகைபெறு வனப்பிற்
பைஞ்சேறு மெழுகாப் பசும்பொன் மண்டபத்து

---

...செய்யுங் கேணியும் இடங்களும் பள்ளியுமாகிய வெவ்விடத்தும் திரிந்து - மன்னவனொடும் மைந்தனும் வேனிலும் செல்வனும் திரிந்து

௧௦௨-௬. இவ்வடிகளிற் போலவே, 'அந்தக் கேணியு மெந்திரக் கிணறுந், தண்பூங் காவுந் தலைத்தோன் றருவிய, வெண்சுதைக் குன்றமுங் கண்டவை பிறவும், வினையோர்க் கியற்றிய விளையாட் டிடத்துச் சித்திரப் பூமிச் செய்கைக் கோட்டி" (பெருங். ௧. [illegible] - ௭), 'பளிக்கறைப் பூட்டியும் பசும்பொற் களத்து, மணிக்கயிற் றூசன் மறவிய விடத்தும், கொய்ம்மலர்ச் சோலையும் பொய்கைக் கரையு, மந்தக் கேணியும் வந்தும்பர் கூடி" (பெருங். ௧. [illegible] ௧௧௫-௮) என வருதல் காண்க.

௧௦௭. மகதவினைஞர் - மகதநாட்டுப்பிறந்த இரத்தின வேலைக்காரர். மராட்டம் - மகாராஷ்டிர தேசம்.

௧௦௮. அவந்தி - அவந்திதேசம். யவனம் - யவனதேசம்.

௧௦௭-௮. மகததேசத்துப் பிறந்த இரத்தின வேலைக்காரர் முதலி யோர் தொழிலிற் பெயர் பெற்றவரென்பது, 'யவனத் தச்சரு மவந்திக் கொல்லரு, மகதத்துப் பிறந்த மணிவினைக் காரரும், பாடலிப் பிறந்த பசும்பொன் வினைஞரும், கோசலத் தியன்ற வோவியத் தொழிலரும் வத்த நாட்டு வண்ணக் கம்மரும்" (பெருங். ௧. ௫௮ ௪௦-௪௪) என்பதனா லுணர்க.

௧௦௭-௯. மேற்கூறிய மகதவினைஞர் முதலியோர் தண்ணிய தமிழ் நாட்டிற்பிறந்த தொழில் செய்வாருடனே கூடி.

௧௧௨. நித்திலத்தாமம் - முத்துமாலை.

௧௧௩. கோணச்சந்தி - கோணமாகிய சந்தி, "சந்திக் கோணமுஞ் சார்வாணியும்" (பெருங். ௧. ௫௮. ௫௧) விதானம் - மேற்கட்டி.

௧௧௪. தமனியம் - பொன்.

௧௧௫. பைஞ்சேறு மெழுகா - ஆப்பியால் மெழுகப்படாத, 'பைஞ் சேறு மெழுகிய படிவ நன்னகர்" (பெரும்பாண். ௨௯௮), சாந்தந்தான் மெழுகிய வென்றபடி, "மங்கல வெள்ளை வழித்துமுத் தீர்த்தபின்" (சீவக. ௧௪௭௭) எனவருதல் காண்க.

(பி-ம்.) ௧௦௭ 'மாட்டக்கம்மரும்' ௧௧௫ 'செம்பொன் மண்டபத்து'

சிலைக்கய னெடுங்கொடி செருவேற் றடக்கை
ஆர்புனை தெரிய லிளங்கோன் றன்னால்
காரியாற்றுக் கொண்ட காவல வெண்குடை
வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி
ஒளியொடு வாழி யூழிதோ றூழி
வாழி யெங்கோ மன்னவர் பெருந்தகை
கேளிது மன்னே கெடுகநின் பகைஞர்
யானைத் தீநோய்க் கயாந்துமெய் வாடியிம்
மாநகர்த் திரியுமோர் வம்ப மாதர்
அருஞ்சிறைக் கோட்டத் தகவயிற் புகுந்து
பெரும்பெயர் மன்ன நின்பெயர் வாழ்த்தி
ஐயப் பாத்திர மொன்றுகொண் டாங்கு

---

சேர பாண்டியர்களை, பின், "சிலைக்கய னெடுங்கொடி" என்று வருதலால் இங்ஙனம் கொள்ளப்பட்டது.

௧௨௪ சிலைக் கயல் நெடுங்கொடி - சேரனுடைய விற்கொடியையும், பாண்டியனுடைய கயற்கொடியையும்.

௧௨௫ ஆர் - ஆத்தி, இது சோழர்களுக்கு உரிய அடையாள மாலை. இளங்கோன் - தம்பி, இவன் யுவராசனாக இருத்தலின், 'இளங்கோன்' என்றார் போலும்.

௧௨௬ காரியாறு - ஒருநதியின் பெயர். இதனை, 'காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி' (புறநா. ௪௭), 'செல்கதிமுன் னளிப்பார் தந்திருக் காரிக் கரைபணிந்து" (பெரிய. திருநா. ௩௪௩) என வருவனவற்றால் உணர்க. பெரும்போர்புரிவோர் ஆற்றிடையே அது செய்தல் இயல்பு, "உடன்றுமேல் வந்த வாரிய மன்னரைக், கடும்புனற் கங்கைப் பேராற்று வென்றோய்" (சிலப். ௨௮ ௧௨௦ - ௨௧)

௧௨௭. மாவண்கிள்ளி விளி, இஃது அரசன் பெயர்.

௧௨௪ - ௭ வந்தோருடைய கொடிகளை இளங்கோனால் காரியாற்றுக் கொண்ட மாவண்கிள்ளி யென்க.

௧௨௮ ஒளி - உறங்காநிற்கவும் உலகங்காக்கின்ற அரசரிடத்துள்ள கடவுட்டன்மை, 'இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற வொளியோ டொழுகப் படும்' (குறள். ௬௯௮), 'உறங்கு மாயினுமன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்' (சீவக. ௨௪௮)

௧௩௧ அயாந்து - கவலையுற்று.

௧௩௨ வம்பமாதர் - காயசண்டிகை, வம்பு - புதுமை.

௧௩௪. பெரும்பெயர் - மிக்கபுகழ், 'பெரும்பெயர் மன்னவன்' (சிலப். ௧௫: ௧௫௮.)

(பி - ம்.) ௧௨௮. 'ஒலியொடு வழாஅதூழி' ௧௨௯. 'வாழியெங்கோ வாழிய பெருந்தகை'

மொய்கொண் மாக்கள் மொசிக்கவூண் சுரந்தனள்
ஊழிதோ றூழி யுலகங் காத்து
வாழி யெங்கோ மன்னவ வென்றலும்
வருக வருக மடக்கொடி தானென்
றருள் புரி நெஞ்சமொ டரசன் கூறலின்
வாயி லாளரின் மடக்கொடி தான்சென்
றாய்கழல் வேந்த னருள்வா ழியவெனத்
தாங்கருந் தன்மைத் தவத்தோய் நீயார்
யாங்கா கியதிவ் வேந்திய கடிஞையென்
றரசன் கூறலு மாயிழை யுரைக்கும்
விரைத்தார் வேந்தே நீநீடு வாழி
விஞ்சை மகள்யான் விழவணி மூதூர்
வஞ்சந் திரிந்தேன் வாழிய பெருந்தகை
வானம் வாய்க்க மண்வளம் பெருகுக
தீதின் றாக கோமகற் கீங்கி
தையக் கடிஞை யம்பல மருங்கோர்

௧௩௬ மொய் - நெருக்கம் மொசிக்க - உண்ண, "மையூன் மொசித்த வொக்கலொடு" (புறநா. ௯௬.)

௧௩௨ - ௬ மாதர் புகுந்து வாழ்த்திக் கொண்டு ஊண்சுரந்தனள்

௧௩௮ என்றலும் - என்று கோட்டங்காவலர் கூறலும்

௧௩௭ - ௮ சிலப். ௧௧ : ௧௫ - ௬, ௨௫ : ௧௮௧ - ௨, ௨௭ ௧௬௯ - ௭௦, ௨௮ ௧௮௫ - ௬.

௧௩௯ மடக்கொடி வருக வருகவென்று.

௧௪௧. வாயிலாளரின் - வாயிலாளராகலால்

௧௪௨. வாழியவென - வாழ்கவென்று மணிமேகலை சொல்ல

மேல்வருவது அரசன் கூற்று.

௧௪௪ நீ ஏந்திய இப்பாத்திரம் எங்கே கிடைத்தது.

மேல்வருவன மணிமேகலைகூற்று.

௧௪௭. விஞ்சை மகளென்பதற்கு மந்திரத்தால் உருமாறிய மகளென்றும் வித்தியாதர மகளென்றும் இருபொருள் கொள்க, விஞ்சை - மந்திரம் பின்வருவனவும் இப்படியே இருபொருள் கொள்ளுதற்குரியவை

௧௪௯. வானம் - மழை. ௧௫௦. கோமகற்குத் தீதின்றாக

௧௫௦ - ௫௧ ஈது ஐயக்கடிஞை - இது பிச்சைப்பாத்திரம்

(பி - ம்.) ௧௩௬ 'முசிக்க', 'பொசிக்க' ௧௪௨ 'தாள் வாழிய' ௧௪௩ 'தவத்தீர்நீ' ௧௪௫. 'அரசுகூறலும்' ௧௪௬. 'விரைத்தார் வேந்தேநீ நீடூழி' ௧௫௦ - ௫௧. 'கோமகன்றனக்கிங், கைய கடிஞை'

தெய்வந் தந்த திப்பிய மாயத்து
யானைத் தீநோ யரும்பசி கெடுத்த
ஊணுடை மாக்கட் குயிர்மருந் திதுவென
யான்செயற் பாலதென் னிளங்கொடி யென்று
வேந்தன் கூற மெல்லிய லுரைக்கும்
சிறையோர் கோட்டஞ் சீத்தருள் நெஞ்சத்
தறவோர்க் காக்கு மதுவா ழியரென
அருஞ்சிறை விட்டாங் காயிழை யுரைத்த
பெருந்தவர் தம்மாற் பெரும்பொரு ளெய்தக்
கறையோ ரில்லாச் சிறையோர் கோட்டம்
அறவோர்க் காக்கினன் அரசாள் வேந்தென்.

## ௧௯ — சிறைக்கோட்டமறக்கோட்டமாக்கியகாதை முற்றிற்று

---

௧௪௨. திப்பியமாவது - தெய்வலோகத்திருந்து உண்டாகிய பொருளாகவுள்ளது.

௧௪௪. உடம்பு மெலிந்தவர்களுக்கு உயிரைக்கொடுக்கும் மருந்து இது என்று மணிமேகலை சொல்ல. [illegible] ௨௦ ௧௧

௧௪௭-௮. சிறைச்சாலையை இடித்துத் தூய்மைசெய்து அவ்விடத்தை அருளறம் பொருந்திய மனத்தையுடைய முனிவர்களுக்கு உரிய இடமாகச் செய்யும் இதுவே நீ செயற்பாலதென்று மணிமேகலை சொல்ல.

௧௫௦. பெரும்பொருள் - அறமும் ஞானமுமாம்.

௧௫௧. கறையோர் - கடமை கொடுப்போர்; இல்லாத கோட்டமெனக் கூறினமையால், அரசன் கறைவீடுசெய்த செங்கோன் முறைமையுடையனென்பது பெறப்படுகின்றது; இதனை, "சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதும், கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மின், இடுபொருளாயினும் படுபொருளாயினும், உற்றவர்க் குறூஉம் பெற்றவர்க் காமென, யானை யெருத்தத் தணிமுரசிரீஇக், கோன்முறை யறைந்த கொற்ற வேந்தன்", 'சிறையோர் கோட்டஞ் சீமின் யாங்கணுங் கறைகெழு நாடு கறைவீடு செய்ம்மென' (சிலப். ௨௩ : ௧௨௬-௩௧, ௨௮ : ௨௦௩-௪), "தம்பியை முகத்து நோக்கித் தாபிணி கோட்டஞ் சீப்பித் துறந்தவ ருண்ணுட்டைப் பார்பிணி கறையி னீங்கப் படாமுரசறைவி யென்றான்" (சீவக. ௨௩௭௨) என்பனவற்றால் அறிக.

௧-௧௫௨. தாரோன் வணங்கிக் கூறத் தெய்வங் கூறலும், உள்ளங் கலங்கி வருந்தி அறிவாமென்பப் பெயர்வோன்றனை நீலயானை தொடர

(பி-ம்.) ௧௪௨ 'தெய்வந்தந்து திப்பியமாயது' ௧௪௪ 'மானிடமாக்க ளுயிர்மருந்திது' ௧௪௬. 'வேந்தன் கூறி' ௧௪௭ 'கோட்டஞ் சிதைத்து' ௧௪௮ 'அறவோர் காக்குமதிவாழிய' ௧௪௯ 'அருஞ்சிறை விட்டுத்தாயிழை தானென' ௧௫௨ 'மறவோர் நகாக்கினளரசாள'

எஃகு உளங்கிழிப்ப அவன் பொததி உயிாத்துப் போயபின, மணிமேகலை நுனிததனனறெனறு கருதி வாங்கிக் கோட்டம்புகுநது மாககளை ஊட்டலும, காவலா வியநது கோமகனுககு இசைததமெனறேகி, திருவளா சென்று ஏறலும, வாயிலுககிசைதது வணங்கி, 'மனனவ, வமபமாதா ஊண சுரநத னளா' எனறலும, 'வருகவருக' எனறு அரசன் கூறலின, மடக்கொடி வாயிலாளரிற் சென்று, 'நின் அருளவாழிய' என, 'யாங்காகியது' எனறு அரசன கூறலும, ஆயிழையுரைககும அங்ஙன முரைப்பவள், 'உயிாமருநது இது' என, 'யான செயததறபாலது என' எனறு வேநதன்கூற, மெலலியல உரைககும, அங்ஙனம உரைபபவள், 'நீ செயறபாலது அறவோாககு ஆககுமது' என, வேநது பெருமபொருளெயதுதறகுக கோட்டததை அறவோாககு ஆககினனென விளைமுடிவு செயக

———

இருபதாவது

# உதயகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்தகாதை.

———

[இருபதாவது மணிமேகலை காயசண்டிகைவடிவெய்தக் காயசண் டிகை கணவனாகிய காஞ்சனனென்னும் விச்சாதரன் வந்து காயசண்டிகையாமெனக்கருதி அவள் பின்னிலைவிடா உதயகுமரனைப் புதையிருட்கண் உலகவறவியில் வாளாலெறிநதுபோன பாட்டு.]

———

அரச னாணையி னாயிழை யருளால்
நிரயக கொடுஞ்சிறை நீக்கிய கோட்டம
தீபபிறப புழந்தோர் செவ்வினைப பயததான்
யாப்புடை நற்பிறப பெய்தினா போலப
பொருளபுரி நெஞ்சிற் புலவோன் கோயிலும்

---

௨ நிரயக கொடுஞ்சிறை - நரகவேதனையைச செயயும் கொடிய சிறை கோட்டம - அறை

௩ தீபபிறப்புழநதோா - கொடிய பிறவியிற்பிறந்து வருநதினோா

௪ யாப்பு - பொருத்தம்

௫. பொருள் புரிநெஞ்சிற் புலவோன் - சத்தியம் நான்கினையும் விரும்பிய நெஞ்சினையுடைய புத்தன், பொருள் - சததியம

(பி - ம்.) ௩ 'செயதவம் பயநததால்', 'செயத தவப்பயததால' ௪ 'எதிய்னபோல'

அருள்புரி நெஞ்சத் தறவோர் பள்ளியும்
அட்டிற் சாலையு மருந்துநா சாலையும்
கட்டுடைச் செல்வக் காப்புடைத் தாக
ஆயிழை சென்றதூஉ மாங்கவ டனக்கு
வீயா விழுச்சீர் வேந்தன் பணித்ததூஉம்
சிறையோர் கோட்டஞ் சீத்தரு ணெஞ்சத்
தறவோர் கோட்ட மாக்கிய வண்ணமும்
கேட்டன னாகித் தோட்டார் குழலியை
மதியோ ரெள்ளினு மன்னவன் காயினும்
பொதியி னீங்கிய பொழுதிற் சென்று
பற்றினன் கொண்டென் பொற்றே ரேற்றிக்
கற்றறி விச்சையுங் கேட்டவ் வுரைக்கும்
முதுக்குறை முதுமொழி கேட்குவ னென்றே

சு அறவோர் - பௌத்தமுனிவர் "அறவோர் பள்ளியு மறனோம் படையும" (சிலப். ரு கஎசு), "அருணெஞ்சத், தறவோர் கோட்டம" (கக - உ) என்று இக்காதையிற் பின்பு கூறுதல் காண்க.

எ அட்டிற்சாலை - மடைப்பள்ளி அருந்துநாசாலை - போசனசாலை

அ கட்டு - உறுதி காப்பு உடைத்தாக - காவலை யுடையதாக.

உ - அ கோட்டம காப்புடைத்தாகவென இயைக்க

கூ ஆயிழை - மணிமேகலை

க0 வீயாவிழுச்சீர் - மாறுத சிறந்த கீர்த்தி பணித்தது - சொல்லியது அது, "யானைசெய்ற பாலதை ளிளங்கொடிக்கு" (மணி. கக கருரு) என்றது

கக - உ அருணெஞ்சத்த தறவோர் மணி உ0 சு

கரு கேட்டனனாகி - (உதயகுமரன்) கேட்டு தோட்டார்குழலி தோட்டார் குழலியென விகாரம, சிலப் கரு 198

கச மதியோர் எள்ளினும - அறிவுடையோர் இகழ்வாராயினும காயினும - கோபித்தாலும

கரு. பொதியில = பொது இல - அமபலம

கசு பற்றினனகொண்டு - பிடித்துக கொண்டு

கஎ விச்சை - வித்தை, உமமை இறந்தது தழீஇயது.

கஅ முதுக்குறை முதுமொழி மணி கஅ ககஎ, உ0 எச

(பி - ம்.) எ 'அருந்தினர்' கூ 'சென்றதுமாங்' கக - உ 'சிறையோர் நீங்கிச் சிறையோர்கோட்ட, மறவோர் கோட்ட' கரு 'தோட்டலர் குழலியை' கரு 'நீங்கிப பொழுதிற' கஎ. 'கற்றறி விஞ்சையும்' கஅ 'முதுக்குறை மொழியுங் கேட்குவன்'

மதுக்கமழ் தாரோன் மனங்கொண் டெழுந்து
பலர்பசி களையப் பாவைதா னொதுங்கிய
உலக வறவியி னூடுசென் றேறலும்
மழைசூழ் குடுமிப் பொதியிற் குன்றத்துக்
கழைவளர் கான்யாற்றுப் பழவினைப் பயத்தால்
மாதவன் மாதர்க் கிட்ட சாபம்
ஈராறாண்டு வந்தது வாராள்
காயசண் டிகையெனக் கையற வெய்திக்
காஞ்சன னென்னு மவள்தன் கணவன்
ஓங்கிய மூதூ ருள்வந் திழிந்து
பூத சதுக்கமும் பூமலர்ச் சோலையும்
மாதவ ரிடங்களு மன்றமும் பொதியிலும்

---

கக தாரோன் - உதயகுமரன் உ0 ஒதுங்கிய - சென்ற

உக ஊடு - உள்ளே

கூ - உக சென்றனுமம் பணித்ததூஉம் வண்ணமும் கேட்டு எள்ளினும் காயினும் சென்று குழலியைப் பற்றிக்கொண்டு எற்றிக் கேட்டுக் கேட்குவனென்று மனங்கொண்டு தாரோன் எழுந்து சென்று ஏறலுமெனக

மேலே, காஞ்சனன் காயசண்டிகையைத் தேடிப்போந்ததும், உதயகுமரனைக் கொன்றதும் கூறப்படும்

உஉ பொதியிற்குன்றம் - பொதியின் மலை

உ௩ கழை - மூங்கில் யாறு - ஆற்றில்

உச மாதவன் - விருச்சிகன், மாதர்க்கு - காயசண்டிகைக்கு

உரு ஈராறாண்டு - பன்னிரண்டாவது வருடம்

உகூ கையறவு - செயலறுதல் உரு - கூ காயசண்டிகை வாராள்

உஅ மூதூர் - காவிரிப்பூம்பட்டினம் இழிந்து - இறங்கி, என்றதனால், காஞ்சனன் ஆகாய கமனமுடையனென்பது பெறப்பட்டது, "விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென" (கஉகூ) என்று இக்காதையிற் பின்வருதல் காண்க

உகூ பூதசதுக்கம் - தவவேடத்தில் மறைந்துநின்று அத்தவத்திற்கு இழுக்கானவற்றினைக் கண் ஒழுகும் பொய்வேடத்தார் முதலிய அறுவகையோரையும் பாசத்தாற் கட்டி அடித்துண்ணும் பூதம் நிற்றற்கிடமாகிய சதுக்கம், சதுக்கம் - நாற்சந்தி, "தவமறைந் தொழுகும் பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்" (ரு, கஉஅ - ௩ச) என்று சிலப்பதிகாரத்து வருதல் காண்க பூ - பொலிவு

௩0 மன்றம் - ஊர்க்கு நடுவாய எல்லாருமிருக்கும் மரத்தடி, "மன்றமும் பொதியிலும்" (முருகு உஉகூ)

(பி - ம்.) உ0 'களைஇயபாவை தானொதுங்கிய' உச 'மாதவனமாற கிட்ட' உஅ. 'வந்துபுகுந்து' உகூ 'பூதச் சதுக்கமும் பூமரச் சோலையும்'

தோந்தனன் றிரிவோ னோந்திள வனமுலை
மாநதா பசிநோய் மாற்றக கண்டாங
கின்றுநின் கையி னேந்திய பாததிரம
ஒன்றே யாயினு முண்போா பலரால
ஆனைத தீநோ யருமபசி களைய
வான வாழ்ககைய ரருளினா கொலலெனப
பழமைக கட்டுரை பலபா ராட்டவும
விழையா வுளளமொ டவன்பா னீஙகி
உதைய குமரன் றன்பாற் சென்று
நரைமூ தாட்டி யொருததியைக் காட்டித
தண்ணறல வண்ணந் திரிநதுவே றாகி
வெண்மண லாகிய கூநதல காணாய்
பிறைநுதல் வண்ணங் காணா யோநீ
நரைமயிற றிரைதோற றகையின் றாயது
விறலவிற் புருவ மிவையுங காணாய
இறவி னுணஙகல போனறுவே றாயின
கழுநீாக கண்காண் வழுநீா சுமந்தன
குமிழ்மூக் கிவைகா ணுமிழ்சீ யொழுககுவ
நிரைமுத் தனைய நகையுங காணாய்

---

௩௧ திரியோன - காஞசனன
௩௨ கணடு - காஞசனன் கணடு
மேலவருவன காஞசனன கூறறு
௩௫ நோய - பஸமகவியாதி ௩௬ வானவாழககையா - தேவா
௩௫ - ௬ களைய அருளினாகோல
௩௭ பலபாராட்ட - பலவறறைககூறிப பாராட்ட.
௩௮ அவன - காஞசனன
௪0 நரைமூதாட்டி - நரையையும முதுமையையு முடையவள
௪௧ 'தணணறல வணணம' எனபது முதலியன மணிமேகலை கூறறு
அறல - கருமணல்
௪௪ நரைமம - வெணமை
௪௬ இறவின உணஙகல் - இறால்மீனின வற்றல்
௪௯. நகை - பல்

(பி-ம்.) ௪௧ 'தண்ணல வண்ணந்திரிந்து வேறாகிய' ௪௨. 'கூந்தலுங காணாய' ௪௪ 'நறைமயிற்றினா தோறறேறகையின' ௪௮ 'ஒழுகுவ', 'ஒழுகுவன' ௪௯. 'பல்லுஙகாணாய'

சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்துவே றாயின
இலவிதழ்ச் செவ்வாய் காணா யோநீ
புலவுப் புண்போற் புலால்புறத் திடுவது
வள்ளைத் தாள்போல் வடிகா திவைகாண்
உள்ளூன் வாடிய வுணங்கல் போன்றன
இறும்பூது சான்ற முலையுங் காணாய்
வெறும்பை போல வீழ்ந்துவே றாயின
தாழ்ந்தொசிந் தெங்கின மடல்போற் றிரங்கி
வீழ்ந்தன இளவேய்த் தோளுங் காணாய்
நரம்பொடு விடுதோ லுகிர்த்தொடர் கழன்று
திரங்கிய விரல்க ளிவையுங் காணாய்
வாழைத் தண்டே போன்ற குறங்கிணை
தாழைத் தண்டி னுணங்கல் காணாய்
ஆவக் கணைக்கால் காணா யோநீ
மேவிய நரம்போ டென்புபுறங் காட்டுவ
தளிரடி வண்ணங் காணா யோநீ
முளிமுதிர் தெங்கி னுதிர்கா யுணங்கல்
பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத்
தூசினு மணியினுந் தொல்லோர் வகுத்த
வஞ்சந் தெரியாய் மன்னவன் மகனென

---

௫0 சுரைப்பழத்தின் விதை பல்லுக்கு உவமையாதலை, "சுரைவித்துப் போலும் பல்" (நாலடி. ௪௧௫) என்பதனாலுமுணர்க.

௫உ புலவு - புலால்நாற்றம்.

௫௩ வள்ளைத்தாள் - வள்ளைத்தண்டு. வடிகாது - வடிந்தகாது.

௫௫ இறும்பூது - அதிசயம், "இறும்பூது போலுமஃ தறிந்தருணீ யென" (சிலப். பதி ௯)

௫எ திரங்கி - திரைந்து.

௫௯ உகிர்த்தொடர் - நகத்தின் தொடர்ச்சி.

௬௧ குறங்கு - துடை, இணை - இரண்டு. ௬௩ ஆவம் - அம்புக்கூடு.

௬௬ முளிமுதிர்தெங்கு - உலர்ந்த முதிர்ந்த தென்னை.

௬எ. "புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது" (௪ ௧௧௪) என்றார் முன்னும்.

௬௯ தெரியாய் - தெரிந்துகொள்வாய்.

(பி-ம்.) ௫௩. 'வடிந்தகாது' ௫௫ 'சான்றனமுலையிவை காணாய்' ௫அ 'தோளிவைகாணாய்' ௫௯. 'உகிரொடு கழன்று' ௬௩. 'காலிவையுங் காணாய்' ௬எ 'புலான் மறுத்தியாத்து'

விஞ்சை மகளாய் மெல்லிய லுரைத்தலும்
தற்பா ராட்டுமென் சொற்பயன் கொள்ளாள்
பிறன்பின் செல்லும் பிறன்போ னோக்கும்
மருங்கம் மூலங்கன மன்னவன் மகற்கு
முதுக்குறை முதுமொழி யெடுத்துக் காட்டிப்
பவளக் கடிகையிற் றவளவா ணகையும்
குவளைச் செங்கணுங் குறிப்பொடு வழாஅள்
ஈங்கிவன் காதல னாதலி னேந்திழை
ஈங்கொழிந் தனளென விகலெரி பொத்தி
மற்றவ ளிருந்த மன்றப் பொதியிலுட்
புற்றடங் கரவிற் புக்கொளித் தடங்கினன்

௭0 விஞ்சைமகளாய - காயசண்டிகையாய மெல்லியல - மணிமேகலை

மேலவருவந்த காஞ்சனன செயதி.

௭௨ பிறனென்றது உதயகுமரனை. இங்கே பிறனபின செல்லுமென்றதுபோல, "எண்ணிப்பந் நங்கை யிட்டா ளிந்திரன மகளுமாங்கே, வெண்ணெயகுன றெரியுற் றுறபோன மெலிந்துபின னிறகுமன்றே" (௩௫௬௭) என்று சீவகசிந்தாமணியிலும் வந்திருத்தல் காண்க.

௭௪ மு. மணி. ௧௮ ௧௬௭

௭௫ பவளக்கடிகை - பவளத்துண்டம் என்றது உதட்டினை

௭௬ குறிப்பு - இங்கிதம்

௭௫ - ௬ இவ்வடிகளின் பொருளோடு, "ஒத்தொளிர் பவளத்துள் ளொளி சிறந்த . . . உளங்கொண் டொளித்தா ளுயிர்க்காப்பிட்டு" (௧௮ ௭0 - ௭௬) என்று உதயகுமரன் கூறியவாக்கியம் ஒப்புநோக்கற்பாலது

௭௭ இவனென்றது உதயகுமரனை காதலன - ஆசைநாயகன

௭௮ ஈங்கு ஒழிந்தனள - இவ்விடத்திலேயே தங்கிவிட்டாள், என னை ஐயவிரந்தாளென் றுமாம, ஈங்கு, தன்மையை யுணர்த்துதலை, "ஈங்க ளிப்பன" (மணி. ௧௪ ௪௮) எனபதிற் காண்க. இகல - மாறுபாடு

௭௯ மன்றப்பொதியில - மன்றமாகிய பொதியில, இருபெயரொட்டு இப்படியே, "மன்றப் பொதியிற், கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை" (௨௧ ௬ - ௭) என்று பின்னும்வரும்

௮0 இங்கே காஞ்சனனுக்குப் பாம்பை உவமை கூறியதற்கேற்ப, 'வேக வெந்தீ நாகங் கிடந்த, போகுயர் புற்றளை புகுவான் போல", 'வெஞ்சின வரவ நஞ்செயி றரும்பத், தன்பெரு வெகுளியி னெழுந்துபை

(பி - ம்.) ௭0. 'மெல்லியலுரைக்கத' ௭௨. 'பிறர்பின் செல்லினும் பிறர்போல' ௭௪ 'எடுத்துக்காட்டப' ௭௫ 'பவளக் கடிகையும்' ௭௮. 'ஆங்கொழிந்தனளென வகையெரி' ௭௯. 'பொதியிற்'

காஞ்சன னென்னுங் கதிர்வாள் விஞ்சையன்
ஆங்கவ னுரைத்த வரசிளங் குமரனும்
களையா வேட்கை கையுதிர்க் கொள்ளான்
வளைசேர் செங்கை மணிமே கலையே
காயசண் டிகையாய்க் கடிஞை யேந்தி
மாய விஞ்சையின் மனமயக் குறுத்தனள்
அம்பல மருங்கி லயர்ந்தறி வுரைத்தவிவ்
வம்பலன் றன்னொடிவ் வைகிரு ளொழியாள்
இங்கிவள் செய்தி யிடையிருள் யாமத்து
வந்தறி குவனென மனங்கொண் டெழுந்து
வான்றோய் பாகனை மீன்றிகழ் கொடியனைக்
கருப்பு வில்லியை யருப்புக்கணை மைந்தனை
உயாவுத் துணையாக வயாவொடும் போகி
ஊர்துஞ் சியாமத் தொருதனி யெழுந்து
வேழம் வேட்டெழும் வெம்புலி போலக்
கோயில் கழிந்து வாயி னீங்கி
ஆயிழை யிருந்த வம்பல மணைந்து

---

விரிதர்சென, விருந்தோ னெழுந்து" (௯௮ - ௯, ௧0௪ - ௯) என இக்காதையிலேயே கூறுதல் காண்க.

௮௨ அவள் - மணிமேகலை. ௮௩ கையுதிர்க்கொள்ளான் - நீக்கான்; மேல்வருவன உதயகுமரன் உட்கோள்.

௮௬. மாயவிஞ்சையின் - மாயவித்தையினால்.

௮௭ அயர்ந்து - வருந்தி, மறந்தென்றுமாம். அறிவுரைத்த - பழமைக்கட்டுரை பல பாராட்டிய.

௮௮ வம்பலன் - அயலான். வைகிருள் - வைகறைப்பொழுது.

௯௧ வான்றேர் - ஆகாயத்தில் உலவும் தென்றற்காற்றாகிய தேர்.

௯௨ மணி. ௧௮ : ௧0௫, ௨௫ : ௯0; "மைத்துழாய் நெடுங்கணார் மனத்தூடு காமனார், கைத்துலாங் கவாக்கணை யரும்பு வைத்தவே" (சூளா. குமார ௫).

௯௩. உயாவுத் துணையாக - வினவுந்துணையாக; கொண்டென்று ஒருசொல் வருவிக்க; தனியே சென்றானென்றபடி. வயா - வேட்கைமிகுதி; "வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்" (தொல். உரி. சூ. ௭௩).

௯௪ போயவன் நடுஇரவில் மீட்டும் எழுந்து வந்தான்.

(பி - ம்.) ௮௨ - ௩ 'உரைத்த வலர்தார் வேந்தனும், களையாவேட்கைபிற் கைவிதிற் கொள்ளா' ௮௮ 'வம்பலன்றன்னோட்டவை யிருளொளியான்' ௮௯ 'எங்கிவைசெய்தி' ௯௧ 'பாகன்மீன்' ௯௩ 'உயிர்த் துணையாக வயாப்பொடும்', 'உற்றுணையாக வயாவொடும்'

வேக வெந்தீ நாகங் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல
ஆகந் தோய்ந்த சாந்தல ருறுத்த
ஊழடி யிட்டத னுள்ளகம் புகுதலும்
ஆங்குமுன் னிருந்த அலர்தார் விஞ்சையன்
ஈங்கிவன் வந்தனன் இவள்பா லென்றே
வெஞ்சின அரவ நஞ்செயி றரும்பத்
தன்பெரு வெகுளியி னெழுந்துபை விரித்தென
இருந்தோ னெழுந்து பெரும்பின் சென்றவன்
சுரும்பறை மணித்தோள் துணிய வீசிக்
காயசண் டிகையைக் கைக்கொண் டந்தரம்
போகுவ லென்றே யவள்பால் புகுதலும்
நெடுநிலைக் கந்தி னிடவயின் விளங்கக்
கடவு ளெழுதிய பாவையாங் குரைக்கும்

---

௯௮ தீ - விடம்

௯௯ போகுயர் புற்றளை - மிகவுயர்ந்த புற்றின் துவாரம்

௯௮ - ௯ மணி. ௨௦ அ0, ௧0௪ - ௫

௧௦௦ சாந்து - சந்தனம் அலருறுத்த - பலரறியச்செய்ய

௧௦௧ ஊழ் அடியிட்டு - முறையே அடிவைத்து, "ஊழடிமுட்டம்" (குறிஞ்சி. ௨௫௮) அதன் உள்ளகம் - அம்பலத்தின் உள்ளிடம்

௧௦௩ என்று - என்று கருதி

௧௦௪ நஞ்சு எயிறு அரும்ப - விடத்தைப் பல் வெளிப்படுத்த, விடத்தையுடைய பல்தோன்ற வென்றுமாம்

௧௦௫ பை - படம் ௧௦௪ - ௫ மணி. ௨௦ அ0, ௯௮ - ௯

௧௦௬ இருந்தோன் - காஞ்சனன்

௧௦௭ சுரும்பு அறை மணித் தோள் - மலையை யொத்த அழகிய தோள். சுரும்பு - மலை, அறை உவமவுருபு.

௧௦௯ போகுவல் - போவேன்

௧௦௨ - ௯ விஞ்சையன் இருந்தோன், இவன் இவள்பால் வந்தான் என்று எழுந்து சென்று வீசிப் போகுவலென்று புகுதலுமெனக்

௧௧௦ கந்து - தூண்.

௧௧௧ கடவுள் எழுதிய - மயனால் பண்ணப்பட்ட, "மயனெனக் கொப்பா வகுத்த பாவையின் நீங்கென" (மணி. ௨௧ ௧௩௨ - ௩) என்று பின்வருதல் காண்க

(பி - ம்.) ௯௯ 'போயபுற்' ௧௦௩ 'ஈங்குவந்தனன' ௧௦௭ 'தோள் வீச' ௧௧௦ 'கந்தனிடவயின' ௧௧௧. 'பாவயாகக்குரை'

அணுக லணுகல் விஞ்சைக் காஞ்சன
மணிமே கலையவண் மறைந்துரு வெய்தினள்
காயசண் டிகைதன் கடும்பசி நீங்கி
வானம போவுழி வந்தது கேளாய்
அந்தரஞ் செல்வோ ரந்தரி யிருந்த
விந்த மாலவரை மீமிசைப் போகார்
போவா ருளரெனிற் பொங்கிய சினத்தள்
சாயையின் வாங்கித் தன்வயிற் றிடூஉம்
விந்தங் காக்கும விந்தா கடிகை
அம்மலை மிசைப்போ யவள்வயிற் றடங்கினள்
கைம்மைமை கொள்ளேல் காஞ்சன விதுகேள்
ஊழ்வினை வந்திவ னுதய குமரனை
ஆருயி ருண்ட தாயினு மறியாய

மேலவருவன கந்திறபாவை காஞ்சனனை நோக்கிக் கூறும் கூற்று

ககஉ அணுகல் அணுகல் - அணுகாதே அணுகாதே

ககச - ௫ தனபசி நீங்கிக் காயசண்டிகை வானம்போவுழி அவளுக்கு வந்த துனபத்தைக்கேள்

ககசு. அந்தரஞ் செல்வோர் - தேவா அந்தரி - துர்க்கை

ககஎ விந்தமாலவரை - விந்தியமலை

ககசு - எ விந்திய மலையிலிருத்தல் பற்றித் துர்க்கைக்கு விந்தாஸனி யென்றும் ஒரு பெயருண்டு, "விந்தா சனிகொண்கன்" (வங்கர் கோவை)

ககஅ - உ0 விந்தமலையைப் பாதுகாக்கும் விந்தாகடிகை யெனபவள், யாரேனும் அம்மலைமேற்போனால் மிக்க கோபத்தை யுடையளாய்ச் சாயை யினால் அவர்களை இழுத்துத் தனவயிற்றிலிடுவள் பிரமதேவரிடம் வரம் பெற்ற ஸிம்ஹிகை யென்னுமரக்கி இலங்கைக்குச் சென்ற அநுமானை நிழலாலிழுத்துத் தடைப்படுத்தியதாக ஸ்ரீமத் வால்மீகிராமாயணம், சுந்தர காண்டத்தால் தெரிகின்றது

ககச - உக காயசண்டிகை விந்தாகடிகையின் வயிற்றிலடங்கினள்

கஉஉ கைம்மைமை கொள்ளேல் - சிறுமையைக் கொள்ளாதே, சிறுமை யென்றது ஆராயாது செய்தலை இனி, உதயகுமரன் மணிமேகலையுடைய பழம்பிறப்பின் நாயகனென்பதனை ஞானத்தால் அறிந்த கந்திறபாவை அவன் இறந்தது பற்றி, மணிமேகலையை அமங்கலையாக நினைந்து அவளைக் கொள்ளாதேயென்று கூறிற்றென்னலுமாம், கைம்மை - அமங்கலை

கஉங - ச. மடைத்தொழில் செய்வோனை முற்பிறப்பில வெட்

(பி - ம்.) ககஉ. 'விஞ்சையா காஞ்ச' ககங. 'மற்றுருவெய்தினள' ககஎ 'மீமிசைச்செல்லா' ககஅ. 'சினத்தாள்' ககசு - உ0. 'சாகை யின .. தகைவையிற்றழூஉ, மந்தய'

௧௨௫ வெவ்வினை செய்தாய் விஞ்சைக் காஞ்சன
அவ்வினை நின்னையு மகலா தாங்குறும்
என்றிவை தெய்வங் கூறலு மெழுந்து
கன்றிய நெஞ்சிற் கடுவினை யுருத்தெழ
விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென்

௨௦ — உதயகுமரனைக்காஞ்சனன் வாளாலெறிந்தகாதை முற்றிற்று.

---

டியபாவம் உதயகுமரனை வெட்டுணச் செய்தது, அஃதுலும் ஆராயாது செய்தலின் நீ அறியாய் இவ்வரலாற்றை, மணி. ௨௧ - ஆம் காதை, ௪௭ - ஆம் அடி முதலியவற்றாலும், ௨௩ - ஆம் காதை, ௮௨ - ஆம் அடி முதலியவற்றாலும் உணர்க

௧௨௮ கடுவினை - உதயகுமரனைக் கொன்றபாவம்

௧௨௯ விலங்கு - குறுக்காக

௧ - ௧௨௯ கோட்டம் காப்புடைத்தாக, தாரோன் கேட்டு மனங்கொண்டு எழுந்து சென்று ஏறலும், கணவன், கையற்றெய்தி வந்து இழிந்து தோந்து திரிவோனுயக் கண்டு பலபாராட்டவும் நீங்கிச்சென்று காட்டி மெல்லியல் உரைத்தலும், விஞ்சையன் புக்கு ஒளித்து அடங்கினன் அரசிளங்குமரனும் கொள்ளான் மனங்கொண்டு எழுந்து போகி எழுந்து கழிந்து நீங்கி அணைந்து புகுதலும், விஞ்சையன், எழுந்து சென்று எய்திப் புகுதலும், பாவை உரைக்கும் அங்ஙனம் உரைப்பத் கூறலும் விஞ்சையன் எழுந்து படர்ந்து போயினனென்ன வினைமுடிவு செய்க

(பி - ம்) ௧௨௯ 'விளங்குவிண்'

---

இருபத்தொன்றாவது

# கந்திற்பாவை வருவதுரைத்தகாதை

---

[இருபத்தோன்றாவது மணிமேகலை உதயகுமரன்மடிந்தது கண்டு உறுதுயரெய்த, நெடுநிலைக்கந்தின் நின்ற பாவை வருவதுரைத்து அவள் மயக்கொழித்தபாட்டு]

---

கடவு ளெழுதிய நெடுநிலைக் கந்தின்
குடவயி னமைத்த நெடுநிலை வாயின்

---

௧ கடவுள் எழுதிய - தெய்வத்திகளையொத்த பாவையை மயன்பண்ணினன, "கடவுட் பாவை" (எ) என்பா பினனும்

௨ குடவயின் - மேற்றிசை யிடத்தே

(பி - ம்.) ௨. 'அமைந்த நெடுநிலை'

முதியாள் கோட்டத் தகவயிற் கிடந்த
மதுமலர்க் குழலி மயங்கினள் எழுந்து
விஞ்சையன் செய்தியும் வென்வேல் வேந்தன்
மைந்தற் குற்றதும் மன்றப் பொதியிற்
கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை
அங்கவற் குரைத்த அற்புதக் கிளவியும்
கேட்டன ளெழுந்து கெடுகவிவ் வுருவெனத்
தோட்டலர்க் குழலி யுள்வரி நீங்கித்
திட்டி விடமுண நின்னுயிர் போநாள்
கட்டழ லீமத் தென்னுயிர் சுட்டேன்
உவவன மருங்கி னின்பா லுள்ளம்
தவிர்விலே னாதலிற் றலைமகன் றோன்றி
மணிபல் லவத்திடை யென்னையாங் குய்த்துப்

---

௫. முதியாள் கோட்டம் - சம்பாபதி கோயில்.

௧ - ௫. இவ்வடிகளால் சம்பாபதி கோயில், கந்திற்பாவைக்கு மேற்றிசையிலுள்ளதென்று தெரிகின்றது.

௨. குழலி - மணிமேகலை.

௩. விஞ்சையன் - காஞ்சனன். வென் - வெற்றி. "வென்வே லாடவன்" (பு - வெ. ௫௯)

௪. மைந்தற்கு - உதயகுமரனுக்கு. மன்றப்பொதியில் - மணி. ௨௦ : ௭௯.

௭. கந்திற்பாவை.

௮. அங்கவற்கு - காஞ்சனனுக்கு. அற்புதம் - ஆச்சரியம்.

௯. இவ்வுருக் கெடுகவென்று.

௧௦. குழலி சுட்டு உள்வரிநீங்கி - மறைந்த வேடமொழிந்து, என்றது காயசண்டிகையின் வடிவமொழிந்தென்றபடி.

இனி, உதயகுமரனைக்குறித்து மணிமேகலை புலம்புதல் கூறப்படும்.

௧௧. திட்டிவிடம் - கண்ணில் விடமுடையதொரு பாம்பு, மணி. ௯ : ௪௯; இதனைப் பாம்புகளுக்கு அரசென்றுங் கூறுவர்.

௧௨. கட்டழல் - மிக்கநெருப்பு. ஈமம் - மயானம்.

௧௧ - ௨. இவ்வடிகளாற் போனபிறப்பின் செய்தி கூறினாள்.

௧௪. தலைமகள் - மணிமேகலாதெய்வம்.

௧௫ - ௪. உவவனத்திற் கண்டபொழுது உதயகுமரன்பால் மணிமேகலைக்குக் காதலிருந்ததென்பதை, "புதுவோன் பின்றைப் போனதென் னெஞ்சம், இதுவோ வன்னாய் காமத் தியற்கை" (௫ : ௮௯ - ௯௦), "அவன்பா லுள்ளம், நீங்காத தன்மை நினக்குமுண் டாகலின்" (௧௦ : ௪௪ - ௫) என முன்வந்திருத்தலாலுணர்க.

(பி - ம்.) ௩. 'வெள்வேல்' ௧௦. 'தோட்டக்குழலி', 'தோட்டலர்க் குழலி' ௧௧. 'விடமுணவு'

பிணிப்பறு மாதவன் பீடிகை காட்டி
என்பிறப் புணர்ந்த வென்முன் றோன்றி
உன்பிறப் பெல்லா மொழிவின் றுரைத்தலிற்
பிறந்தோ ரிறத்தலு மிறந்தோர் பிறத்தலும்
அறந்தரு சால்பு மறந்தரு துன்பமும்
யானினக் குரைத்துநின் னிடர்வினை யொழிக்கக்
காயசண் டிகைவடி வானேன் காதல
வைவாள் விஞ்சையன் மயக்குறு வெகுளியின்
வெவ்வினை யுருப்ப விளிந்தனை யோவென
விழுமக் கிளவியின் வெய்துயிர்த்துப் புலம்பி
அழுதன ளேங்கி யயாவுயிர்த் தெழுதலும்
செல்லல் செல்லல் சேயரி நெடுங்கண்
அல்லியந் தாரோன் றன்பாற் செல்லல்
நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம்
மனக்கினி யாற்குநீ மகளா யதூஉம்

---

கசு. பிணிப்பறு மாதவன் - புத்தன்; பிணிப்பு - பற்று, "பிணிப்பறுத் தோர்தம் பெற்றி யெய்தவும்" (சிலப். கரு. க00).

கச-அ. தலைமகள் தோன்றி உய்த்துக் காட்டித் தோன்றி உரைத்தலின் எனக்.

உ0. சால்பு - அமைதி, இன்பமுமாம். மறம் - பாவம்.

கக-உ0. மணி. உக: கக௩. சிலப். ௩0: க௩அ-கூ.

உச. உருப்ப - கோபிக்க. விளிந்தனையோ - இறந்தாயோ.

உ௩-ச. உருப்ப வெகுளியின் விளிந்தனையோ.

உரு. விழுமக்கிளவி - துன்பத்தைப் புலப்படுத்தும் சொற்கள்.

உசு. அயாவுயிர்த்து - நெட்டுயிர்ப்புக்கொண்டு. எழுதலும் - மணிமேகலை எழுதலும்.

மேல், மணிமேகலையை நோக்கிக் கந்திற்பாவை கூறுதலைச் சொல்லுவார்.

உஎ. செல்லல் செல்லல் - போகாதே போகாதே. சேயரிநெடுங்கண் - விளி.

உஅ. அல்லி - அகவிதழ். தாரோன் - உதயகுமரன்.

உகூ. மகன் - கணவனுக்கு, "நோதக் குண்டோ நும்மக னார்க்கு" (சிலப். கசு. கஎ) எனக் கணவனை மகனென்று கூறியிருத்தல் காண்க.

௩0. மனக்கினியாற்கு - உதயகுமரனுக்கு. மகளாயதூஉம் - மனைவியானதும்.

(பி-ம்.) கசு. 'பிணிப்புமாதவன்' உஉ. 'காதலன்' உசு 'தலைமகனுயத் தோன்றியதூஉம்'

பண்டும் பண்டும் பல்பிறப் புளவால்
கண்ட பிறவியே யல்ல காரிகை
தடுமாறு பிறவித் தாழ்தரு தோற்றம்
விடுமாறு முயல்வோய் விழுமங் கொள்ளேல்
என்றிவை சொல்லி யிருந்தெய்வ முரைத்தலும்
பொன்றிகழ் மேனிப் பூங்கொடி பொருந்திப்
பொய்யா நாவொடு பொதியிற் பொருந்திய
தெய்வ நீயோ திருவடி தொழுதேன்
விட்ட பிறப்பின் வெய்துயிர்த் தீங்கிவன்
திட்டி விடமுணச் செல்லுயிர் போயது
நெஞ்சு நடுங்கி நெடுந்துயர் கூரயான்
விஞ்சையன் வாளி னிவன்விளிந் ததூஉம்
அறிதலு மறிதியோ வறிந்தனை யாயிற்
பெறுவே னல்லனின் பேரரு ளீங்கென

---

௩௨ நீ அறிந்துகொண்ட முற்பிறப்பில் மட்டுமல்ல, காணுதல் - அறிதல்

௨௯ - ௩௨ தோன்றியதூஉம் ஆயதூஉம் கண்ட பிறவியேயல்ல பண்டும் பண்டும் பலபிறப்புளவாலென இயைக்க

௩௩ தாழ்தரு - தங்குகின்ற, அழுந்துகின்றவென்றுமாம்

௩௪ விழுமம் - துன்பம்

௩௫ சொல்லியுரைத்தல் - கூறிவிளக்குதல், "அன்றந்தணர் சாற்றும்" (சிலப். ௧௦ ௧௩) எனபுழிப்போல

௩௬ பூங்கொடி - மணிமேகலை

மேல், மணிமேகலையின் வினாவும், கந்திற்பாவை கூறும் விடையும் கூறப்படும்

௩௯ விட்டபிறப்பு - போனபிறப்பு. இவன் - உதயகுமரன்

௩௯ - ௪௦. இவன் உயிர்போதற்குக் காரணமாகிய தீவினையையும்

௪௧ யான் நெடுந்துயர் கூர, கூர - மிக

௪௨ விளிந்ததூஉம் - இறந்ததற்குக் காரணமாகிய தீவினையையும்

௪௩ அறிதலுமறிதியோ - அறிதலும் செய்தியோ, இஃது, "உணலு முணலேன் வாழலும் வாழேன்" (கலி. ௨௩) என்பனபோல நின்றது.

௪௪. நல்ல நினது பெருங்கருணையை யான் இவ்விடத்துப் பெறுவேன், என்றது, நீ கூறும் விடையைக்கேட்கும் விருப்பமுடையேனென்றவாறு என - என்று மணிமேகலை சொல்ல.

(பி - ம்.) ௩௨ 'பிறவை யெல்லாங் காரிகை' ௩௭ 'பொதியிற் றோன்றிய' ௪௪. 'பெறுவேனல்லனின்', 'பெறுவனேன்'

ஐயரி நெடுங்க ணாயிழை கேளெனத்
தெய்வக கிளவியிற றெய்வங கூறும
காயங கரையெனும பேரியாற றடைகரை
மாயமின மாதவன வருபொரு ளுரைதது
மருளுடை மாககண மனமாசு கழூஉம
பிரம தருமனைப பேணினி ராகி
அடிசிற சிறப்பியா மடிகளுக காககுதல
விடியல வேலை வேண்டின மென்றலும
மாலை நீங்க மனமகிழ வெய்திக
காலை தோன்ற வேலையின வரூஉ

---

௪௫ ஆயிழை விளி ௪௬ தெய்வம - கந்திறபாவை

௪௭ அடைகரை - அடைகரையில

௪௮ மாதவன வருபொருள - புததன அவதரிததலை உலகததிற பாவஙகள அதிகரிககும காலநதோறும அபபாவஙகளைப போககி அருளறததை நிலைநிறுததி உயிரகளை நிருவாண மடைவிததற பொருட்டுப புததாவதார முணடெனபது பௌததநூறறுணிபு, 'ஈரெண ணூறறோ டீரெட டாணடிற, பேரறி வாளன றோனறும' (கஉ எஎ - அ), "மற விரு ளிரிய மனனுயி ரேமுற, அறவெயில விரிததாங களபபி லிருதது யொடு, புதத ஞாயிறு தோனறுங காறும" (உக க௬௫ - எ) 'புலவன முழுதும பொயயின றுணாநதோன, உலகுயக கோடற கொருவனறோன றும அநநா ளவனறங கேட்டோ ரலல தினனுப பிறவி யிழுக்குநரிலலை" (உ௫ ௪௫ - அ), "கரவரும பெருமைக கபிலையம பதியின அளபபரும பாரமிதை யளவினறு நிறைததுத, துளககமிலபுதத ஞாயிறு தோனறி" (உ௬ ௪௪ - ௬) என இநநூலுளளே பலவிடததும வருதல காணக

௪௯ மருளுடை மாககள - மயககததையுடைய மனிதா மனமாசு - காம வெகுளி மயககஙகள, 'வெஃகல வெகுளல பொலலாத காட்சி யென, றுளளந தனனி லுருபபன மூன்றும" (௯௦ எ௦ - எக) எனபதனு லுணாக கழூஉம - கழுவும

௫௧ அடிகளுககு அடிசிறசிறபபு ஆககுதலெனக

௫௨ விடியல வேலை - நாளவெயிறகாலம, வைகறைப பொழுதெனி னும பொருநதும

௫௧ - ௨ அடிகளுககு அடிசிற சிறபபு விடியல வேலையாககுதல வேணடினமென று மடையனை நோககிக கூறுதலும

௪௭ - ௫௨ அடைகரையில உரைததுக கழூஉம பிரமதருமனைப பேணி விடியலவேலையில ஆககுதலை வேணடினமெனறலுமெனக.

௫௩ மாலை - இரவு

௫௪ காலை - நாளவெயிற காலம வரூஉ - வநது

(பி - ம்.) ௪௮ 'ஆயமனமாதவன' ௫௧ 'அடிசிற் சிறபியாடுதலுக் காககுதல' ௫௩ 'மாலைநீஙகி'

நடைத்திறத் திழுக்கி நல்லடி தளர்ந்து
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனைச்
சீலம் நீங்காச் செய்தவத் தோர்க்கு
வேலை பிழைத்த வெகுளி தோன்றத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாக
வாளிற் றப்பிய வல்வினை யன்றே
விராமலோ கந்தன் மெல்லிய லின்னே
டிராகுலன் றன்னை யிட்டக லாது
தலைவன் காக்குந் தம்பொரு ளாகிய

---

௫௫. நடைத்திறத்து இழுக்கி - நடைவகையால் வழுக்கி.

௫௬. மடைக்கலம் - சோற்றுப்பாத்திரம். மடையன் - சமையற்காரன்.

௫௭. சீலம் - பஞ்சசீலம், தசசீலமுமாம். கொல்லாமை (அஹிம்ஸை), பொய்சொல்லாமை (ஸத்தியம்), கள்ளாமை (அஸ்தேயம்), காமமின்மை (பிரமசரியம்), இரவாமை (அஸங்கிரஹம்) என்னும் இவை **பஞ்சசீலம்**, இவைகளோடு உயர்ந்த ஆசனத்து இருத்தல் கிடத்தலின்மை, சந்தனம் மாலை முதலியன தரியாமை, பொன் வெள்ளிகளைத் தீண்டாமை, பாட்டாடல் விரும்பாமை, உதயத்திற்கு முன்பு புசியாமை என்னும் ஐந்தும் சேர்த்து தசசீலமாம். பஞ்சசீலத்துள், இரவாமை நின்ற நிலைக்களத்தின்கண் கள்ளுண்ணாமையைச் சேர்த்துக் கூறுவாருமுளர். நீல. சமய. கொல்லாமை, திருடாமை, வியபசரியாமை, பொய்கூறாமை, கள்ளுண்ணாமை யென்னுமிவை **பஞ்சசீல**மென்றும், இவை இல்லறத்தார் எல்லோர்க்கும் உரியனவென்றும், இவைகளோடு இரவில் ஆயமையில்லாது உணவைப்புசியாமை, சந்தனம் முதலிய மணமுள்ள பொருள்களை உபயோகியாமை, தரையிற் பாயமேலே படுத்தல் என்னும் மூன்றுஞ்சேர **அஷ்டாங்கசீல**மென்றும், இவை இல்லறத்தாரில் நிஷ்டாபரர்களுக்கே உரியனவென்றும், இவ்வெட்டோடு நாட்டியம் கானம் முதலியவற்றை விரும்பாமை, பொன் வெள்ளிகளைத் தொடாமை யென்னும் இவ்விரண்டும் சேர்த்து **தசசீல**மென்றும், இப்பத்தும் துறவிகளுக்கே உரியனவென்றும், இப்பத்தில் வியபிசரியாமை நின்றவிடத்தில் பிரமசரியம் கூறப்படுமென்றும் **தார்மிக சூத்திர**மென்னும் பௌத்தநூல் கூறும்.

௫௮. பிழைத்தவெகுளி - தவறினமையால் வந்த கோபம்.

௬௦. தப்பிய - வெட்டிய. ௬௧. மெல்லியல் - விளி.

௫௬ - ௬௨. இப்படியே, "மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை உடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை, நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி, விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே" (௨௩ : ௮௨ - ௫) என்று இராசமாதேவியை நோக்கி மணிமேகலை கூறியதாகப் பின்பு வருதல் காண்க.

௬௩. தலைவன் - கடவுள். காக்கும் - காப்பான், தப்பானென்றபடி.

**(பி-ம்.)** ௫௭ 'நீங்காத தேசத்தோர்க்கு' ௬௧ 'விராகக்கந்தல்'

அவல வெவ்வினை யென்போ ரறியார
அறஞசெய் காத லன்பினி னாயினும
மறஞசெய் துளதெனின் வல்வினை யொழியா
தாங்கவ வினைவந தணுகுங காலைத
தீங்குறு முயிரே செய்வினை மருஙகின
மீண்டுவரு பிறபபின மீளினு மீளும
ஆங்கவ் வினைகா ணாயிழை கணவனை
ஈங்கு வநதிவ விடாசெய் தொழிநத
தின்றுங கேளா யொளிஙகொடி நலலாய
மன்னவன மகற்கு வருநதுதுய ரெய்தி
மாதவ ருணாததிய வாயமொழி கேட்டுக்
காவல னின்னையுங காவலசெய தாஙகிடும
ஈடுசிறை நீககி யிராசமா தேவி
கூட வைககுங கொட்பின ளாகி
மாதவி மாதவன் மலரடி வணங்கித்

---

௬௩ - ௪. வினையைத தலைவன காககுமெனபோா அறியாரென இயைகக. செயதவன் நுகாநதாலனறி வினை தொலையாதெனறவாறு

௬௬ மறம செயதுளதெனின - பாவம செயயபபட்டிருப்பின வல வினை சுடடு ௬௮ தீங்கு - துனபம.

௭௰ அவவினை - மடையனை வெட்டியபாவம. கணவனை - உதய குமரனை

௭௰ - ௭௧ அவவினை ஈஙகுவநது உன கணவனை இவவிடா செய தொழிநததெனக

இனி, மணிமேகலைககுப பின வருவனவற்றைக காதிறபாவைத தெய வம் கூறுதல் கூறப்படும

௭௩ மகற்கு வருநது - உதயகுமரன இறநததற்காக வருநதும்

௭௪ உணாததியவன் ஒருவனாயினும உரைக்க வநதோா பலராத லின, 'மாதவருணாததிய' எனறா. வாய - உணமை

௭௫ காவல செயதாஙகிடும - சிறையில் வைப்பான

௭௬ இராசமாதேவி - பட்டததுததேவி

௭௭ கொட்பு - கொளகை. ௭௮. மாதவன - அறவணவடிகள்

(பி - ம்.) ௬௫ 'அறஞ்செயத காதலனனபின' ௬௭ 'ஆஙகவெவ வினை வநதெனநுஙகாத' ௭௩. 'வருதுயரெயதி' ௭௪ 'மாதவருரைதத', 'மாதவருணாதத' ௭௫. 'காதலிநினனையுங காவல்செய் தீஙகிடும்'

தீது கூறவவ டன்னொடுஞ் சேர்ந்து
மாதவ னுரைத்த வாய்மொழி கேட்டுக்
காதலி நின்னையுங் காவ னீக்குவள்
அரசாள் செல்வத் தாபுத் திரன்பாற்
புரையோர்ப் பேணிப் போகலும் போகுவை
போனா லவனொடும் பொருளுரை பொருந்தி
மாநீர் வங்கத் தவனொடு மெழுந்து
மாயமில் செய்தி மணிபல் லவமெனும்
தீவகத் தின்னுஞ் சேறலு முண்டாற்
றீவ திலகையிற் றன்றிறங் கேட்டுச்
சாவக மன்னன் றன்னா டடைந்தபின்

---

௭௯ தீது - மணிமேகலை சிறையில் வைக்கப்பட்டிருத்தல்

௮௦ வாய்மொழி - உண்மைமொழி, சிலப். ௧௦ ௧௯௨

௭௬ - ௮௧ இராசமாதேவி நீக்கி வைக்குங்கொட்பினளாகிக்கேட்டு நின்னைக் காவல் நீக்குவளெனக்

௮௨. ஆபுத்திரனென்றது புண்ணியராசனை, இது, "நாக புரமிது நன்னக ராள்வோன். பூமிசந் திரன்மகன் புண்ணியராசன்" (௨௪ ௧௬௯ - ௭௦) என்று தருமசாவகன் மணிமேகலைக்குக் கூறியவாற்றா லுணரப்படும், புண்ணியராசனை ஆபுத்திரனென்றே இந்நூலிற் பெரும்பாலும் வழங்குவர்

௮௩. புரையோர் - சங்கத்தார், புரை - உயர்ச்சி. போகலும் போகுவை - போதலையுஞ் செய்வை

௮௪ பொருளுரை - தருமபதம், "பொய்யில் புலவன் பொருளுரை" (மணி. ௨௨ ௬௧) என்றது, நாகபுரத்தின் பக்கத்ததாகிய சோலையிலுள்ள தருமசாவகன் ஆபுத்திரனுக்குக் கூறும் உபதேசமொழிகளைக் குறித்து நின்றது பொருந்தி - கேட்டு அம்மொழிகளாவன, "அறனு மறனு மனித்தமு, நித்தத், திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கிலும், சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியும், ஆரிய னமைதியும்" (௨௫ ௩ - ௬) என்பனவைகள்

௮௫ - ௭ மணிமேகலை நாகபுரத்திலிருந்து ஆகாயவழியே போந்து மணிபல்லவத்தை யடைந்தாளென்றும், ஆபுத்திரன் கப்பல்வழியே வந்து அத்தீவத்தை அடைந்தானென்றும், இந்நூல், ௨௫ ௨௯ - ஆம் அடி முதலியவற்றாலும், ௧௨௪ - ஆம் அடிமுதலியவற்றாலும் விளங்குதலால், 'வங்கத்தவ னொடு மெழுந்து' என்பதற்குப் பின்பு கப்பலேறி மணிபல்லவத்தை யடைவோனாகிய ஆபுத்திரனிடத்தினின்று நீங்கி ஆகாயவழியே யெழுந்தென்ப பொருள்கொண்டு எழுந்து சேறலுமுண்டென வியைக்க வங்கத்தவனொடு மென்பது ஐந்தாவதன் மயக்கம்.

௮௯ சாவகமன்னன் - சாவக நாட்டரசனாகிய ஆபுத்திரன்

(பி - ம்.) ௮௩. 'போகக்கலும் போக்கும்' 'போகினும் போகுவை' ௮௫ 'அவனொடுமேறி'

ஆங்கத் தீவ மவிட் டருந்தவன் வடிவாய்ப்
பூங்கொடி வஞ்சி மாநகர் புகுந்தவை
ஆங்கந் நகரத் தறிபொருள் வினவும்
ஓங்கிய கேள்வி யுயர்ந்தோர் பலரால்
இறைவ னெங்கோ னெவ்வுயி ரனைத்தும்
முறைமையிற் படைத்த முதல்வனென் போர்களும்
தன்னுரு வில்லோன் பிறவுருப் படைப்போன்
அன்னோ னிறைவ னாகுமென் போர்களும்
துன்ப நோன்பித் தொடர்ப்பா டறுத்தாங்
கின்ப வுலகுச்சி யிருத்துமென் போர்களும்
பூத விகாரப் புணர்ப்பென் போர்களும்
பலவேறு சமயப் படிற்றுரை யெல்லாம்
மலவியங் கோதை கேட்குறு மந்நாள்
இறைவனு மில்லை யிறந்தோர் பிறவார்
அறனோ டென்னையென் றறைந்தோன் றன்னைப்
பிறவியு மறவியும் பெற்றியி னுணர்ந்த
நறுமலர்க் கோதை யெள்ளினள் நகுதி

---

௯௦ தீவம் - மணிபல்லவம்

௯௧ வஞ்சிமாநகர் - சேரர்களுடைய இராசதானி, மலைநாட்டிலுள்ளது

௯௪-௫ படைத்த முதல்வனே இறைவன் எங்கோன் என்போர்களுமெனக். இவர்கள் பிரஹ்மவாதிகள், "பேருலகெல்லாம் பிரமவாதி யோர், தேவனிட்ட முட்டை யென்றனன்" (உ௭ ௯௬-௭) என்று வருதல் காண்க இவர்களை ஹிரணிய கருப்பவாதிகளென்றும் கூறுவர்

௯௬-௭ என்போர்கள் - அத்துவைத வாதிகள்

௯௮ நோன்பு - தவங்கள் தொடர்ப்பாடு - இந்தப் பந்தங்கள்

௯௮-௯ நோன்பு அறுத்து இருத்துமென்போர்கள் - காமப்ரஹ்ம வாதிகள்

௧௦௦ புணர்ப்பென்போர்கள் - பூதவாதிகள்

௯௪-௧௦௦ இவ்வடிகளிற்கூறிய சமய இலக்கணங்களுட் சிலவும், இன்னும் பலவும் இந்நூல் உ௭-ஆம் காதையால் விளங்க வுணரப்படும்

௧௦௧ படிற்றுரை - பொய்ம்மொழி

௧௦௪. அறனொடு என்னை - தருமத்தால் வரும் பயன்யாது? அறைந்தோன் - பூதவாதி

௧௦௫ அறவி - தருமத்தோடு பொருந்தியவழி

௧௦௬ எள்ளினை நகுதி - இகழ்ந்து சிரிப்பாய்.

(பி-ம்.) ௯௬ 'தானுருவில்லோன்' ௯௮. 'நோன்பிற்றொடர்ப்பாடு' ௧௦௩ 'இல்லைபிறவிருந்தோர் பிறவார்'

எள்ளினை போலு மிவ்வுரை கேட்டிங்
கொள்ளிய துரையென வுன்பிறப் புணர்த்துவை
ஆங்குநின் றெழுந்த வருந்தெய்வ மயக்கக்
காமபன் தோளி கனாமயக் குற்றனை
என்றவ னுரைக்கு மிளங்கொடி நல்லாய்
அன்றென் றவன்முன் னயர்ந்தொழி வாயிலை
தீவினை யுறுதலுஞ் செத்தோர் பிறத்தலும்
வாயே யென்று மயக்கொழி மடவாய்
வழுவறு மரனு மண்ணுங் கல்லும்
எழுதிய பாவையும் பேசா வென்ப
தறிதலு மறிதியோ வறியாய் கொல்லோ
அறியா யாயி னாங்கது கேளாய்
முடித்த வருஞ்சிறப் பின்மூ தூர்யாங் கணும்
கொடித்தேர் வீதியுந் தேவர் கோட்டமும்
முதுமர விடங்களு முதுநீர்த் துறைகளும்
பொதியிலு மன்றமும் பொருந்துபு நாடிக்
காப்புடை மாநகர்க் காவலுங் கண்ணி
யாப்புடைத் தாக வறிந்தோர் வலித்து
மண்ணினுங் கல்லினு மரத்தினுஞ் சுவரினும்
கண்ணிய தெய்வதங் காட்டுநர் வகுக்க
ஆங்கத் தெய்வத மவ்விடம் நீங்கா

---

கoச - எ அன்றந்தோன் றனனை இவ்வுரைகேட்டு எள்ளினை நகுதி போலும்

ககஉ அயர்ந்தொழி வாயிலை - மறந்தொழியாய்

ககங மணி. உக ககூ - உo

ககச வாயே - உண்மையே ககரு - சு மணி. உக கஉரு - சு

ககஎ அறிதலுமறிதியோ - அறிதலும் செய்தியோ

கஉo தேவர் கோட்டம் - தேவர் கோயில்.

கஉக முதுமரம் - பழையமரம்

கஉங. காவலுங்கண்ணி - காவலையுங் கருதி

கஉச யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக வலித்து - எண்ணி

கஉசு தெய்வதங்காட்டுநர் - தெய்வதத்தை நிறுத்துவோர்

(பி - ம்.) கoஎ 'போலுமெனனுரை கேட்டிங்கு' கoஅ 'பிறப் புரைக்குவை' ககo 'காமபிணைத்தோளி' ககஉ 'அன்றவன்றனமுன்' ககங 'சென்றோ' ககச 'மடக்கொடி மடவாய்' ககசு 'வரும்பிறப் பின' கஉச 'அறிந்தோரியற்றி' கஉசு 'கண்ணியவுருவங் காட்டுநர் வகுத்த'

பங்கயச் சேவடி விளக்கிப் பான்மையின்
அங்கவாக் கறுசுவை நால்வகை யமிழ்தம்
பாத்திரத் தளித்துப் பலபல சிறப்பொடு
வேத்தவை யாரொடு மேத்தின னிறைஞ்சலிற்
பிறப்பிற் றுன்பமும் பிறவா வின்பமும்
அறத்தகை முதல்வ னருளிய வாய்மை
இன்ப வாரமு திறைவன் செவிமுதல
துன்ப நீங்கச் சொரியு மந்நாள்
நின்பெருந் தாதைக் கொன்பது வழிமுறை
முன்னோன் கோவலன் மன்னவன் றனக்கு
நீங்காக் காதற் பாங்க னாதலிற்
றாங்கா நல்லறந் தானுங் கேட்டு
முன்னோர் முறைமையிற் படைத்ததை யன்றித்
தன்னா னியன்ற தனம்பல கோடி
எழுநா ளெல்லையு ளிரவலர்க் கீத்துத்
தொழுதவம் புரிந்தோன் சுகதற் கியற்றிய

---

௧௧௯ அறுசுவையாவன, கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு எனபன குறள், ௪௨அ, பரிமேல். நாலவகையமிழ்த மாவன உண்பன, தினபன, நக்குவன, பருகுவன, மணி. ௨அ ௨௪௧ - ௨ அமிழ்தம - உணவு

௧௧௩ - ௮ காவலன், விரும்பி எத்தி விளக்கி அளித்து எத்தி இறைஞசினனக

௧௨0 அறத்தகை முதல்வன - புத்தன், தருமராசனெனறவாறு வாய்மை - நாலவகைச சத்தியம

௧௧௯ - ௨0 மணி. ௨ ௯௪ - ௭, ௩0 ௧௮௯ - ௮

௧௨௧ இறைவன செவிமுதல - அரசனுடைய செவியிடத்தே

௧௨0 - ௨௧ வாயமையாகிய அமுதை.

௧௨௩ நினபெருந்தாதைக்கு - உன் தந்தையாகிய கோவலனுக்கு

௧௨௭ முறைமையின - நலவழியாலே முனனோர தேடிவைதத பொருளையலலாமல

௧௨௯ எழுநாளெனறல் ஒருமரபு

௧௩0 புரிந்தோன - முறகூறிய முன்னோனாகிய கோவலன் சுகதற்கு - புததனுக்கு

(பி - ம்.) ௧௧௫ 'விளக்கிய பானமையின' ௧௧௯ 'அமிர்தம' ௧௧௮ 'வேநதனிறைஞசலின' ௧௨௨ 'சொரியு முனனாளில' ௧௨௯ 'எலலையிர வலாககளிததது'

வானோங்கு சிமையத்து வாலொளிச் சயித்தம்
ஏனோர்க் கெல்லா மிடாக்கெட வியன்றந்
கண்டுதொழு தேத்துங் காதலின் வந்தித்
தண்டாக் காட்சித் தவத்தோ ரருளிக்
காவிரிப் பட்டினங் கடல்கொளு மென்றவத்
தூவுரை கேட்டுத் துணிந்திவ ணிருந்த
தின்னுங் கேளாய் நன்னெறி மாதே
தீவினை யுருப்பச் சென்றநின் றுதையும்
தேவரிற் றோற்றிமுற் செய்தவப் பயத்தால்
ஆங்கத் தீவினை யின்னுந் துய்த்துப்
பூங்கொடி முன்னவன் போதியி னல்லறம்
தாங்கிய தவத்தாற் றுன்றவந் தாங்கி
காதலி தன்னொடு கபிலையம் பதியில்

---

௧௩௧ சிமையத்து - மலையில் வாலொளிச்சயித்தம் - வெள்ளிய ஒளியையுடைய ஆலயம் சயித்தம் - சைத்தியமென்னும் வடமொழிச் சிதைவு, இது சேதியமெனவும் வழங்கப்பெறும் மணி உஅ க௭௫

௧௩௨ ஏனோர்க்கு - இவ்வுலகத்தோர்க்கு, "ஏனோர்மடிவில" (சிலப். பதி ௫௩, உ௩ க௭௬), "ஏனோர்க் குரைப்பாம் பதிகத்துப் பயன்றவாறே" (சீவக. உ௬)

௧௩௪. தண்டாக்காட்சி - நீங்காத அறிவு

௧௩௩-௪ ஈசதவத்தோரென்றது ஆண்டுள்ள முனிவர்களை

௧௩௬ யான் இவ்விடத்திருந்தது தூவுரை கேட்டமையாலேயே யென்க

இதுகாறும், தான் துறந்ததற்கும் வஞ்சிநகரடைந்ததற்கும் ஆண்டே வதிவதற்கும் காரணங்கூறிய மாசாத்துவான், மேலே பெரியோர் தனக்குக் கூறிய செய்தி முதலியன கூறுவான்

௧௩௮ சென்ற - கொலையுண்டிறந்த.

௧௩௯ முற்செய்த தவப்பயத்தால் தேவரிற் றோற்றியென்க

௧௪௦ ஆங்கத்தீவினை - முற்கூறிய தீவினையின் பயனை துய்த்து - அனுபவித்து

௧௪௧ பூங்கொடி விளி முன்னவன் - புத்தன்

௧௪௩ காதலி - கண்ணகி கபிலையம்பதி - கபிலநகர், இது புத்தன் பிறந்த இடம், கபிலவஸ்துவென்றுங் கூறப்படும்

(பி-ம்.) ௧௩௧-௨ 'வாலவளைச் சயிந்தம், மேனோர்க் கெல்லா மடாக்கெட' ௧௩௩ 'காதலன்வந்து' ௧௩௫-௬ 'மென்ற, தூழுரைகேட்டுத் துணிந்தியா னிருந்தேன்' ௧௩௮. 'தீவினையிறுப்ப' ௧௩௯. 'தோற்றமுன்' ௧௪௧ 'போதியா னல்லறம்'

நாத னல்லறங் கேட்டுவீ டெய்துமென்
றறப்பதக் கிளவி யறிந்தோர் கூறச்
சொற்பய னுணர்ந்தேன் றோகை யானும்
அந்நா ளாங்கவ னறநெறி கேட்குவன்
நின்னது தன்மையந் நெடுநிலைக் கந்திற் றுன்னிய
துவதிக னுரையிற் றுணிந்தனை யன்றே
தவநெறி யறவணன் சாற்றக் கேட்டனன்
ஆங்கவன் றானுநின் னறத்திற் கேதுவ
பூங்கொடி கச்சி மாநக ராதலின்
மற்றம் மாநகர் மாதவன் பெயர்நாட்
பொற்றொடி தாயரு மப்பதிப் பட்டனர்
அன்னதை யன்றியு மணியிழை கேளாய்
பொன்னெயிற் காஞ்சி நாடுகவி னழிந்து
மன்னுயிர் மடிய மழைவளங் கரத்தலின்
அந்நகர் மாதவர்க் கையம் இடுவோர்

---

கசச. நாதன் - புத்தன் எய்தும் - அடைவான்.
கசரு கிளவி - சொல்
கசகூ பயன் - பிரயோசனம். தோகை விளி
கசஎ அறநெறி - புத்தன் உபதேசிக்கும் அறவழிகளை
கசகூ - எ யானும் அறநெறி கேட்குவன்
கசஅ நின்னது தன்மை - உனது பிற்காலச் செய்தியை
கசஅ - கூ. நினது தன்மையைத் துவதிகனுரையால் தெளிந்தாயன்றோ
கருo (கந்திற்பாவையால் நீ அறிந்தாயென்பதை) அறவணவடிகள் சொல்லக்கேட்டேன்
கருக அவன்றானும் - அறவணவடிகளும் ஏது - ஏதுநிகழ்ச்சிக்குரிய இடம்
கருஉ பூங்கொடி விளி
கருச பொற்றொடி தாயரும் - உன்னுடைய தாயராகிய மாதவியும் சுதமதியும்
கருந - ச பெயர்நாளில் தாயரும் உடன்சென்றார்
கருகூ காஞ்சிநாடு - காஞ்சி நகரத்தையுடைய நாடு
கருஎ பூ. மணி. கக அந மடிய - இறக்க கருஅ ஐயம் - பிச்சை.
கருகூ - எ மணி. உக கசஎ - அ.
(பி - ம்.) கசரு - கூ 'கழறச்சொற்பய' கசஎ 'அறநெறிகடவேன்' கசகூ 'துணிந்தனை தவநெறி' கருச. பொற்றொடித்தாயரும்" கருரு 'அன்னதன்றியும்'

இன்மையி னிந்நக ரெய்தினர் காணாய்
ஆருயிர் மருந்தே யந்நாட் டகவயிற்
காரெனத் தோன்றிக் காத்தனின் கடனென
அருந்தவ னருள வாயிழை வணங்கித்
திருந்திய பாதத்திரளு செங்கையி னேந்திக்
கொடிமதின் மூதூர்க் குடக்கணின் றெழுங்கி
வடதிசை மருங்கின் வானத் தியங்கித்
தேவர் கோமான் காவன் மாநகர்
மண்மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய
பொன்னகர் வறிதாப் புலவென் றுயது
கண்டுளங் கசிந்த வொண்டொடி நங்கை
பொற்கொடி மூதூர்ப் புரிசை வலங்கொண்டு
நடுநக ரெல்லை நண்ணின ளிழிந்து
தொடுகழற் கிள்ளி துணையிளங் கிள்ளி
செம்பொன் மாச்சினைத் திருமணிப் பாசடைப்
பைம்பூம் போதிப் பகவற் கியற்றிய

---

௧௫௯ எய்தினர் - (அம்மாதவர்) வந்தார். ௧௬௦ மருந்தே விளி.
௧௬௦-௬௧ மணி. ௨௧ ௧௫௭-௮.

௧௬௧ காரை உவமைகூறினார், இவள் கைம்மாறு கருதாமல் அளித்தலின்; "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள், ௨௧௧), "வந்து தோன்றினன் மாமழை போலென" (௨௮ : ௧௮௩) என்பாரின்.

௧௬௨ மாசாத்துவானை 'அருந்தவன்' என்றார், துறவு பூண்டமையின்.

௧௬௪ மூதூர்க்குடக்கண் - பழமையாகிய வஞ்சி நகரத்தின் மேற்றிசைக்கண்ணே. ௧௬௬ மாநகர் - அமராவதி.

௧௬௮ பொன்னகர் - காஞ்சிநகர். வறிதாப் புலவென்றுயது - செல்வமின்றிப் பொலிவிழந்திருந்ததை.

௧௬௯ நங்கை - மணிமேகலை. ௧௭௦ புரிசை - மதில்.

௧௭௨ தொடுகழற் கிள்ளியின் தம்பியாகிய இளங்கிள்ளி; கிள்ளி - சோழன்.

௧௭௩ சினை - கிளை. திருமணி - அழகிய மரகதமணி. பாசடை - பசிய இலை.

௧௭௩-௪. இவ்வடிகளிற் கூறியது போலவே, "பவளச் செழுஞ்

(பி-ம்.) ௧௫௯-௬௦ 'காணாவாருயிர்' ௧௬௨ 'அருந்தவரருள' ௧௬௭ 'மிசைகிடந்தன வளந்தலை மயக்கிப்' ௧௬௮ 'வறிதாயப்புல்' ௧௭௦-௭௧ 'புரிசை புலங்கொண்டு, நடுகரெல்லை நண்ணநள்ளிழிந்து'

சேதியந் தொழுது தென்மேற் காகத்
தாதணி பூம்பொழி லொன்சென் றெய்தலும்
வையங் காவலன் றன்பாற் சென்று
கைதொழு திறைஞ்சிக் கஞ்சுக னுரைப்போன்
கோவலன் மடந்தை குணவதம் புரிந்தோள்
நாவலந் தீவிற் றானணி மிக்கோள்
அங்கையி னேந்திய வமுத சுரபியொடு
தங்கா திப்பதித் தருமத வனத்தே
வந்து தோன்றினள் மாமழை போலென
மந்திரச் சுற்றமொடு மன்னனும் விரும்பிக்
கந்திற் பாவை கட்டுரை யெல்லாம்
வாயா கின்றென வந்தித் தேத்தி
ஆய்வளை நல்லா டன்னுழைச் சென்று
செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ

---

சுடர் மரகதப் பாசடைப், பசும்பொன் மாச்சினை விசும்பகம் புதைக்கும், போதி" (வீர. யாப்பு ௧௧, உதாரணம்) என்று மகாபோதியை இங்ஙனம் சிறப்பித்துக் கூறியிருத்தல் காண்க மகாபோதி பொன்மயமாயிருந்ததென்பதுபற்றிப் பௌத்தர் இக்காலத்தும் அரசமரத்தைப் பொற்றகட்டால் அலங்கரித்து வழிபடுவர்

௧௭௫ சேதியம் - கோயில்

௧௭௨ - ௫ துணையிளங்கிள்ளி பகவற்கியற்றிய சேதியத்தைத் தொழுது

௧௭௭ வையங்காவலன் - துணையிளங்கிள்ளி

௧௭௮ கஞ்சுகன் - சட்டையிட்ட பிரதானி

௧௭௯ 'கோவலன் மடந்தை' என்பது முதலியன கஞ்சுகன் கூற்று மடந்தை - மகள்

௧௮௨ தருமதவனம் - தருமத்தைக் கொடுக்கும் வனம்

௧௮௩ மழைபோல் வந்து தோன்றினளென்று கஞ்சுகன் கூற

௧௮௪ மந்திரச்சுற்றம் - மந்திரிகள்

௧௮௫ கந்திற்பாவையென்றது காஞ்சியில் ஒரு தூணில் உறையும் தெய்வத்தை

௧௮௬ வாயாகின்றென - உண்மையாகின்றதென்று வந்தித்தேத்தியது மேற்கூறிய கந்திற்பாவையை

௧௮௭. நல்லாள் தன்னுழை - மணிமேகலையிடத்து

௧௮௮. 'செங்கோல்' என்பதுமுதல் துணையிளங்கிள்ளி கூற்று

௧௮௮. மணி. ௭ ௮ - ௧௦.

(பி - ம்.) ௧௭௫ 'சேதிமந்தொழுது' ௧௮௨. 'தருமதாவனத்தே' 'தருமசாாவனத்தே' ௧௮௮ 'தெய்வம் பிழைத்தோ'

கொங்கவிழ் குழலார் கற்புக்குறை பட்டோா
நலததனை நலலாய் நன்றெடெலலாம
அலததற் காலை யாகிய தறியேன்
மயஙகுவென முன்னரோா மாதெய்வந் தோன்றி
உயஙகா தொழிநின் னுயா தலைத தாலோா
காரிகை தோன்று மவளபெருங கடிஞையின்
ஆருயிர மருநதா லகனில முய்யும
ஆஙகவ ளருளா லமராகோ னேவலில
தாஙகா மாரியுந தானனி பொழியும
அன்று ளிந்த வகனகா புகுந்த
பின்று ணிகழும பேரறம பலவாற
காரவறங கூறினு நீரவறங கூராது
பாரக வீதியிற் பண்டையோ ரிழைதத
கோமுகி யென்னுங கொழுநீ ரிலஞ்சியொடு
மாமணி பலலவம வநத தீஙகெனப
பொயகையும பொழிலும புனைமினென் றறைநதத்
தெய்வதம போயபிற செய்தியா மமைதத
திவவிட மெனறே யவவிடங காட்டவத

---

கசுக அலததறகாலை - வறுமைககாலம அறியேன - அறியேனுகி
கஅஅ - ச மணி. கரு சசு - ருo
கசுரு உயஙகாதொழி - வருநதவேணடா
கசுச தோனறும - தோன்றுவாள கடிஞை - பிசசைபபாததிரம
கசுரு ஆருயிாமருநது - சோறு கசுஎ. மாரி - மேகம
கசுசு - எ அவளருளால கோன ஏவலிற பொழியும
கசுஅ அனறுள் - அமமஙகை கசுக பினனுள - பிறகாலதது
உ00 காரவறஙகூறினும - மழைபெயயாதொழியினும கூராது
உ0க பணடையோரிழைதத - முனனோா செயத. (முற்று
உ0உ இலஞ்சி - பொயகை
உ0ச புனைமின - அலஙகரிததுச செயமின், பிறரையும உளப்படுத திக கூறியது இது
உ0சு (துணையிளஙகிள்ளி) காட்ட
(பி - ம்.) கசுஉ 'முனனரோமா தெயவாந' உ0ச - ரு 'பொதியிலும புனைமினென்றறைநத, தெயவதம்'

தீவகம் போன்ற காவகம பொருந்திக
கண்டோளஞ் சிறநத காரிகை நலலாள்
பண்டைப பிறப்பினைப பானமையிற் காட்டிய
அங்கப் பீடிகை யிதுவென வறவோன்
பங்கயப பீடிகை பானமையின் வகுத்தத
தீவ திலகை யுந திருமணி மேகலா
மாபெருந் தெய்வமும வந்தித் தேத்துதற
கொந்த கோயி லுளத்தகப் புனைந்து
விழாவுஞ் சிறப்பும வேந்த னியற்றத
தொழுதகை மாதர் தொழுதன ளேத்திப்
பங்கயப பீடிகைப பசிப்பிணி மருந்தெனும
அங்கையி னேந்திய வமுத சுரபியை
வைத்தநின றெல்லா வுயிரும வருகெனப
பைத்தர வல்குற பாவை தன கிளவியின
மொய்த்த மூவறு பாடை மாக்களிற
காணா ரேளார கான்முட மானோர
பேணா மாக்கள பேசார பிணித்தோர
படிவ நோன்பியர பசிநோ யுற்றோர்

---

உ0௬ தீவகம - மணிபல்லவம. காவகம - சோலையினுள்ளே

உ௧0 அங்கபபீடிகை - மணிபல்லவத்திருந்த புத்த பீடிகை. அற வோன - புத்தன

உ௧௧ வகுத்தது - செய்தது.

உ௧௪ உளத்தக - நினைத்தற்குத்தக உ௧௬ மாதா - மணிமேகலை

உ௧௭ பங்கயபபீடிகை - பாதபீடிகையில்.

உ௧௯ வருகென - வருகவென்று மணிமேகலை சொல்ல

உ௧௭ - ௯ பீடிகையில அமுதசுரபியை வைத்தெனக

உ௨௨ காணார் - குருடர் கேளார் - செவிடர் அவயவஹீனர்க்கு இரங்குதலைப பத்து நிஷ்டைகளுள் ஒன்றென்பர்

உ௨௩ பேணுமாக்கள் - பாதுகாக்கப் படாதமாக்கள் என்றது அகதிகளை

உ௨௨ - ௩ மணி. க௩ ௧௧௧ - உ.

உ௨௪. படிவநோன்பியர் - தவவேடத்தையும் நோன்பையுமுடைய வர்.

(பி - ம்.) உ௧௩. 'மாதெய்வந்தனனையும' உ௧௬. 'தொழுதனளேத்தி' உ௧௯ 'எல்லாவகையிரும' உ௨௦. 'தன்கையின்'

மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
பன்னூ றாயிரம் விலங்கின் றொகுதியும்
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி
அருந்தியோர்க் கெல்லா மாருயிர் மருந்தாய்ப்
பெருந்தவர் கைப்பெய் பிச்சையின் பயனும்
நீரு நிலமுங் காலமுங் கருவியும்
சீர்பெற வித்திய வித்தின் விளைவும்
பெருகிய தென்னப் பெருவளஞ் சுரப்ப
வசிதொழி லுதவி வளந்தந் ததுவெனப்
பசிப்பிணி தீர்த்த பாவையை யேத்திச்
செல்லுங் காலைத் தாயர் தம்முடன்
அல்லவை கடிந்த வறவண வடிகளும்
மல்லன் மூதூர் மன்னுயிர் முதல்வி
நல்லறச் சாலை நண்ணினர் சேறலும்

---

௨௨௫ மடிநல்கூர்ந்த மாக்கள் - உடுத்தற்கு ஆடையுமின்றி வறுமையுற்ற மாக்கள் சோம்புதலால் வறுமையுற்ற மாக்களெனினுமமையும்

௨௨௯ பெருந்தவர் கைப்பெய் பிச்சையின் பயன் பெருகுதலை, "அறப்பயனும், தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்து விடும்" (நாலடி. ௩௮) என்பதனாலுணர்க மணி. ௧௭ ॥ - ௪

௨௩௧ வித்திய வித்து - விதைத்த விதை

௨௩௨ (அப்பாத்திரம்) சுரப்ப

௨௨௯ - ௩௨ பிச்சையின் பயனும் வித்தின் விளைவும் பெருகியதென்னச் சுரப்ப

௨௩௩ வசி - மழை; மணி. ௧ ௭௧

௨௩௪ பாவையை - மணிமேகலையை. ஏத்தி - மேற்கூறிய காணார் முதலியோர் துதித்து

௨௩௫ காலை - காலத்தில் தாயர் தம்முடன் - மாதவி சுதமதி யென்னும் இருவருடன்

௨௩௬ அல்லவைகடிந்த - அறமல்லாதவற்றை நீக்கிய

௨௩௭ உயிர்முதல்வி - மணிமேகலை.

௨௩௮ அறச்சாலை - தரும சாலையை.

௨௩௫ - ௮ தாயர் தம்முடன் அறவணவடிகளும் உயிர்முதல்வியின் அறச்சாலையை நண்ணுதலும்

(பி - ம்.) ௨௨௫. 'நல்கூர்ந்தமக்களியாவரும்' ௨௨௮ - ௯ 'மருந்து, பெருந்' ௨௩௩ 'தொழிலுதவி வந்ததுவென்ன'

சென்றவர் தம்மைத் திருவடி வணங்கி
நன்றென விரும்பி நல்லடி கழீஇ
ஆசனத் தேற்றி யறுசுவை நால்வகைப்
போனக மேந்திய பொழுதினிற் கொண்டபிற
பாசிலைத் திரையலும் பளிதமும் படைத்து
வாய்வ தாகவென் மனப்பாட் டறமென
மாயைவிட் டிறைஞ்சினள் மணிமே கலையென்.

உ அ.—கச்சிமாநகர்புக்ககாதை முற்றிற்று.

---

உ௩௯ சென்று வணங்கி. உ௪0 கழீஇ - விளக்கி.

உ௪உ பொழுதினில் - காலம்பெற.

உ௩௯ - ௪உ மணி. உ அ ௧௧௪ - ௭

உ௪௩ திரையல் - வெற்றிலை பளிதம் - பச்சைக் கருப்பூரம்

உ௪௪ வாய்வதாக - தப்பாது பலித்திடுக

உ௪௫ மாயை - மாய உருவம், என்றது அவள் கொண்ட ஆடவர் உருவத்தை.

௧ - உ௪௫ மணிமேகலை, பேரூர்ந்து கடந்து வாயில் குறுகினள் புகுக் கண்டு மகிழ்வுற்றுப் பள்ளிபுக்குப் பணிந்து சொல்லினளாதலின், அருந்தவன், 'நின்னைக் கண்டது என் நல்வினைப் பயன்கொல்' என்று கூறி, 'காத்தல் நின்கடன்' என அருள, ஆயிழை வணங்கி ஏந்தி ஓங்கி இயங்கி வலங்கொண்டு இழிந்து தொழுது சென்றெய்தலும், கஞ்சுகனுரைப்போன, 'வந்து தோன்றினள்' என, மன்னனும் விரும்பி ஏத்திச்சென்று காட்ட நல்லாள் பொருந்தி வகுத்துப் புனைந்து ஏத்தி வைத்து, 'வருக' என, காணார் முதலியோரும் விலங்கின தொகுதியும் மன்னுயிரடங்கலும் வந்து மண்டி ஏத்திச் செல்லுங்காலையில் தாயர் தம்முடன் அறவணவடிகளும் நண்ணினர் சேறலும் மணிமேகலை வணங்கி விரும்பிக் கழீஇ ஏற்றி ஏந்திய படைத்து விட்டு இறைஞ்சினளென வினைமுடிவு செய்க

(பி - ம்.) உ௩௯. 'திருவடிதொழுது' உ௪0. 'நல்லடி விளக்கி', 'நல்லடிதழீஇ' உ௪உ 'ஏந்தப்'

இருபத்தொன்பதாவது

# தவத்திறம்பூண்டு தருமங்கேட்ட காதை

---

[இருபத்தொன்பதாவது மணிமேகலை, காஞ்சிமாநகர்க்கட்சென்ற பின்னர் அறவணரடிகளும் தாயருஞ்செல்ல அவரைக்கண்டு இறைஞ்சித் தருமங்கேட்ட பாடடு]

---

இறைஞசிய விளஙகொடி தனனை வாழததி
அறநதிகழ நாவி னறவண னுரைப்போன்
வெனவேற் கிள்ளிககு நாகநா டாள்வோன்
தன்மகள பீலி வளை தான் பயநத
புனிற்றிளங குழவியைத தீவகம பொருநதித
தனிககலக கமபளச செடடிகைகத தரலும்
வணஙகிக கொணடவன் வஙக மேறறிக
கொணாநதிடு மநநாட் கூரிரு ளியாமத
தடைகரைக கணிததா வமபி கெடுதலும
மரக்கலங கெடுததோன் மைநதனைக காணு

---

௧ இளஙகொடி தனனை - மணிமேகலையை

௩ வென் - வென்றி கிள்ளி - நெடுமுடிககிள்ளி நாகநாடாள வோன - வளைவணன

௪ மகளாகிய பீலிவளை பயநத - பெறற

௫ குழவியை - குழநதையை தீவகம - மணிபல்லவம

௬ தனிககலம - ஒறறைககப்பல

௩ - ௬ பீலிவளை, தான கிள்ளிககுப் பயநத குழவியைத தீவகத தைப் பொருநதிக கமபளச செட்டியின கையில தரலும

௭ அவன - கமபளசசெட்டி.

௮ கூரிருள யாமதது - மிகக இருளையுடைய இடையிரவில்

௯ அணிததா - சமீபமாக அமபி - கப்பல்.

௧௦ கெடுததோன் - கமபளசசெட்டி மைநதனை - குழந்தையை

(பி - ம்.) ௧. 'இறைஞசிய னிறவிளங' ௫. 'தீபமபொருநதி'

தரைசற் குணாத்தலு மவனயர் வுற்று
விரைவனன் றேடி விழாக்கோண் மறப்பத்
தனவிழாத தவிர்தலின் வானவர் தலைவன்
நினனுயிாத தந்தை நெடுங்குலத் துதித்த
மன்னுயிர் முதலவன் மகர வேலையுள்
முன்னிய வங்க முங்கிக் கேடுறப
பொன்னி னூசி பசுங்கம பாத்துத
துன்னிய தென்னத தொடுகட லுழந்துழி
எழுநா ளெல்லை யிடுக்கண்வந் தெய்தா
வழுவாச சீலம வாயமையிற கொண்ட
பானமையிற றனது பாண்டு கமபளம
தானடிக் குறற தன்மை நோக்கி
ஆதி முதலவன் போதி மூலத்து
நாத னவோ னளிநீர்ப பரபபின்

---

கக அரைசறகு - நெடுமுடிக்கிள்ளிககு அயாவுறறு - வருந்தி

கஉ விரைவனன - விரைபவனாகி தேடி - குழந்தையைத்தேடுதலால விழாககோள - இந்திரவிழாக கொள்ளுதலை

கங வானவாதலைவன - இந்திரன

கச நினனுயிாததநதை - கோவலன்

கரு மனனுயிர் முதலவனெனறாா, அருளறம் பூண்டோனாதலின.

கசு முங்கி - முழுகி

கஎ ஊசி வணிகனுககும், பசுங்கம்பளம் கடலுககும் உவமம்

கஅ உழந்துழி - வருந்தி நீந்தியபொழுது

கரு-கூ எழுநாளெல்லை உயிர் முதலவன் தொடுகடலுழந்துழி யெனக (மணி. உஅ கஉங-ங0), "நணணுவழி யின்றி நாளசில நீந்த" (கரு ஙக) எனறாா சிலப்பதிகாரத்தும்.

'எழுநாள' (ககூ) எனபதைப பினவரும் 'கொண்ட' (உ0) என்பதனோடு கூட்டினும பொருந்தும்

உ0 சீலத்தை நால்வகை வாய்மையுடன் கொண்ட.

உக பாணடு கமபளம - வெளளைக கமபளமாகிய ஆசனம

உக-உ மணி. கச உஅ-கூ

உங-ச ஆதி முதலவனாகிய நாதனை கற்பாலோன, என்றது, முற்கூறிய வணிகனை, இங்ஙனம் புத்தனாகற பாலோரைப் போதிசத்துவரென பா நளி - பெருமை

(பி-ம்.) கக 'அரசாககுரைத்தலும' கசு. 'முருங்கிக் கேடுற' கஅ. 'கடனீந்துழி' ககூ. 'எலலையுருவந்தெய்த' உக-உ 'கம்பளத் தானடிக குறற' உங 'அதிரமுதல்வன' உச-ரு. 'நாதநாவான ... நீர பரபபி, யெவ்வம்'

எவ்வமுற் றான்றன தெவ்வந் தீரெனப்
பலவக தெடுத்துப் பாரமிதை முற்றவும்
அறவர சாளவு மறவாழி யுருட்டவும்
பிறவிதோ றுதவும் பெற்றிய ளென்றே
சாரண ரறிந்தோர் காரணங் கூற
அந்த வுதவிக் காங்கவள் பெயரைத்
தந்தையிட் டனனினத் தையனின் றுறவியும்
அன்றே கனவி னனவென வுரைந்த
மென்பூங் கோனிமணி மேகலா தெய்வம்
என்பவட் கொப்ப வவனிடு சாபத்து

---

௨௪ - ௫ நாகனுவோன் கடலில் துன்பமுற்றான், அவனது துன்பத்தைத் தீர்ப்பாயென்று மணிமேகலா தெய்வத்திற்கு இந்திரன் சொல்ல

௨௬ பாரமிதை, மணி. ௨௬ ௪௫. பாரமிதைபத்தும் உயிருறுப்புப பொருணோசிவகையான முப்பதாமென்பா, "அருணெறியாற பாரமிதை யாறைந்து முடனடக்கிப, பொருண்முழுதும் போதியின்கீழ முழுதுணர்ந்த முனிவரனறன் அருண்மொழியா னல்வாய்மை யறிந்தவரே பிறப்பறுப்பார், மருணெறியாம பிறநூலு மயக்கறுக்கு மாறுளதோ" (சிந்தாந்தத்தொகை சிவ சித்தி. பரபக்கம், சௌத்ராந்திகன்மதம் ௨, ௩ாம்) பாரமிதை யென்பதற்குக் கரையை அடைவதென்று பொருள் ஈண்டுக் கூறிய தானமுதலியபத்தும் சிறப்புப்பெற்ற உண்மையின் புத்தன் தசபல னென்று வழங்கப்படுவன் ... எனப்பத்திலுள், காயபாரமிதையை விளங்கக் கூறுவதாகிய தாராபாரமிதை யென்னும நூலொன்று வடமொழியிலிருப்ப தாகத் தெரிகின்றது. இது ஸ்ரீ ஹர்ஷகவி செய்த ஸமஸ்கிருத நைஷ தம், ௫-ஆம் ஸர்க்கத்துள்ள ௭௭-ஆவது சுலோகத்தாலும் அதற்கு ஸ்ரீ மல்லிநாதஸூரி செய்த வியாக்கியானத்தாலும் உணரப்படுமெனபர். முற்றவும் - பூரிக்கவும்

௧௪ - ௨௬ மணி. ௨௬ ௧௮௧ - ௨. ௨௭ அறவாழி - தருமசக்கரம்

௨௬ - ௮ எடுத்துப் பிறவிதோறும் உதவும்பெற்றியள்

௨௮ - ௯ பெற்றியளென்றுகூற

௩௰ அந்தவுதவிக்கு - மேற்கூறிய வணிகனைக் கரையேற்றிய அவ்வுபகாரத்தைத் தான் மறவாதிருத்தலைப் புலப்படுத்தற் பொருட்டு.

௩௧ தந்தை - கோவலன் நினை - நினக்கு துறவியும் - துறந்தலையும்.

௩௪ - ௩௧ சிலப். ௩௦ ௨௮ - ௩௭

௩௰ - ௩௩ மணி. ௭ ௩௩ - ௮.

௩௪. என்பவட்கொப்ப அவனிடுசாபத்து என்றதனால், மணிமேகலா தெய்வம் சாபமிட்டமை பெறப்பட்டது, அது ௨௫ ௧௯௮ - ௨௦௦ - ஆம் அடிகளால் உணரப்படும்

(பி - ம்.) ௨௯ 'அறிந்தோரரணங்கூற' ௩௧. 'தாதையிட்டனன்' ௩௪ 'என்பவட்குரைப்பவ வனிடுசாபத்து'

நகர்கடல் கொள்ளநின் றாயரும் யானும்
பகருநின் பொருட்டா லிப்பதிப் படர்ந்தனம்
என்றாங் கறவணன் றாளிணை யிறைஞ்சிப்
பொன்றிகழ் புத்த பீடிகை போற்றும்
தீவ திலகையு மித்திறஞ் செப்பினள்
ஆதலி னன்ன வணிநகர் மருங்கே
வேற்றுருக் கொண்டு வெவ்வே றுரைக்கும்
நூற்றுறைச் சமய நுண்பொருள் கேட்டே
அவ்வுரு வென்ன வைவகைச் சமயமும்
செவ்வி தன்மையிற் சிந்தையின் வைத்திலேன்
அடிகண் மெய்ப்பொரு ளருளுக வென்ன
நொடிகுவெ னங்காய் நுண்ணிதிற் கேணீ
ஆதி சினேந்திர னளவை யிரண்டே
ஏதமில் பிரத்தியங் கருத்தள வென்னச்

---

௩௫ நகர் - காவிரிப்பூம்பட்டினம்

௩௫ - ௩௬ தண்விழா தவிர்தலின், மணிமேகலா தெய்வத்தின் கோபப்ப வானவர் தலைவணங்கிய அவன் இட்ட சாபத்தால் நகரைக் கடல் கொள்ளவென்க

௩ ௩௬ ௨௪ மணி. ௨௪ ௨௯ - ௬௯ ௩௬ பதி - காஞ்சிநகரம்

௩௬ - ௯ மணி. ௨௮ ௧௫௧ - ௪

௩௭ என்றலும் - என்று அறவணவடிகள் கூறலும்

௩௮ - ௯ புத்த பீடிகை போற்றும் தீவதிலகை, மணி. ௧௧ ௨௭ - ௯

௩ - ௩௬ மணி. ௨௫ ௧௭௬ - ௨௧௩ ௪0 நகர் - வஞ்சிநகரம்

௪௨ சமயம் - அளவைவாதமுதல் பூதவாத மிறுதியாகிய சமயங்கள்

௪௩ மணி. ௨௭ ௨௮௯

௪௪ செவ்விது பன்மையொருமை மயக்கம்

௪௫ அடிகள் விளம்பீர் என்ன - என்று மணிமேகலை கேட்ப

௪௬ நொடிகுவென் - சொல்லுவேன்.
'நொடிகுவென்' என்பது முதலியன அறவணவடிகளுடைய கூற்று

௪௭ சினேந்திரன் - புத்தன்

௪௮ ஏதம் - குற்றம் பிரத்தியம் - பிரத்தியக்கப் பிரமாணம், மணி. ௨௭ ௮௩ கருத்தளவு - அனுமானப் பிரமாணம்

௪௭ - ௮ என்ன இரண்டேயென்க

(பி - ம்) ௩௭. 'அறவணனடியிணை' ௩௮ 'திகழ்பவுத்த பீடிகை' ௩௯. 'தீவலதிலகையும்' ௪0. 'ஆதலினாந்தவணி' ௪௨. 'நூற்றியசமய நுண்'

*சுட்டுணர் வைப்பிரத் தியக்க மெனச்சொலி
விட்டனர் நாம சாதி குணக் கிரியைகள்
மற்றவை யனுமா னத்துமடை யும்மெனக்
காரண காரிய சாமா னியக்கருத்
தோரிற் பிழைக்கையு முண்டுபிழை யாதது
கனலிற் புகைபோற் காரியக் கருத்தே
ஏனை யளவைக ளெல்லாங் கருத்தினில்
ஆன முறைமையி னனுமான மாம்பிற
பக்க மேதுத் திட்டாந்த முபநய
நிகமன மென்ன வைந்துள வவற்றிற்
பக்க மிம்மலை நெருப்புடைத் தென்றல்

---

* இவ்வடி முதலியவற்றால் இக்காதையிற் கூறப்பட்டுள்ள பிரத்தியக்கம் அநுமானமென்னும் இரண்டளவையிலக்கணங்களும், அவற்றின் பாகுபாடுகளும் இன்ன நூலின் கருத்தைத் தழுவி வந்தனவென்று விளங்காமையாலும், தமிழிலுள்ள தருக்கசங்கிரகம், அன்னம்பட்டீயம் முதலியவற்றிலும், சிவஞானசித்தியார் சுபக்கத்துள்ள அளவையிலக்கணத்திற்குப் பலரெழுதிய உரைகளிலும் வந்துள்ள குறியீடு முதலியவைகள் வேறு முறையாக இருத்தலாலும், இயன்றவளவு விசாரித்தும் இந்த முறையுள்ள பழைய நூல்கள் இக்காலத்து வழங்கவில்லையென்று வடமொழித் தருக்க நூல்கள் பலவற்றிலும் மிக்க பாண்டித்திய முள்ளவரும், முன்பு கும்பகோணத்தில் வசித்தவருமாகிய குறிச்சி மஹாமஹோபாத்யாய ஸ்ரீ ரங்காசாரியாரவர்கள் முதலிய மஹா வித்துவான்கள் பலரும் சொல்லிவிட்டமையாலும், இவற்றைப்பற்றி இலங்கையிலுள்ள வித்தியோதய பாடசாலைத் தலைவரும் பௌத்தமதாசாரியருமாகிய ஸ்ரீ ஸுமங்களரை விசாரிக்கும்படி செய்தற்கு அவர் பிரத்தியக்கம் அநுமேயம் ஸ்ரௌதம்தயமென்ப பிரமாணம் மூன்று வகைப்படுமென்றும், அவற்றுட் பிரத்தியக்கத்தினிலக்கணம் அங்கோத்தர நிகாயமென்னும் நூலிலுள்ள காலாம சூத்திரத்திலும் மத்திய நிகாயமென்னும் நூலிலுள்ள மஹாஹஸ்தி பதோபம சூத்திரத்திலும் அநுமேயத்தினிலக்கணம் மேற்கூறிய நூல்களிலுள்ள அநுமான சூத்திரங்களிலும் ஸ்ரௌதம்தயத்தினிலக்கணம் மேற்கூறிய நூலிலுள்ள மஹாஸிஹ்மநாத சூத்திரத்திலும் கூறப்பட்டுள்ளனவென்றுமட்டுந் தெரிவித்தமையாலும், அந்நூல்களும் அவற்றைப் புலப்படுத்துவோரும் கிடைக்காமையாலும், இந்தப் பாகத்திற்குக் குறிப்புரை எழுதப்படவில்லை, ஆயினும் முதலிற் கூறிய வித்துவான்களுடைய முன்னிலையிற் பலமுறை ஆராய்ச்சி செய்து ஏட்டில் இருந்தவாறே மூலம் மாத்திரம் பதிப்பிக்கப்பட்டது.

(பி - ம்) ௪௯ 'வைகப் பிரத்தியக்கம்' ௫௧. 'மானத்தடையுமெனக' ௫௨ 'காரியஞ்சாமானிய' ௫௪. 'கனலியிற் புகைபோல்' ௫௫ 'ஏனை யாளவைகள்' ௫௭ - ௮ 'திருட்டாந்தமுபனபளிக மெனவைந்து'

புகையுடைத தாதலா லெனலபொருந் தேது
வகையமை யடுக்களை போற்றிட் டாநதம
உபநய மலையும புகையுடைத தென்றல
நிகமனம புகையுடைத தேநெருப புடைததெனல்
நெருபபுடைத தலலா தியாதொன் றதுபுகைப
பொருத்த மின்று புனலபோ லென்றல
மேவிய பக்கதது மீட்சி மொழியாய்
வைதன் மியதிட் டாநத மாகும
தூய காரிய வேது சுபாவ
மாயிற் சத்த மநித்த மென்றல
பககம பண்ணப் படுத லாலெனல
பகக தன்ம வசன மாகும்
யாதொன்று யாதொன்று பண்ணப் படுவ
தநிததங கடமபோ லென்றல சபககத
தொடாசசி யாதொன றநிததமல லாதது
பண்ணப் படாத தாகாசம போலெனல
விபககத தொடாசசி மீட்சிமொழி யெனக
அநன்னு வயததிற பிரமாண மாவ
திவவெள் ளிடைககட குடமிலை யென்றல
செவவிய பககந தோனறுமை யிலலெனல
பகக தன்ம வசன மாகும
இனமையிற் கணடில முயறகோ டென்றல
அநநெறிச சபககம யாதொன் றுண்டது
தோறறர வடுககுந கைநெல்லி போலெனல
ஏற்ற விபககத துரையென லாகும்
இவ்வகை யேதுப பொருள்சா திபபன
என்னைகா ரியமபுகை சாதிதத தெனனில

---

(பி - ம்) ௬௨ - ௩. ‘முபநயமு மலையுடை புகையுடைத தெனனி கமனம்’ ௬௩ - ௪ ‘நெருப்புடைததன நெருப்புடைததலலா தியாது’ ௬௫ ‘புலன்போலென்றல’ ௬௬. ‘மேயவிப்பக்கத்து’ ௭௧ - ௨. ‘பககந தன்ம வசனமாகும், யாதொன மியாதொனறு’ ௭௩ - ௫. ‘அநிததியங கடமபோலெனறல் சகபககத, தொடாசசியாதொனறணிதத மலலாது, பணணையிலாகாதா காசமபோலெனறல’ ௭௭. ‘அனுனுபவயததிற’ ௮0 ‘பககநதன்ம’ ௮௫ ‘எயதுபபொருள்’ ௮௬ - ௭. ‘புகைசாதிததல் புகையுள்ள விடததிது நெருப்பு’

புகையுள்ள விடத்து நெருப்புண் டென்னும்
அன்னுவயத் தாலு நெருப்பிலா விடத்துப்
புகையிலை யென்னும் வெதிரேகத் தாலும்
புகையே நெருப்பைச் சாதித்த லென்னில்
நேரிய புகையி னிகழ்ந்த தூணா டான
ஊர்த்துவ சாமங் கௌடிலச் சாமம்
வாயத்த நெருப்பின்வரு காரிய மாதலின்
மேனோக் கிகழுந்த திருப்பப் பதைத் திருப்ப
தாமே நெருப்பைச் சாதிக்க வேண்டும்
அன்னு வயஞ்சா திக்கின் முன்னும்
கழுதை யையுங் கணிகை யையும்
கூடியி லொருகா லத்தோ ரிடத்தே
அன்னு வயங்கண் டானபிற காலத்துக்
கழுதை யைக்கண்ட விடத்தே கணிகையை
அனுமிக்க வேண்டு மன்றே நெருப்
பிலா விடத்துப் புகையிலை யெனநேரத்
திருந்தா வெதிரேகஞ் சாதிக்கு மெனனில்
நரிவா லில்லாத கழுதையின் பிடரின்
மயிர்வாலு மிலையாகக் காணப் பட்ட
அதனையே கொண்டு பிறிதோ ரிடத்து
நரிவா லின்றைய வாலைப் பனுமித்தல்
அரிதா மாதலா லதுவு மாகா
தொட்டிய வுபநய நிகமன மிரண்டும்
திட்டாந் தத்திலே சென் றடங்கும்
பக்க மேதுத் திட்டாந் தங்கள்
ஒக்க நல்லவுந் தீயவு முளவதில்
வெளிப்பட் டுள்ள தன்மி யினையும்

---

(பி - ம்) ௯௨ 'அன்னியத்தாலு' ௯௨-௩. 'ஊர்த்திதச்சாம வண்ணங்கெளடச் சாயம், வாயத்த நெருப்பினவரு காரியங்களாகிறதின மேனோக்கிறத் திருப்பகான நெருப்பை' ௯௯ 'அனனுவயசாதிக்கின' ௯௯-௱௧ 'என்னுவயங்கலிறக காலத்துங், கணிகையைக் கண்டவிடத்தே கழுதை, யனுபவிக்க வேணுமேதுவேணடா' ௱௧-௩ 'நெருப், பிலலாத விடத்துப் புகையில்லை யெனறு நெருதிருத்தரு' ௱௫-௬ 'பட்டதனையே' ௱௭-௮ 'வாலையனு மிக்கவரிதாமனனுனதுவு' ௱௯ 'ஒட்டிய வுபாயநிகமன' ௱௧௧ 'பக்கமேதுந திருட்டான நதங்கள'

வெளிப்பட் டுளசாத் தியதன் மதத்திறம
பிறிதில் வேறும் வேறுபாட் டினையும
தன்கட் சாத்திய நயந்தருத லுடையது
நன்கென் பக்கமென நாட்டுக வதுதான்
சத்த மநித்த நித்தமென் றொன்றைப
பற்றி நாட்டப் படுவது தன்மி
சத்தனு சாத்திய தன்ம மாவது
நித்தா நித்த நிகழுநல் லேது
மூன்றாய்த் தோன்று மொழிந்த பக்கத்
தூன்றி நிற்றலுஞ் சபக்கத்துண் டாதலும்
விபக்கத் தின்றியே விடுதலுஞ் சபக்கம்
சாதிக் கிறபொரு டன்னொடு பக்கத்
தோதிய பொதுவகை யொன்றி யிருத்தல்
சத்த வநித்தனுஞ் சாத்திய மாயின்
ஒத்த வநித்தங் கடாதி போலெனல்
விபக்கம் விளம்பில யாதொன் றியாதொன்
றநித்தமல் லாதது பண்ணப் படாத
தாஅ காசம் போலென் றாகும்
பண்ணப் படுதலுஞ் செயலிடைத் தோன்றலும
நண்ணிய பக்கஞ் சபக்கத் திலுமாய்
விபக்கத் தின்றி யநித்தத் திற்கு
நிகழ்தரு மேதுவாய் விளங்கிற் றென்க
ஏதமி றிட்டாந் தம்மிரு வகைய
சாதன் மியம்வை தன்மி யமெனச
சாதன் மியமெனப் படுவது தானே
அநித்தங் கடாதி யன்னுவயத் தென்கை
வைதன் மியதிட் டாந்தஞ் சாத்தியம்
எய்தா விடத்தி லேதுவு மின்மை
இதத்திற நல்ல சாதனத் தொத்தன

(பி - ம்.) ௧௧௬ 'இனைவுந' ௧௧௭ 'சாத்தியந்தருதலு' ௧௧௮ 'மனித்தமென் றொன்றை' ௧௧௯ 'பற்றநாட்ட' ௧௧௯ - ௨௦ 'தனமிரத்தனு சாத்திய' ௧௨௨ 'தோன்றிமொழிந்த' ௧௨௫ 'சாதிக்க பொருடன்னொடு' ௧௩௦ 'அனித்தமொன்றுபண்ண' ௧௩௦ - ௩௧ 'பண்ணப்படா தாகாசம்' ௧௩௨ 'செயலுடைத்தோன்றலும்' ௧௩௪ 'அனித்தினுக்கு மித்தத்து' ௧௩௬ - ௭ 'இருவகைசாதன'

தீய பக்கமுந் தீய வேதுவும்
தீய வெடுத்துக் காட்டு மாவன
பக்கப் போலியு மேதுப் போலியும்
திட்டாந்தப் போலியு மாகு மிவற்றுட்
பக்கப் போலி யொன்பது வகைப்படும்
பிரத்தி யக்க விருத்த மனுமான
விருத்தஞ் சுவசன விருத்த முலோக
விருத்த மாகம விருத்த மப்பிர
சித்த விசேடண மப்பிர சித்த
விசேடிய மப்பிர சித்த வுபயம்
அப்பிர சித்த சம்பந் தம்மென
எண்ணிய விவற்றுட் பிரத்தியக்க விருத்தங்
கண்ணிய காட்சி மாறுகொள லாகும்
சத்தஞ் செவிக்குப் புலனன் றென்றல்
மற்றனு மான விருத்த மாவது
கருத்தள வையைமா றுகக் கூறல்
அநித்தியக் கடத்தை நித்திய மென்றல்
சுவசன விருத்தந் தனசொன் மாறி யியம்பல்
என்றாய் மலடி யெனறே யியம்பல்
உலக விருத்த முலகின்மா றுமுரை
இலகுமதி சந்திர னல்ல வென்றல்
ஆகம விருத்தந் தன்னூன்மா றறைதல்
அநித்த வாதியா யுள்ளவை சேடிகன்
அநித்தி யத்தைநித் தியமென நுவறல்
அப்பிர சித்த விசேடண மாவது
தத்த மெதிரிக்குச் சாத்தியந் தெரியாமை
பௌத்தன் மாறாய் நின்றசாங் கியனைக்
குறித்துச் சத்த மவிநாசி யெனறால்
அவனவி நாச வாதி யாதலிற்
சாத்திய விநாசமப் பிரசித்த மாகும்

(பி-ம்) ௧௪௩-௪. 'ஏதுவு நடுத்தீய வேதுக்காட்' ௧௪௬ 'போலியு மென விவற்' ௧௪௮.௯. 'பிரத்தியக்கமனுமான, விருத்தஞ்சுவன விருத்த முதலோத' ௧௫௧-௨. 'சித்தசேடணமாகப் பிரசித்திய விசேடிய' ௧௫௭. 'அளவை மாறுகூறல' ௧௫௯ 'அநித்தக' ௧௬௨-௩. 'உலகவுரையிலகு மதிசந்திர' ௧௬௪. 'தன்னூதைமாறறைத'

அபபிர சித்த விசேடிய மாவ
தெதிரிகருத தன்மி பிரசிதத மின்றி
இருததல் சாங்கியன் மாறாய் நின்ற
பௌததனைக் குறித்தான் மாசசை தனியவான்
என்றா லவன நான்ம வாதி
ஆசலிற றன்மி யப்பிர சிததம்
அபபிர சிதத வுபய மாவது
மாறா னோர்க்குத் தன்மி சாத்தியம்
ஏறா தப்பிர சித்தமா யிருததல்
பகாவை சேடிகன் பௌத்தனைக குறித்துச்
சாபுக வியதொகைப் பொருட்குக காரணம்
ஆன்மா வென்றாற் சுகமுமான் மாவும்
தாமிசை யாமையி லபிரசித் தோபயம
அப்பிர சிதத சமபந்த மாவ
தெதிரிக கிசைநத பொருள்சா திததல
மாறும பௌததறகுச சத்த வநிததம
கூறி லவன்ன கொளகையஃ தாகலில
வேறுசா திகக வேணடா தாகும
ஏதுப போலி யோதினாமூன் றாகும்
அசிதத மனைகாந திகமவிருத தமமென
உபயா சிதத மனனியதா சிததம
சிததா சிதத மாசிரயா சிததம
எனநான் கசித்த முபயா சித்தம்
சாதன வேது விருவாக்கு மினறிச
சதத மநிததங கட்புலத தெனறல
அனனியதா சிதத மாறாய நினறாற
குன்னிய வேது வன்றா யொழிதல
சததறு செயலுற லநிதத மென்னிற
சிதத வெப்பா டல்லது செயலுறல
---
(பி - ம்.) கஎங - ச. 'யாவது தனமி யெதிரிகருத தன்மமாசித்த மின்றி' கஎஎ 'எனறாலவனறமவாதி' கஅ௫ - கூ. 'அப்பிரசிதத, மப்பிர சிதத சமபநத' கஅஎ 'எதிரிகருதியிருநத பொருளசாதிககை' கஅஅ-கூ 'அனிததங கூடுலவன' ககூக - உ. 'எனறுகுஞ்சிததம' ககூச - ரு. 'சித்த மாசசியாசிததமுமன' ககூரு - கூ 'சிததமாவது சாதன' உ00. 'செய லுறுதலினிதத' உ0க 'கதத வெளிப்பாடு'

உய்த்த சாங்கியனுக் கசித்த மாகும்
சித்தா சித்த மாவ
தேதுச் சங்கய மாய்ச்சா தித்தல
ஆவி பனியென வையுறு நின்றே
தூய புகைநெருப் புண்டெனத் துணிதல்
ஆசிரயா சித்த மாறு னவனுக்
கேற்ற தன்மி யின்மை காட்டுதல்
ஆகாசம், சத்த குணத்தாற பொருளா மென்னின்
ஆகா சமபொரு ளலவென் பாற்குத
தன்மி யசித்த மநைகாந் திகமும
சாதா ரணமசா தாரணஞ் சபக்கைக
தேச விருத்தி விபக்க வியாபி
விபக்கைக் தேச விருத்தி சபக்க
வியாபி யுபயைக தேச விருத்தி
விருத்த வியபி சாரியென் றாறு
சாதா ரணஞ்சபக்க விபக்கத் துக்கும
ஏதுப் பொதுவா யிருத்தல சத்தம
அநித்த மறியப் படுதலி னென்றால்
அறியப படுதனித தாநித்த மிரண்டுக்கும்
செறியுங் கடமபோ லநித்தத் தறிவோ
ஆகாசம போல நித்தத் தறிவோ
என்ன லசாதா ரணமா வதுதான்
உன்னிய பக்கத் துண்டா மேதுச
சபக்க விபக்கந தம்மிலின் றாதல
சத்த நித்தங் கேட்கப படுதலின்
என்னிற் கேட்கப் படலெனு மேதுப
பக்கத் துள்ள தாயி னலலது
சபக்க விபக்கத்து மீட்சித் தாதலிற்
சங்கய மெய்தி யநேகாந் திகமாம்
சபக்கைக் தேச விருத்தி விபக்க

---

(பி - ம்) ௨0௪ 'ஏதுசங்கயமாயநிச்சயி' ௨0௬ 'உண்டெனததெசி தல்' ௨௧௨ - ௩. 'சாதாரணவபசகனகததெருவித திவிபக்கவிபாபிவிபக்க தெசவிருத்தி' ௨௧௬ 'விருத்தாவியாபிசாரி' ௨௨௯ - ௩௧. 'பக்கத்து மீடத்தாதலிற். சபக்க தேசவிருத்தி'

வியாபி யாவ தேதுச சபக்கத்
தோரிடத் தெய்தி விபககத் தெஙகும
உண்டாத லாகுஞ சத்தஞ செயலிடைத
தோன்று தாகு மநித்த மாகலின்
என்று லநித்த மென்ற வேதுச
செயலிடைத் தோன்று மைக்குச சபககம
பின்னினு மாகா சத்தினு மின்னின்
நிகழ்ந்தா காசத்திற் காணு தாகலின்
அநித்தங கடாதியி னுத்தலிற கடம்போல
அழிந்து செயலிற் றோனறுமோ மின்போல்
அழிந்து செயலிற றோனறு தோவெனல
விபககைக தேச விருததி சபகக
வியாபி யாவ தேது விபககத
தோரிடத் துறழுச சபககததோத தியறல
சத்தஞ, செயலிடைத் தோனறு மநித்தமா தலினெனின்
அநித்த வேதுச செயலிடைத் தோன்றற்கு
விபக்க வாகா யததினு மின்னினும
மின்னி னிகழ்ந்தா காசத்துக காணுது
சபககக கடாதிக டமதில
எஙகுமா யேகாநத மலல மின்போல
அநித்தமாயச செயலிடைத் தோனறுதோ கடம்போல
அநித்தமாய்ச செயலிடைத் தோன்று மோவெனல
உபயைக தேச விருததி யேதுச
சபககத் தினுமவிபக கததினு மாகி
ஓதே சத்து வாததித்தல சததம
நித்த மமூர்த்த மாதலி னென்னின்
அமூர்தத வேது நித்தத்தி னுககுச
சபககவா காச பரமா ணுககளின்
ஆகா சத்து நிகழ்தது மூர்த்தமாம்

---

(பி - ம்) உ௩௪ 'உண்டாதலாம்' உ௩௫ 'ஆகுநித்த மாதலின' உ௩௬ 'என்றுநித்த' உ௩௮ - ௪0 'மினனி' நிகழாகாசததாதலினததங கடாதியின்' உ௪௩ 'விபககவறதேசவிருததி' உ௪௫ - எ 'இயறல, செயலிடைத தோனறலிற் சொலலனித்த மெனனித்த வேறுச' உ௫0. 'கடதிகடனினனேஙகுமா' உ௫௩ - ௪. 'தோன்றுமோ வென்று, முபயத தேசவிருததி'

பரமா ணுவினிக மூர்த்தமை யாணும
விபக்க மான கடசுகா திகளிற்
சுசுதது நிகழ்ந்து கடதொழிந தனையினும்
ஏகதேச சத்து நிகழ்வதே காநதமன்
றமூாததி மாகாசம் போல நித்தமோ
அமூாத்த சுகமபோ லநிதத மோவெனல்
இருதத வியபிசாரி திருந்தா வேதுவாய்
விருதத வேதுவிற் குமமிடங் கொடுததல
சதத மநிததஞ் செயலிடைத தோன்றலின்
ஒதத சென்னச செயலிடைத தோனறறகுச்
சபககமா யுள்ள கடாதி நிற்கச
சதத நிததங கேடகப் படுதலிற்
சதததவமபோ லெனசசாற றிடுதல்
இரணடினுஞ் சஙகயமா யேகாநத மலல
விருத்த தன்னை திருததக விளமபின்
தனமச சொரூப விபரீத சாதனம
தனம விசேட விபரீத சாதனம
தன்மிச சொரூப விபரீதசாதனம
தனமி விசேட விபரீத சாதனம
என்ன நான்கு வகைய தாகுமத
தன்மச சொரூப விபரீத சாதனம
சொன்ன வேதுவிற சாததிய தன்மத்
தருவங் கெடுதல சதத நித்தம
பணணப படுதலி னென்றுற் பணணப்
படுவ தநிததமா தலிறபணணைப் பட்ட
வேதுச சாததிய தனமநித் தத்தைவிட்
டநிததத்தைச் சாதிதத லான்விப ரீதம
தன்ம விசேட விபரீத சாதனம்

(பி - ம்) உ௬௩ 'சகததிங்கமுநது' உ௬௫ 'ஆகாசமபோனிததமோ' உ௬௬ 'அமூாதமோச சுகமம போலநிததமோ' உ௬௭ 'வியாபிசாரி யாவது விருததவேதுவவிற' உ௬௮ - ௭௦ 'கொடுதத, மனிததஞ் செய லிடைத தோனற, லொதசெதினசெயலிடை' உ௭௦ - ௭௧ 'தோனறறகு, சனைசுபககமா' உ௭௩ - ௪ 'சாடுத, லிரணடிவஙகய' உ௭௬ - ௮௩ 'தனமசசருமவிபரீத சாதனஞ், சொனனவிசற சாநதியதனமத, தருவஙகெடல' உ௮௮ - ௧ 'விபரீதஞ் சொன்ன'

சொன்ன வேதுச சாததிய தன்மம
தன்னிடை விசேடங் கெடசசா தித்தல்
கண்முத லோாககு மிந்திரி யஙகள
எண்ணிற பராாததற தொககுநிற் றலினால்
சயனு சனஙகள போல வெனறால
தொககு நிறறலி னென்கின்ற வேதுச
சயனு சனததின பராாததமபோற் கண்முதல
இநதியங களையும பராாததததிற சாதிததுச
சயனு சனவா னைப்போ லாகிக
கணமுத லிநதியத துககும பரனுயச
சாதிக கிறநிர வயவமா யுள்ள
ஆன்மா வைசசா வயவ மாகச
சாதித துசசாத தியதன் மததின்
விசேடங கெடுதத லின்விப ரீதம
தன்மிச சொரூப விபரீத சாதனம
தன்மி யுடைய சொருபமாத திரததினை
ஏதுத தானே விபரீதப படுததல
பாவந திரவியங கன்ம மன்று
குணமு மனறெந திரவிய மாமெக
குணங்ன மதத்துண மையினவே றுதலாற
சாமா னியவிசே டமபோ லென்றுற்
பொருளுங குணமுங கருமமு மொனறாய்
நின்றவற றனனிடை யுண்மைவே றுதலா லென்று
காட்டப பட்ட வேது மூனறினுடை
உண்மை யேதுப படுத்தும பொதுவாம
உண்மை சாததியத தில்லா மையினும
திட்டாந் தததிற சாமானிய விசேடம

---

(பி - ம்) உஅகூ - கூ0. 'ஏதுச்சாதினைய, தமைநதனனிடை' உகூக 'கண்ணறிவோாககு மிந்திரி' உகூஉ 'தொகுதது நிறறலினற்' உகூரு - ச. 'போலவெனறாற், றொகுததுநிற்றலி னெனனிறை' உகூரு - அ 'சாதிசசயனப்பாளை, போறகண' உகூஅ - கூ 'பாயனுகை, சாககினிாவயவ' ருOO 'சாமயமாகச' ருOஉ 'விசேடஙகொடுததலின' ருOரு - ச 'விபாதந, தனமிசசரூபரிதததானந' ருOஎ 'குணமனறெதிரவியாமாமெக' ருகக 'நினறவயிறறிடை' ருகஉ - ச 'ஏதுமனறினுடை, யுணமைபேதுப படுததுமபொருளா, முண்மை சாததிய சததியததிலிலலா'

போக்கிய பிறிதொன் றில்லாமை யானும
பாவ மென்று பகாந்ததன் மியினை
அபாவ மாகருத லான்விப ரீதம்
தனமி விசேட விபரீத சாதனம்
தன்மி விசேட வபாவஞ சாதித்தல்
முன்னங காட்டப் பட்ட வேதுவே
பாவமா கினறது கருதா வுடைய
கிரியையுங குணமுமா மதனை விபரீதம
ஆககிய தாதலாற றன்மி விசேடம
கெடுத்தது தீய வெடுத்துக்காட் டாவன
தாமே திட்டாந்த வாபா சஙகள்
திட்டாந தம்மிரு வகைபபடு மென்றுமுற்
கூறப பட்டன விங்க வைற்றுட்
சாதன மியதிட டாநதவா பாசம
ஓதி லைநது வகையுள தாகும்
சாதன தன்ம விகலமுஞ சாத்திய
தனம விகலமு முபய தன்ம
விகலமு மனனனு வயமவிப ரீதான்
னுவய மெனன வைதன் மியதிட்
டாந்த வாபா சமுமைம வகைய
சாததி யாவி யாவி ருததி
சாத னாவி யாவி ருததி
உபயாவி யாவிருததி யவ்வெதி ரேகம்
விபரீத வெதிரேக மென்ன விவற்றுட்
சாதன தனம விகல மாவது
திட்டாந தததிற் சாதனங குறைவது
சதத நிதத மமூாதத மாதலான்
யாதொன றியாதொன் றமூர்ததமது நிதத
மாதலாற் காணபுற்றது பரமாணு விலெனிற்

(பி - ம்) ௩௧௬ - எ 'யானு, மயவாபமென்று பகர்நததன்' ௩௨௩ - ௪ 'கிரிகையாகுமதனைவிபரீத, மாதலாலதன்விசேட' ௩௩௧ - ௩ 'தன்மியமிகலஞ் சாததிக, மகனம விகலவுபைய விகவ மனனனுவையம் விபரீதானனு' ௩௩௪ - ௫ 'எனமதனினமிய திருட், டாந்தமுமையவகைய' ௩௩௬ - ௯ 'சாத்தியாலியா ..விருததி, யவவிதிரேகவிபரீதவிதிரேக மிவற்றுட்' ௩௪௪ 'காணவுற்றது'

றிட்டாந தபபர மாணு
நிததத தோடு மூாதத மாதலாற
சாரதிய தனம நிததததுவ நிரம்பிச
சாதன தனமவமூாத தததுவங் குறையும்
சாததிய தனம விகல மாவது
காட்டப பட்ட திட்டாந தததிற்
சாததிய தனமங் குறைவு படுதல
சதத நிதத மமூாதத மாதலால
யாதொன றியாதொன றமூாததமது நிததம்
புததிபோ லென்முற்
றிட்டாநத மாகக காட்டப பட்ட
புசதி யமூாதத மாகி நினறே
அநிதத மாதலாற சாதன வமூாததததுவம்
நிரம்பிச சாததிய நிததததுவங குறையும
உபய தனம விகல மாவது
காட்டப பட்ட திட்டாந தததிலே
சாததிய சாதன மிரணடுங குறைதல்
அன்றியு மதுதான சனனு மசனனும்
எனறிரு வகையா மிவறறுட்சன னுவுள
உபய தனம விகல மாவ
துளள பொருடகட சாததிய சாதனம்
கொளளு மிரணடுங் குறையக காட்டுதல
சதத நிதத மமூாதத மாதலான
யாதொன றியாதொன றமூாததமது நிததம
கடமபோ லெனிற்றிட டாநத மாகக
காட்டப பட்டகடந தானுண டாகிச
சாததிய மாயுள நிததத துவமும
சாதன மாயுள வமூாததத துவமுங் குறையும்
அசன்னு வுளள வுபயதனம விகலம
இலலாப பொருட்கட சாததிய சாதனம
எனனு மிரணடுங் குறையக காட்டுதல

---

(பி-ம்) ௩௪அ-௫௰ 'அமூாததங குறையும, சோததியனம விக லங, காட்டபபட்ட' ௩௬௧-௩ 'குறைத, லினறியுமதுதான சனன சனனு, மெனறிருவகையாமவறறுட' ௩௬௬ 'கடமபோலெனத திருட்டாநதங' ௩௭௪-௫ 'சாதன, வெலலையிரண்டுங் காட்டுதல'

சத்த மநித்த மூாதத மாதலான்
யாதொன் றியாதொன்று மூாததம தநித்தம
ஆகாசம போலெனுந திட்டாந தததுச
சாததிய தனமமா யுளள வநிததமும
சாதன தனமமா யுளள மூாததமும
இரணடு மாகாச மசதசெதன் பானுக
கதனக ணினமை யானே குறையும
உணடென பானுக காகாச நிதத
அமூாதத மாதலா லவனுக்குங் குறையும
அநனுவய மாவது சாதன சாததியம
தம்மிற கூடட மாததிரனுசொல் லாதே
இரணட னுடைய வுணமைமயாந காட்டுதல
சதத மநிததங் கிருதத மாதலின
யாதொனறு யாதொன்று கிருததம தநித்தமெனும்
அன்னுவயனு சொலலாது குடதநின் கணணே
கிருதத வநிததங காணப படட
என்று லன்னுவயந தெரியா தாகும
விபரீதான னுவயம வியாபகத் துடைய
அனனுவயத் தாலே வியாபபியம விதிததல
சதத மநிததங் கிருதத தாலெனின
யாதொனறு யாதொனறு கிருதத மநிததமென
வியாபகத தாலவியா பகததைக கருதா
தியாதொான றியாதொன றநிததமது கிருதமெனா
வியாபகத தாலவியாப பியததைக கருது தல
அபபடிக கருதின் வியாபகம் வியாபபியத்தை
இன்றியு நிகழுத லினவிப ரீதமாம
வைதன்மிய திட்டாந ததது
சாததி யாவியா விருததி யாவது
சாதன தன்ம மீணடு
சாததிய தனம மீலா தொழிதல

---

(பி - ம்) ௩௮௨ - ௪ 'இனனமையான குறையு, நிததாவமூாதத முண டெனபானுக, காகாசநிததாவததமாதலா, லவனுககுஙகுறையும' ௩௮௫ 'சாதியசாதனந' ௩௮௯ - ௯௦. 'கிருததமநிதத, மனனுவயனு' ௩௯௧ - ௨. 'பட்ட, தொனறுலனறு' ௩௯௪. 'வியாபியம்விபிததல' ௩௯௬ 'மனிததமே' ௩௯௭ - ௪௦௧ 'வியாபகததை, யினறியும'

சதத நிதத் மமூர்த்தத் தென்றால்
யாதொன் றியாதொன் று நித்தமு மன்றது
அமூர்த்தமு மன்று பரமாணுப் போலெனின்
அப்படித் திட்டாந்த மாகக் காட்டப் பட்ட
பரமாணு நித்தமாய் மூர்த்த மாதலிற்
சாதன வமூர்த்த மீண்டு
சாத்திய நித்த மீளா தொழிதல்
சாத னவியா விருத்தி யாவது
சாத்திய தன்ம மீண்டு
சாதன தன்ம மீளா தொழிதல
சதத நிதத மமூர்த்தத தென்றால்
யாதொன் றியாதொன் று நித்த மன்றஃ
தமூர்த்தமு மன்று கன்மம்போ லென்றால்
வைதன் மியதிட டாந்த மாகக்
காட்டப பட்ட கன்மம
அமூர்த்தமாய நிறை யநித்த மாதலிற்
சாத்திய மான நித்திய மீண்டு
சாதன மான வமூர்த்த மீளா
துபயாவி யாவிருத்தி காட்டப பட்ட
வைதன் மியதிட் டாநதத்தி னின்று
சாதன சாத்தியங்கண் மீளாமை யன்றியும்
உண்மையி னுபயா வியாவி ருத்தி
இன்மையி னுபயா வியாவி ருத்தி
எனவிரு வகையுண்மையின்
உபயாவி யாவிருத்தி யுள்ள பொருட்கட்
சாத்திய சாதன மீளா தபடி
வைதன மியதிட் டாநதங் காட்டல
சதத நிதத மமூர்த்த மாதலின
எனற்ற கியாதொன் றியாதொன் று நித்தமன்

---

(பி - ம்) ௪0௮ - ௯ 'மனறறுபரமனுபபோலெனின, படிவைதன மிய திருட்டாநதம' ௪௧௧ - ௨௧. 'மாகாட்டபபடடதனமமூாதத மாநிறையனித தமாதலின' ௪௨௪ - ௫. 'காட்டபபட்ட, தனமிய திருட்டாந்த' ௪௨௬ 'மீளா துமையினறிய'

றமூர்ததமு மன்று காசம்போ லென்றால்
வைதன்மிய திட்டாந்த மாகக் காட்டப் பட்ட
ஆகா சம்பொரு ளென்பாற்
காகாச நிததமு மமூாத்தமு மாதலாற்
சாத்திய நித்தமுஞ் சாதனமா வுளள
அமூாததமு மிரண்டு மீணடில வின்மையின்
உபயாவி யாவிருததி யாவது
சதத மநிதத மூாத்த மாதலான்
என்றவிடத தியாதொன் றியாதொன் றநிதத
மூாத்தமு மன்ன் றுகாசம போலென
வைதன் மியதிட் டாநதங் காட்டில
ஆகா சமபொரு ளல்லவென பானுக்
காகாசந தானே யுண்மையின மையினுற்
சாததிய வநிததமுஞ் சாதன மூாததமும்
மீட்சியு மீளா மையுமிலை யாகும
அவ்வெதி ரேக மாவது சாத்தியம்
இல்லா விடத்துச் சாதன மின்மை
சொலலாதே விடுத லாகுஞ் சதத
நித்தம பண்ணப் படாமையா லென்றால்
யாதொன றியாதொன் று நிதத மன் று
பண்ணப படுவ தல்லா ததுவும்
அன்றெனு மிவ்வெதி ரேகந தெரியச
சொலலாது குடததின் கண்ணே பண்ணப
படுதலு மநிததமுந கணடே மாதலான்
என்னின் வெதிரே கநதெரி யாது
விபரீத வெதிரேக மாவது
பிரிவைத தலைதடு மாறச சொல்லுதல்
சத்த நிதத மூாதத மாதலின்
எனறு லென் று நின ற விடதது
யாதோ ரிடத்து நித்தமு மிலலையவ

(பி-ம்) சஙக 'திருடடாநதரமாகக காடடபபட்ட' சஙஅ 'ஆகா சத்தின்கண்ணே நிததமும' சசக 'இன்மையாயவிருததி' சசக 'மீட்சியு மீளாமையுமாகும்' சருஅ. 'படுதலுமநிதத மனிநதங்கணடே' ச௬o 'விதிரா விதிரைக' ச௬௩-ச 'இடதகள, யாதொரிடத்து நிதநியமில்லை'

விடத்து மூர்த்தமு மில்லை யென்றே
யாதோ ரிடத்து மூர்த்தமு மில்லையவ்
விடத்து நித்தமு மில்லை யென்றல்
வெதிரேக மாறு கொளளுமெனக் கொள்க
நாட்டிய விப்படித் தியசா தனத்தாற்
காட்டு மனுமான வாபா சத்தின்
மெய்யும் பொய்யு மித்திற விதியால்
ஐய மின்றி யறிந்துகொ ளாயந்தென.

உகூ—தவத்திறம்பூண்டு தருமங்கேட்ட காதை முற்றிற்று.

---

(பி - ம்) சஎ0 - எக 'ஆபாச, மெய்யும் பொய்யும'

---

முப்பதாவது

# பவத்திறமறுகெனப்

# பாவைநோற்றகாதை

---

[முப்பதாவது பவத்திறமறுகெனப்பாவைநோற்ற பாட்டு]

---

தானந் தாங்கிச் சீலந் தலைநின்று
போன பிறப்பிற் புகுந்ததை யுணர்ந்தோள்

---

க **மணி** ௩௦ எ௮. சீலம்-பஞ்சசீலம், அஷ்டாங்கசீலம், தசசீலமென மூன்று வகைப்படும், இவற்றினியல்பை, இந்நூல் உக - ஆம்காதை, ருஎ - ஆம் அடியின் குறிப்பாலும் அறிக, மணிமேகலை பிக்குணி யாதலின், இவற்றுள், தசசீலமே ஈண்டுக்கொள்ளற்பாலன, "எண்ணிறந்த காலங்க ளெம் பொருட்டான மிகவுழன், றெண்ணிறந்த வுலகங்களிருடீர வொருங்குணர்ந், தெண்ணிறந்த தானமுஞ் சீலமு மிவையாக்கி, யெண்ணிறந்த குணத்தினு னெம்பெருமா னல்லனே" (நீல சமய) என்றும், "தோடார்ரிலங்கு மலர்கோதி வண்டு வரிபாட நீடு துணர்சேர், வாடாத போதி நெறிநீழன் மேய வரதன் பயந்த வறநூல், கோடாத சீல விதமேவி வாய்மை குணனாக நாளு முயல்வார், வீடாத வின்ப நெறி சேர்வர் துன்ப வினைசேர்த லென்று மிலரே" (வீர. யாப்பு ௩, மேற்) என்றும் தானசீலங்கள் கூறப்பட்டு வருதல் காண்க.

உ. உணர்ந்தோள் - மணிமேகலை. பழம் பிறப்பில் நிகழ்ந்தவற்றை அறிதற்குரிய அறிவும் யோகவலித்தியைப்போன்ற இருத்தியும் பக்குவிகளுக்கு எப்படியேனும் உண்டாகுமென்பது பௌத்தநூற்றுணிபு இப் பழம் பிறப்புணர்ச்சியையும் இருத்தியையும் முறையே மணிபல்லவத்துள்ள

புத்த தன்ம சங்க மென்னும்
முத்திற மணியை மும்மையின் வணங்கிச்
சரண கதியாய்ச் சரண்சென் றடைந்தபின்
முரணாத் திருவற மூர்த்தியை மொழிவோன்

புத்தபீடிகைக் காட்சியாலும், மணிமேகலா தெய்வத்தாலும் மணிமேகலை அடைந்தாளென்று இந்நூலிலுள்ள ௯, ௧௦-ஆம் காதைகளிற் கூறுதல் காண்க. மஹாபோதிவிருக்ஷத்தினடியிலிருந்த பொழுது ஸித்தார்த்தனுக்கு முற்பிறப்புக்களில் நிகழ்ந்த செய்திகள் மனத்திற்றோற்றிய பின்னரே ஸத்ய சதுஷ்டயஞானம் தோற்றியதென்று புத்தசரித்திரம் கூறும்.

௩. புத்த தன்ம சங்கமென்னும் - புத்தனும் தருமமும் சங்கமுமென்கிற. புத்தன் - ஸர்வஜ்ஞன், பாளீபாஷையிலுள்ளதாகிய மகாவர்க்கமென்னும் நூலிலுள்ள மகாகண்டகமென்னும் பாகத்திலும், மஜ்ஜிமநிகாயத்துள்ள ஆரியபரியேஷண ஸூத்திரத்திலும், தீர்க்கநிகாயத்துள்ள மகாபரிநிர்வாணஸூத்திரத்திலும், மஹாபதான ஸூத்திரத்திலும் புத்த சரிதம் கூறப்பட்டுள்ளதென்பர். தருமம் - அவன்கூறிய அருளறங்கள், அவை அபிதருமம், ஸூத்திர தருமம், விநயதருமமென மூன்றுவகைப்படுமென்றும், அவற்றுள் அபிதருமவகைகள் அபிதர்மார்த்த ஸங்கிரகமென்னும் நூலிலும், ஸூத்திர தர்மவகைகள் ஸாரஸங்கிரகமென்னும் நூலிலும், விநயதர்மவகைகள் பிராதிமோக்ஷகவிநயவினிச்சயமென்னும் நூலிலும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளனவென்றும், இம்மூன்றுவகைத் தருமங்களும் பிடகத்திரயத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளனவென்றும் கூறுவர். ஸங்கம் - பௌத்தரில் துறந்தோர்களின் கூட்டம், இதில் துறந்த இருபாலாரும் கலப்பின்றி வேறுவேறிடங்களில் இருத்தல்வேண்டுமென்பதும், அவர்களில் பிக்ஷுக்களுக்குப் பிக்ஷுணிகள் வணங்கி நடத்தல்வேண்டுமென்பதும், பதின்மருக்குக் குறையாமலிருத்தல் வேண்டுமென்பதும் விதி.

௪. முத்திறமணி - தருமணி, மேற்கூறிய புத்த தரும சங்கத்தைத் தருமணியென்பர்; மும்மையின் வணங்கலாவது - "புத்தம் சரணங்கச்சாமி, தர்மம் சரணங்கச்சாமி, ஸங்கம் சரணங்கச்சாமி" என்பனவற்றை மூன்று முறை ஜபித்து மூன்றுமுறை பணிதல், இனி, 'மும்மையின் வணங்கி' என்பதற்கு மனோவாக்குக்காயங்களென்னும் முக்கரணங்களால் வணங்கியெனினும் பொருந்தும்.

ரு. சரணாகதி - அடைக்கலம் அடைதல்.

௨-ரு. உணர்ந்தோளை வணங்கிச்சென்று அடைந்தபின் என்க, என்றது, மூன்று ரத்நங்களையும் மணிமேகலை வணங்கியபின் என்றவாறு.

௬. முரணாத் திருவற மூர்த்தியை - பூர்வோத்தர விரோதமில்லாத தர்ம ஸ்வரூபத்தை, "மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்" (௨அ : ௧௦௦), "முன்பின் மலையா மங்கல மொழி" (௩௦. ௨௬௧) என இந்நூலுள்ளே வந்திருத்தல் காண்க, தங்கள் தருமத்தை முதலிலும் இடையிலும் கடையிலும் உத்தமமானதென்று கூறுவர் பௌத்தர்.

மேல்வருவன அறவணவடிகள் கூற்று.

(பி-ம்) ௪ 'முறைமையின் வாங்கிச'

அறிவு வறிதா யுயிர்நிறை காலத்து
முடிதயங் கமரா முறைமுறை யிரப்பத்
துடித லோக மொழியத தோன்றிப
போதி மூலம் பொருந்தி யிருந்து

---

எ அறிவு வறிதாய - நிருவாண இலககணததை ஆராயநது அதனைப பெறுவதறகுரிய ஞானமினறி, காரணகாரியஞானமினறியென்றுமாம; மணி ௧0. எ.

அ அமரா - மஹாராஜிகலோகம முதலிய ஆறு உலகிலுமுள்ள தேவர கள, மணி பதி ௨அ-௯.

௯ துடிதலோகம - துஷிதலோகம; கௌதம புததராக அவதரிதத பிரபாபாலரெனனும போதிஸததுவா இஙஙனம அவதரிபபதறகு முனபு இருநதவிடமெனபா, "தொழுமடிய ரிதயமல ரொருபொழுதும பிரிவரிய துணைவ னெனலா, மெழுமிரவி கிரணநிக ரிலகுதுகில புனைசெய தருளிறைவ னிடமாம, குருவுமறை யவருமுனி வரருமரி பிரமருர கவனு மெவரும, தொழுதகைய விமையவரு மறமருவு துதிசெயதெழு துடித புரமே" (வீர யாபபு ௩௩, மேற) எனனுஞ் செயயுள துடிதபுரமெனறு ஒரு புததஸதலம பூமியிலிருநததாகத தெரிவிககினறது, துடிதவிமானமெனற ஒரு விமான மிருபபதாக நீலகேசியுரை (புதத ௧௪௨) கூறுகினறது தோன்றி - கோசல தேசததிற கபிலவாஸதுவிற சாககியசககரவாததியாகிய சுததோதனனுடைய பட்டமகிஷியான மாயாதேவியின வயிறறிலிருநது அவள வலமருஙகுல வழியே உலுமபினிவனததில அவதரிததது, இஙஙனம அவதரிததததை, "உலுமபினி வனதது ளொணகுழைத தேவி, வலமபடு மருஙகுல, வடுநோ யுருமம, லானறே னவவழித தோனறின ஞதலி, னீனறே ளேழுநா ளினனு யிர வைததாள" (விம்பசாரகதை, சிவ சித்தி பரபக்கம், சௌததி ராநதிகன மதமறுதலை, ௫, நீல குணடல ௭௧) எனனும செயயுளாலுணாக

அ-௯ ாணடுக கூறியதுபோலவே, "சககர வாளததுத தேவரெல லாம, தொககருங கீணடித துடித லோகததுத, மிககோன பாதம விழுநதன ரிரபப" (௧௨ எ௨-௪) எனறு முனபு வநதிருததல காணக

௧0 போதிமூலம - இககாலததுப புத்தகயையெனறு வழஙகபபடுவ தும நைரஞ்சரா அலலது பல்குனியெனறு கூறபபடும நதிககரையிலுள்ளது மாகிய இடததில ஐநது கிளையையுடைததாய விளஙகிய அரசமரததின அடி யில, போதி - அரசமரம, இஃது ஐநதுகிளையையுடைததாதல, "பணையைந தோஙகிய பாசிலைப போதி, யணிதிகழ நீழ லறவோன" (சிலப். ௧0 ௧௧-௨) எனபதனுற பெறபபடுகினறது. ஸிததாாததன உணமையறிவை யடைதறகுத துறவுபூணடு பலவிடததும சென்று பலவாறுமுயனறு முடி வில் இமமரததடியிலவநது சீலசமாதியிலிருநது பழமபிறபபுககளை யறிநது தசபாரமிதையும நிறையபபெறறு (மணி. ௨௯ · ௨௬) ஆராயநதபொழுது ஸத்தியசதுஷ்டய ஞானமுழுதும அவனுககுத தோறறினமையால, இமமரம மஹாபோதிவிருக்ஷமெனறு பௌததாகளால மிகபபாராடடி, நெடுநதூரத திருநதும திககுநோககி வணஙகபபடுவது பணடைககாலததில இதனை

(பி-ம்) எ 'அறிவுதோயவுயிாநிைற' ௯ 'துடிசலோகாம'

மாரனை வென்று வீர னாகிக்
குற்ற மூன்றும் முற்ற அறுக்கும்
வாமன் வாய்மை ஏமக் கட்டுரை

---

னாட்டிலிருந்த பௌத்தர்கள் வடதிசைநோக்கி இதனைத் தொழுது வந்தா ரென்னும் தெரிகின்றது, "போதிவிருட்சம் வடக்கேயிருப்பதென்று பௌத்தன் தொழுதலால் திக்குளதெனக்" (சிவ. சித்தி. சௌத்திராந்திகன் மதமறுதலை, ௫௫, உரை) இம்மரத்தின்கீழிருந்து ஞானம்பெற்றமையால், புத்தன் போதிவேந்தனென்று கூறப்படுவன்.

௧௧. மாரன்-நற்குணநற்செய்கைகளைநீக்கித்தீக்குணந்தீச்செய்கைகளை விளைவிப்பவனாகிய ஒரு தேவன், இவனுக்கு அறுவகைத் தேவலோகங்களி லும் அதிகாரமுண்டு. இவன் புத்தனுக்கு ஞானமுண்டாகாவண்ணம் தன் மகளிர் மூவரும் தானுமாகவந்து பலவகையான இடையூறுகளைச் செய்து முடிவில் தோல்வியுற்றான், "தாமநறுங் குழன் மழைக்கட் டளிரியலார் தம் முன்னர்க், காமனையே முனந்தொலைத்தாற் கண்ணேயுட்டம் யாதாங்கொல்" (வீர. யாப்பு. ௧௧, மேற்.) மாரனைவென்றமையால், புத்தனை மாரஜித்தென்று கூறுவர், வீரியம் தசபாரமிதைபுளொன்றாதலின். அதனையுடையா னென்பார் 'வீரன்' என்றார், வீரியமென்றது, இங்கே அறிவு பெறுந்துணை யும் பலவகையான இடையூற்றினுக்குமஞ்சாது மடிவின்றி முயன்ற முயற் சியை, அது, "விளைவாய போதியை யுறுமளவும் வினைமடியான், றளாவின்றி யோடியதாளினனல்லனோ" (நீல மொக்கல. ௮௮, ௪௰௰) என்பதனாற் பெறப்படும், "காமற் கடந்த வாமன்" (௫ ௭௭, "மாரனை வெல்லும் வீர" (௧௧ ௬௧) என்றார் முன்னும், இராமனை யுத்த வீரனென்றும், கன்னனைத் தானவீரனென்றும், புத்தனைத் தயாவீரனென்றும் கூறுவர் வடநூலார்.

௧௨. குற்றம் மூன்று—காமம் வெகுளி மயக்கங்கள், "காமம் வெகுளி மயக்கங் காரணம்" (௨௫௫) என்று இக்காதையிற் பின்னுங் கூறுவர், இம் மூன்றையும் துவரத் துறந்தமையின், புத்தன் முக்குற்றங் கடிந்தோனென்று கூறப்படுவன்; மணி. ௫: ௭௦, அடிக்குறிப்பைப் பார்க்க, 'அறுக்கும்' என்றதனால், குற்றமூன்றையும் கட்டென்றாராயிற்று, "பொய்க் குற்ற மூன்று மறுத்தான் புகழ் கூறுவேற்கென், வாய்க்குற்ற சொல்லின் வழுவும் வழுவல்லவன்றே" (குண்டலகேசி, அவையடக்கம்) இனி, பொய், கொலை, கள், காமம், களவு என்பனவற்றை ஐங்குற்றமென்று வழங்குவது முண்டு, "கள்ளும் பொய்யும் துறந்தவை" (மணி ௨௪ ௭௭-௮), "வீடு கொண்ட நல்லறம் பகர்ந்து மன்பதைக் கெலாம் விளங்கு திங்கணீர்மையால் விரிந்திலங்கு மனபினோன், மோடுகொண்ட வெண்ணுரைக் கருங்கடற் செழுஞ்சுடர் முளைத்தெழுந்த தென்னலாய முகிழ்ந்திலங்கு போதியி, னீடு நின்ற மூவகைப் பவங்கடந்து குற்றமான வைந்தொடங்கொர் மூன்றறுத்த நாதன்" (வீர யாப்பு ௫, மேற்.) என வந்தல் காண்க.

௧௩. புத்தனது நால்வகைச் சத்தியங்களாகிய இன்பத்தை விளைவிக் கும் பொருள் பொதிந்த சொல்.

௭-௧௩. காலத்து இரப்பத் தோன்றி இருந்து வென்று வீரனாகி அறுக்கும் வாமனது வாய்மையாகிய கட்டுரையெனக், மணி ௧௨ ௫௮-௭௪ (14-ம்.) ௧௩ 'என்ற கட்டுரை'

இறந்த காலத் தெண்ணில் புத்தர்களும்
சிறந்தருள் கூர்ந்து திருவாய் மொழிந்த
ஈரறு பொருளி னீந்நெறி யுடைத்தாய்ச்
சார்பிற் றோன்றித் தத்துமின் மீட்டும்
இலககணத தொடர்தலின்

---

௧௪. கௌதம புத்தருடைய காலத்திற்கு முன்பு தருமங்குறைந்த ஒவ்வொருகாலத்தும் ஒவ்வொருவராகப புத்தர்கள் பலர் அவதரித்து உபதேசஞ்செய்து தருமஸ்தாபனஞ் செய்தாரகளென்பது பௌத்த நூற றுணிபாதலின், 'இறநத காலத் தெணணில்புததாகளும்' என்றார்; கௌதம புத்தருடைய சரித்திரத்திலும், புத்த ஜாதக கதைகளிலும் இக் கருதது ஆங்காங்குப் பெறபபடும்; கௌதம புத்தருக்கு முன்பேயுள்ள புத்தாகளுள், இருபத்தெழுவர் பெயர்கள் மட்டுமே இபபொழுது தெரிகின்றன. அவை வருமாறு :—(௧) தண்ணகாரர், (௨) மேதங்கரர், (௩) சரணஙகரா, (௪) தீபங் கரா, (௫) கௌண்டின்னியா, (௬) மஙகளா, (௭) ஸுமஙகளர், (௮) இரேவதா, (௯) சோபிதா, (௧0) அநோமதாசி, (௧௧) பதுமா, (௧௨) நாரதா, (௧௩) பது மோத்தரா, (௧௪) ஸுமேதா, (௧௫) ஸுஜாதர், (௧௬) பிரியதாசி, (௧௭) அர்த்த தர்சி, (௧௮) தர்மதாசி, (௧௯) ஸித்தாாத்தர், (௨0) திஷ்யா, (௨௧) புஷ்யர், (௨௨) விபச்சித, (௨௩) சிகி, (௨௪) விருஷபா, (௨௫) ககுநதா, (௨௬) கோநவ காமா, (௨௭) கசியபா. இவவிருபததெழுவரும கௌதமபுததரும ஸாவஞ்ஞ புததரென்று கூறப்படுவர். இஃது, இலஙகையிலுள்ள வித்தியோதய பாட சாலைத தலைவராகிய ஸ்ரீ ஸுமங்களரால் தெரியவநதது தணஙகாரன், மஹாவீரன முதலிய இருபத்துமூன்று புததரெனபாரும உளா.

௧௩ - ௫ யான்கூறுவது, ஏமககட்டுரையும திருவாய மொழிநததுமாக வுளளதென்று அறவணவடிகள கூறினரென்க

௧௬ ஈரறு பொருளின - பனனிரணடு பொருளகளால; என்றது பேதைமை முதலியவற்றை அவையாவன 'பேதைமை, செயகை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகாவு, வேட்கை, பற்று, பவம, தோறறம், வினைபயன் (மணி. ௨௪ : ௧0௫ - ௮); இவற்றை முறையே அவித்யை, கர்மம அல்லது ஸமஸ்காரம , விஞ்ஞானம, நாமரூபம அல்லது ரூபாரூபம், ஷடாயதனம், ஸ்பரிசம, வேதனை, தருஷ்ணை, உபாதானம், பவம், ஜன்மம, ஜராமரணம் என்பா வடநூலாா. இவை துவாதச நிதானமெனபபடும்; சிவ. சித்தி சௌததிராநதிகன்மதம், ௧௧ - உரை

'ஈராறுபொருளின' (௧௬) என்றது முதலியவற்றிற்குப பின்வரும் 'பேதைமை' (௪௫) என்பது முதலியவற்றால விவரணம கூறபபடும்.

௧௭ - ௮ சார்பிற்றோனறி - சமபநதததால உண்டாகி; சமபநதமென் றது காரணகாரியத்தொடாச்சியை: 'சாாபிறறோற்றம" (௨௫ . ௫) என்று முனபு வந்திருத்தல் காணக. மேற்கூறிய பன்னிரணடனுள் பேதைமை யிலிருந்து செய்கையும், அதிலிருநது உணாவும், அதிலிருந்து அருவுருவும், அதிலிருநது வாயிலும், அதிலிருநது ஊறும, அதிலிருந்து நுகாவும், அதி

(பி - ம்.) ௧௫ - ௬. 'மொழிநத, ஈராறு பொருளினீர்மை யுடைத 'தாய்'

மண்டில வகையா யறியக் காட்டி
எதிர்முறை யொப்ப மீட்சியு மாகி
ஈங்கி தில்லா வழியில் லாகி
ஈங்கி துள்ள வழியுண் டாகலிற்
றக்க தக்க சாரயிற் றோற்றமெனச்
சொற்றகப் பட்டு மிலக்கணத் தொடர்பாற்
கருதப் பட்டுங் கண்டநான் குடைத்தாய்
மருவிய சந்தி வகைமூன் றுடைத்தாய்

---

விருந்து வேட்கையும், அதிலிருந்து பற்றும், அதிலிருந்து பவமும், அதிலிருந்து தோற்றமும், அதிலிருந்து வினைப்பயனும் தோன்றுமெனக் கொள்க (மணி ௩௦ : ௧௦௪ - அ); இதனால் முதன்முறைத் தோற்றம் கூறியவாறாயிற்று. தத்தமில் மீட்டும் இலக்கு அணைந்த தொடர்தலின - அப்பன்னிரண்டனுள் செய்கை முதலிய ஒவ்வொன்றும் தத்தமக்கு முன்னுள்ளவற்றில் நின்றும் தோன்றியதுபோலப் பன்னிரண்டாவதாகிய வினைப்பயனினின்றும் எண்ணு முறையில் முதற்கண்நின்றதாகிய பேதைமை தோன்ற அதனினின்று திரும்பவும் செய்கை முதலியன முன்தோன்றியவாறே தோன்றுதலால்; மீட்டும்: உம்மை இறந்தது தழீஇயது. பேதைமை முதலிய பன்னிரண்டும் தங்கட்டோன்றுவன வற்றைநோக்கப் பகுதியாதலும், தமக்கு முதலானவற்றை நோக்க விகுதியாதலுமுடையனவென்பது பௌத்தர் கொள்கை. இலக்கு - குறி

௧௧ மண்டிலம் - வட்டம்; "ஊழின் மண்டிலமாச் சூழுமிந்நுகர்ச்சி" (௧௧௮) என்பர் பின்னும்.

௨௦. எதிர்முறை ஒப்ப - தோன்றும் முறைமையைநீக்க, எதிர்தல் - தோன்றுதல், என்றது காரணத்தை இல்லையாக்கவென்றபடி. பேதைமை மீளச் செய்கையும், அதுமீள உணர்வும் அதுமீள அருவுருவும், அதுமீள வாயிலும், அதுமீள ஊறும், அதுமீள நுகர்வும், அதுமீள வேட்கையும், அதுமீளப் பற்றும், அதுமீளப் பவமும், அதுமீளத் தோற்றமும், அதுமீள வினைப்பயனு மீளுமென்றவாறாயிற்று. மீளுதல்: ஈண்டு இன்மைப்பொருட்டு; மணி. ௩௦ : ௧௧௩ - ௩௩

௨௧ இதுவென்றது காரணத்தை. இல்லாகி - காரியங்கள் இல்லையாகி

௨௫ மேற்கூறிய பேதைமை முதலிய பன்னிரண்டனுள், பேதைமை செய்கை என்னும் இந்த இரண்டும் முதற்கண்டமென்றும், உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு என்னும் இவ்வைந்தும் இரண்டாங் கண்டமென்றும், வேட்கை, பற்று, பவம் என்னும் இம்மூன்றும் மூன்றாங் கண்டமென்றும், தோற்றமும் வினைப்பயனும் நான்காங்கண்டமென்றுங் கூறப்படும், மணி ௩௦ : ௧௩௫ - ௫௭.

௨௬ செய்கையும் உணர்வுஞ்சேர்தலை முதற்சந்தியென்றும், நுகர்

(பி - ம்.) ௧௭ - 'மீட்டுத், தொடர்தலின்மனமவகையறிய' ௨௦. 'முறைபிறப்பமீட்சி' ௨௨ - ௩. 'ஈங்கில்லவழியுண்டாதலாற்றக்க சசாரகிற்' ௨௪ 'சொற்றகப்படுமிலக்கணத்'

பண்ணூந ரின்றிப பண்ணப் படாதாய்
யானு மின்றி யென்னது மின்றிப்
போனது மின்றி வநதது மின்றி
முடிததலு மின்றி முடிவு மின்றி
வினையும பயனும பிறபபும வீடும்
இனையன வெல்லாந தானே யாகிய
பேதைமை செய்கை யுணாவே யருவுரு
வாயி லூறே நுகாவே வேட்கை
பற்றே பவமே தோற்றம வினைபபயன்
இற்றென வகுதத வியலபீ ராறும
பிறந்தோ ரறிபிற் பெருமபே றறிகுவா
அறியா ராயி னாழ்நர கறிகுவர்
பேதைமை யென்ப தியாதென வினவின்
ஓதிய விவற்றை யுணரா து மயங்கி
இயற்படு பொருளாற் கண்டது மறநது
முயற்கோ டுணடெனக கேடடது தெளிதல

---

நான்குவகைபபடும பொன்றககெடாதாய - முற்றக்கெடாததாகி.

௩அ - ௪௪. மணி ௩0 உ௫0 - ௫க.

இனிப பேதைமைமுதலிய பனனிரண்டுசாபும அவறறின இலக்கணங்களும முறையே கூறபபடும.

௪௫ செயகை - காமம் உணாவு - விஞஞானம, அருவுரு - நாமரூபம, "அருவுருத தனமை, யாககை" (௧0உ ௩) எனபாபின

௪௬. வாயில - ஷடாயதனம, ஆவது, ஞானேநதிரியஙகள ஐநதும் மனமும். ஊறு - ஸபரிசம், அஃதாவது இநதிரியவிஷயசம்பநதம. நுகாவு - வேதனை, அஃதாவது சுகதுக்க அனுபவம். வேட்கை - தருஷணை, அஃதாவது இனபததை அடையவேண்டுமென்றும் துனபத்தைப போககவேண்டுமென்றும உணடாகுமாசை.

௪எ பறறு - உபாதானம, அஃதாவது இன்பத்தைக கொடுக்கும் பொருள்களோடு ஒட்டிக கொளளுதல வினைபபயன-காமபலம்

௪அ இயலபு - ஸவபாவம். ௪௯. பெருமபேறு - நிாவாணம்.

௫உ. இவறறையென்றது நானகு சததியஙகளையும் அவற்றை நன்கு விளககுந துவாதச நிதானஙகளையும.

௫௧ - ௪. பேதைமையென்பது மயஙகிக கண்டதுமறந்து கேட்டது தெளிதலென்க, "பேய்மை யாக்குமிப் பேதைமைக் கள்வனோடுடனுயக,

(பி - ம்.) ௪௧ 'போனது மின்றி முடிதலுமினறி' ௪அ. 'வகுதத வீராறும், ௫0 - ௫௧. 'நாகமிகுவாபேதையெனப' ௫உ - ௩. 'மயங்கவியற்படும்'

உலக மூன்றினு முயிரா முலகம்
அலகில பலவுயி ரறுவகைத் தாகும்
மக்களுந் தேவரும் பிரமரு நரகரும்
தொக்க விலங்கும் பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையாற்
சொல்லப் பட்ட கருவிற் சார்தலும்
கருவிற் பட்ட பொழுதினுட் டோற்றி
வினைப்பயன் விளையுங் காலை யுயிர்கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டும்
தீவினை யென்ப தியாதென வினவின்
ஆய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீவிழை

---

காமமுற் றுமதன பயத்தினிற் காமனைக கடந்து, நாம ரூஉம் புகழ்கொடிபப தோரா நனனெறி நண்ணும், வாமன் வாயமொழி மறநதிட்டு மறந்தொழி கின்றும'' (வீர. யாப்பு. ௫, மேற) என்று கூறப்பட்டிருத்தல் காண்க. இவ்வடிகளாற பேணத்தமையது இலக்கணம கூறப்பட்டது.

௫௫. உலகமூன்றினும் - மூன்றுலகங்களுள்ளும; உலகம் முப்பத் தொனறென்பாரெனின மஹாராஜிகலோக முதலிய உலகம் இருபத்தாறி னையும மேலுலகென்றும், நரகலோக முதலிய உலகமநான்கினையும கீழுல கென்றுங்கொண்டு அவற்றை நடுநின்ற மனுஷ்யலோகததுடன் கூட்டி, இந்நூலாசிரியா உலகம் மூன்றெனக் கொண்டார் போலுமெனக, "திரு மேவு பதுமஞ்சேர் திசைமுகனே முதலாக, உருமேவியவதரித்த வுயிரனைத்து முயக்கொள்வான், இவ்வுலகுங் கீழுலகு மிசையுலகு மிருணீங்க, எவ்வுலகுந் தொழுதேத்த வெழுந்தசெழுஞ் சுடரென்ன, பெரியோயாநீ" (வீர. யாப்பு ௧௧, மேற்) என்பதில் உலகங்கள் மூன்றாகக் கூறப்பட்டிருத்தல் காண்க உயிராமுலகம் - சேதனப்பிரபஞ்சம்.

௫௬. அலகில - அளவில்லாதன.

௫௬ - அ. மக்களும் தேவரும் பிரமரும் நரகரும் விலங்கும் பேயு மென்று பல்லுயிர் அறுவகைத்தாகும், இவ்வறுவகைப்பிறப்பும் ஷட்கதி யெனப்படும்.

௬௨. "விளைவினகண, வீயா விழுமந் தரும" (குறள் ௨௮௪)

௬௦ - ௬௩. (செயகை) சார்தலையும இன்பத்தையும் கவலையையுங் காட்டும்.

௬௬. காமத்தீவிழைவு · இருபெயரொட்டு

(பி -ம்) ௫௫. 'உயிராகுலமு' ௫௬ - எ. 'வகைத்தாளுந் தேவரும ௫௭ - அ. 'நரகரும, விலங்குமபேயுமன்றே' ௫௯ - ௬௧ 'என்றிருபயத்தாற் சொல்லப்பட்டபிறப்பினுட் டோன்றி'

உலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவர்
இத்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
நல்வினை யென்ப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரும் மக்களும் பிரமரு மாகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவர்

---

௬௮. கடுஞ்சொல் - வன்சொல்.

௭௦. பொல்லாக்காட்சி - மயக்கம்; அஃதாவது உண்மையையறியாமை.

௬௪ - ௭௨. இவ்வடிகளிற் கூறிய பத்துக் குற்றங்களையும் தசதோஷங்களென்பது பௌத்தநூல் வழக்கு.

௭௭. சொல்லியபத்து, "மருட்டரு மனம்வாய் மெய்யிற் கொலை முதல் வினைபத் தாமே" (சித்தாந்தத்தொகை, நீல. புத்த. ௬௫, சமய.) நீங்கலாவது, இப்பத்தினின்றும் நீங்கிக் கொல்லாமை முதலிய பத்தினையும் பெறுதல்; 'பள்ளிவலம்புரிதல் தவஞ்செய்தல் தானஞ்செய்தல் என்னும் காயத்தின்குணம் மூன்றும், மெய்யுரை, நல்வார்த்தை, இனியனகூறல், பயன்படு சொற்கூறல் என்னும் வாக்கின்குணம் நான்கும், அருணினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என்னும் மனத்தின்குணம் மூன்றும் ஆகிய நற்குணம் பத்து' என்று கூறுவாருமுளர், சிவ. சித். சௌத்திராந்திகன்மதம், ௩௦, உரை.

௭௮. சீலத்தின் வகைகளை இந்நூல் ௨௧ - ஆம் காதை, ௫௭ - ஆம் அடிக்குறிப்பிற் காண்க.

௮௧. மகிழ்ச்சி வினைப்பயன் - இன்பம். மகிழ்ச்சிவினை - புண்ணியம்.

௬௪ - ௮௧. இவ்வடிகளிற் கூறியதுபோலவே, "விலங்கு நரகரும் பேய்களு மாக்கும், கலங்கனாத் தீவினை கடிமின் கடிந்தாற், றேவருமக்களும்

(பி - ம்.) ௬௮ - ௯. 'பயமில, சொல்லே சொல்லிற் றோன்றுவ நான்கும்' ௭௧ - ௨. 'மூன்றும்பத்துவகை' ௭௩. 'இத்திறப் படாஅர்' ௭௭. 'தொகுதிநீங்கி'

உணர்வெனப் படுவ தூறங்குவோ ருணர்விற்
புரிவின் றாகிப் புலன்கொளா ததுவே
அருவுரு வென்பதவ் வுணர்வு சார்ந்த
உயிரு முடம்பு மாகு மென்ப
வாயி லாறு மாயுங் காலை
உள்ள முறுவிக்க வுறுமிட னாகும்
ஊறென வுரைப்ப துள்ளமும் வாயிலும்
வேறு புலன்களை மேவுத லென்ப
நுகர்வே யுணர்வு புலன்களை நுகர்தல்

---

பிரமரு மாகுதி, ராகலி னலவினை யயரா தோமபுமின" (உ௫ ௪௧ - ௪) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

௪௫ - ௮௧ மு. மணி ௨௪. ௧௦௫ - ௪௦.

௮௨ உணர்வு இது பஞ்சஸ்கந்தத்துள் ஒன்றாகவும் கூறப்படும். உறங்குவோருணர்வின் - தூங்குவோருடைய உள்ளம் கர்த்ருத்வமும் போக்த்ருத்வமுமின்றி ஸாக்ஷிமாத்திரமாக நிற்றல்போல.

௮௩. புரிவு இன்றாகி - செயலுந்தொழில் யாதொன்றுமின்றி, புலன் கொள்ளாதது - விஷயங்களை அனுபவியாது ஸாக்ஷிமாத்திரையாயிருத்தலை யுடையது.

௮௨ - ௩ உணர்வு, உள்ளம், விஞ்ஞானமென்பன ஒரு பொருட் சொற்கள், இதுவே கருமத்தொகுதியோடுகூடிய வியவகாரதசையில் உயி ரென்று வழங்கப்படுமென்பதும், முடிவில் ஆன்மாவென்று ஒன்று இல்லை யென்பதும் பௌத்தர்கொள்கை, நீல. புத்த. ௯௯ - ௬, சமய. ஆன்மா இல்லை யென்பதனால் இவர்கள் அநான்மவாதிகளென்று கூறப்படுவர், இந்த இரண்டடிகளாலும் உணர்வின் இலக்கணம் கூறப்பட்டது.

௮௪ - ௫. இவ்விரண்டடிகளாலும் அருவுருவின் இலக்கணம் கூறப் பட்டது.

௮௬ வாயில், துவாரம், வழி, ஆயதனம், இடமென்பன ஒரு பொருட்சொற்கள்.

௮௭. உள்ளமுறுவிக்க - விஞ்ஞானத்தில் விஷயங்களையடைவித்தற்கு, உறும் இடனாகும் - உற்ற இடங்களாகும், இடங்கள் மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் இந்திரியமைந்தும் மனமொன்றும்.

௮௬ - ௭ இவ்விரண்டடிகளாலும் வாயிலினிலக்கணம் கூறப்பட்டது.

௮௮. ஊறு - ஸ்பரிசம் ௮௯ புலன்களை - விஷயங்களை.

௮௮ - ௯. ஷடாயதனங்கள் விஷயங்களை ஸ்பரிசித்தல் ஊறெனப்படு மென்பர்; இவ்விரண்டடிகளாலும் ஊற்றின் இலக்கணம் கூறப்பட்டது.

௯௦ இதனால் நுகர்வினிலக்கணம் கூறப்பட்டது.

(பி - ம்) ௮௪ - ௫ 'மருவுணர்வென்பதவ்வுருவுசார்ந்துயிரு' ௮௬ 'வாயிலூறுமாயுங' ௮௮ 'ஊறன்றுரைப்பது' ௮௯ - ௯௦. 'வேவுதலென் பது நுகர்வெனப்படுவதுணர்வு புலனுகர்தல்'

வேட்கை விரும்பி நுகர்ச்சி யாராமை
பற்றெனப் படுவது பசைஇய வறிவே
பவமெனப் படுவது கரும வீட்டம்
தருமுறை யிதுவெனத் தாந்தாஞ் சார்தல்
பிறப்பெனப் படுவதக் கரும்பப் பெற்றியின்
உறப்புணர் உள்ளஞ் சார்பொடு கதிகளிற்
காரண காரிய வுருக்களிற் றோன்றல்
பிணியெனப் படுவது சார்பிற் பிறிதாய்
இயற்கையிற் றிரிந்துடம் பிடும்பை புரிதல்
மூப்பென மொழிவ தந்தத் தளவும்
தாகருநிலை யாமையிற் றருதளர்ந் திடுதல்

---

௯௧. வேட்கை - த்ருஷ்ணை; ஆராமை - நிரம்பாமை, "ஆராவியற்கை அவா" (குறள். ௩௭0.) நிரம்பாமையாவது - தாமேயன்றித் தம்பயனும் நிலையாமையின், வேண்டாதனவாகிய பொருள்களை வேண்டி மேன்மேல் வருதல்; இதனால் வேட்கையதிலக்கணம் கூறப்பட்டது.

௯௨. பசைஇய - ஒட்டிக்கொண்ட, இதனாற் பற்றின் இலக்கணம் கூறப்பட்டது.

௯௩. ஈட்டம் - கூட்டம், ஈண்டுக்கூறியதுபோலப் பவத்தைக் கருமத்தொகுதியென்று பின்னும் கூறுவர், ௧௧௩, ௧௪௨.

௯௩-௪. இந்த இரண்டடிகளாலும் பவத்தின் இலக்கணம் கூறப்பட்டது.

௯௫. கரும்பப்பெற்றியின் - கருமங்களின் இயல்போடு.

௯௬. உறப்புணருள்ளம் - மிகப்புணர்ந்த விஞ்ஞானம், சார்பொடு கதிகளில் - சம்பந்தத்தோடு கூடிய பிறப்புவகைகளில்.

௯௭. இங்கே, 'காரண காரிய வுருக்களிற் றோன்றல்' என்பதற்கேற்ப, "அன்புடை யாருயி ரரசற் கருளிய, வென்புடை யாக்கை" (௨௫: ௧௭0-௭௧) என்று முன்னும் கூறியிருத்தல் காண்க.

௯௬-௭. உள்ளம் தோன்றலெனக.

௯௫-௭. இவ்வடிகளால் தோற்றத்தின் இலக்கணம் கூறப்பட்டது.

௯௮. பிணி - வியாதி. பிறிதாய - வேறாகி.

௯௯. இயற்கை - ஸ்வபாவம். திரிந்து - வேறுபட்டு. இடும்பை - துன்பம்.

௯௮-௯. இவ்வடிகளாற் பிணியின் இலக்கணம் கூறப்பட்டது.

௪00-௪0௧. அந்தம் - மரணம். இவ்வடிகளால் மூப்பின் இலக்கணம் கூறப்பட்டது.

(பி-ம்.) ௯௪. 'தருவதுமுறையென' ௯௬-௭. 'உறப்புளஞ் சார்பொடுகதிகளிற் றோன்றல்' ௯௮. 'சார்பிறபிறகாய்' ௯௯ 'திரிந்து இடும்பையுறுதன' ௪00-௪0௨. 'மூப்பெனப் படுவ தளவுதாக்குத் தெளிவுறுதல் சார்ந்தென'

சாக்கா டென்ப தருவுருத் தன்மை
யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்
பேதைமை சார்வாச் செய்கை யாகும்
௧௦௫ செய்கை சார்வா வுணர்ச்சி யாகும்
உணர்ச்சி சார்வா வருவுரு வாகும்
அருவுருச் சார்வா வாயி லாகும்
வாயில் சார்வா வூறா குமே
ஊறு சார்ந்து நுகர்ச்சி யாகும்
௧௧௦ நுகர்ச்சி சார்ந்து வேட்கை யாகும்
வேட்கை சார்ந்து பற்றா குமே
பற்றிற் றோன்றுங் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரண மாக
வருமே யேனை வழிமுறைத் தோற்றம்
௧௧௫ தோற்றஞ் சார்பின் மூப்புப்பிணி சாக்கா
டவல மரற்றுக் கவலைகை யாறெனத்
தவலி றுன்பந் தலைவரு மென்ப
ஊழின் மண்டில மாச்சூழுமின் நுகர்ச்சி
பேதைமை மீளச் செய்கை மீளும்
௧௨௦ செய்கை மீள வுணர்ச்சி மீளும்
உணர்ச்சி மீள வருவுரு மீளும்

---

௧௦௨ - ௩. சாக்காடு - மரணம். அருவுருத்தன்மையினையுடைய உடம்பு அத்தமிக்கும் சூரியனைப்போல மறைந்துபோதல். இந்தவுவமையே இந்நூலில் முன்பும் (௨௪ : ௧௦௧ - ௨) கூறப்பட்டிருத்தல் காண்க. இவ்வடிகளால் சாக்காட்டின் இலக்கணம் கூறப்பட்டது.

௯௮ - ௧௦௩. இவ்வடிகளால் பிணி மூப்புச் சாக்காடென்னும் வினைப்பயன்களுக்கு இலக்கணங் கூறினார்.

௧௧௬. அவல முதலியவற்றின் இலக்கணங்களை இப்புத்தகத்தின் ௫௩ - ஆம் பக்கத்திற் பார்க்க.

௧௧௫ - ௭. மூப்பு முதலியன துக்கமெனவும் கூறப்படுமாதலின், அவைகள், 'தவலிறுன்பம்' எனப்பட்டன.

௧௧௮. ஊழ் இல் மண்டிலமா - முடிவில்லாத வட்டமாக; ஊழ் - முடிவு; "ஊழ்பாடின்றி" (௩௦ : ௩௭) என்றார் முன்னும். இந்நுகர்ச்சி சூழுமெனக், ஊழின் - முறைமையினையுடைய எனினுமாம்.

௧௦௪ - ௧௮. இவ்வடிகளால் துக்கமும் துக்கோற்பத்தியுமாகிய வாய்மைகளிரண்டும் கூறப்பட்டனவென்பர்.

௧௧௯. மீள - நீங்க, இல்லையாக வென்றுமாம்.

(பி - ம்.) ௧௦௩ 'மறைந்தீறுதல்' ௧௦௭ 'அருவுருச்சார்வா' ௧௧௩ - ௪ 'காரணமாகி, வருமப்பாயானைவழி'

அருவுரு மீள வாயின மீளுமே
வாயின் மீள வூறு மீளும்
ஊறு மீள நுகர்சசி மீளுமே
நுகாசசி மீள வேடகை மீளும்
வேடகை மீளப பற்று மீளும
பறறு மீளக கருமத தொகுதி
மீளுங கருமத தொகுதி மீளத
தோற்ற மீளுந தோற்ற மீளப
பிறபபு மீளும பிறபபுப பிணிமூபபுச்
சாககா டவல மாற்றுக கவலை
கையா றென்றிக கடையில துன்பம
எலலா மீளுமிவ வகையான மீட்சி
ஆதிக் கணட மாகு மென்ப
பேதைமை செயகை யெனறிவை யிரணடும்
காரண வகைய வாத லானே
இரண்டாங கணட மாகு மெனப
உணாசசி யருவுரு வாயி லூறே
நுகாசசி யென்று நோககப படுவன
முன்னவற் றியல்பாற துனனிய வாதலின
மூன்றுங் கணடம வேடகை பறறுக
கரும வீட்ட மென நகட டுரைபபவை
மறறப பெறறி நுகாசசி யொழுககினுட்
குறறமும வினையு மாக லானே

---

கசூO. பிறபபு - ஈணடுப புனாஜனனம், இபபடியே பினனும வரும.

கசூசூ. மீடசி இவவகையினையுடைதது

ககசூ - சூசூ இவவடிகளால துககநிவாரணமாகிய மூனருவதுவாயமை கூறபபடடதெனபா.

இனி, நான்கு கண்டங்களும் முறையே கூறபபடும்

கசூச - சு பேதைமையும செயகையுமாகிய இரணடும காரணங களாகவுளளனவாதலின, இவை முதற்கண்டமெனறு கூறபபடும

கசூஎ - சO. உணாசசி முதலிய ஐநதும, பேதைமை செயகையென னும் இரணடாலும வநதனவாதலின, இவை இரண்டாங் கண்டமெனறு கூறபபடும

கசக - ச வேடகை முதலிய மூனறும் மேறகூறிய நுகாசசியொழுக (பி - ம்) கசக - உ 'பறறு, கருமவீடகம' கசச. 'பற்று நுகாசசி'

நுகர்வே வேட்கை பற்றே பவமே
தோற்ற மென்றிவை சொல்லுங் காலை
எதிர்கா லமென விசைக்கப் படுமே
பிறப்பே பிணியே மூப்பே சாவே
அவல மரற்றுக் கவலைகை யாறுகள்
குவிய குற்றமெனக் கூறப் படுமே
அவாவே பற்றே பேதைமை யென்றிவை
புனையுமடை பவமும் வினைசெய லாகும்
உணர்ச்சி யருவுரு வாயி லூறே
நுகர்ச்சி பிறப்பு மூப்புப்பிணி சாவிவை
நிகழ்ச்சிப் பய னுங்கே நேருங் காலை
குற்றமும் வினையும் பயனுந் துன்பம்
பெற்ற தோற்றப் பெற்றிக ணிலையா
எப்பொரு ளுக்கு மான்மா விலையென
இப்படி யுணர்ந் திவைவீ டியல்பாம்
உணர்வே யருவுரு வாயி லூறே
நுகர்வே பிறப்பே பிணிமூப்புச் சாவே
அவல மரற்றுக் கவலைகை யாறென
நுவலப் படுவன நோயா கும்மே
அந்நோய் தன்னக் குப

---

தனவென்றும், உணர்வுமுதல் தோற்றமீறானவை நிகழ்காலத்தனவென்றும், தோற்றமுதற் கையாறிறுதியாகவுள்ளவை எதிர்காலத்தனவென்றும் கூறப்படும்.

௧௬௯ - ௭௦ அவாவும் பற்றும் பேதைமையுமாகிய இம்மூன்றும் குற்றமென்று கூறப்படும்.

௧௭௧ பவமும் செய்கையும் வினையாகும்.

௧௭௨ - ௪ உணர்ச்சி முதலிய ஆறும் மூப்பு பிணி சாக்காடென்னும் வினைப்பயனென்றும் ஆகிய ஏழும் பயனாகக் கூறப்படும்.

௧௭௬. தோன்றிய இயல்பையுடைய பொருள்கள் நிலையா.

௧௭௫ - ௮ இவ்வடிகள் முன்பு, "நிலையில வறிய துன்பமென நோக்க, உலையா வீட்டிற் குறுதி யாகி" (௩௦ ௩௦ - ௩௧) என்றதனை விளக்கி நின்றன.

௧௭௯ - ௮௮ உணர்வுமுதல் வினைப்பயனீறாகவுள்ளவேழும் துக்கமென்று கூறப்படும்; அதற்குப் பேதைமை முதலிய ஐந்தும் காரணமாகும், ஆதலால் தோன்றுதல் துன்பம், அதற்குக் காரணம் பற்று; வீடு இன்பம்,

(பி - ம்) ௧௭௫ 'துன்பமும்' ௧௭௮ 'உணருமென்பிவை' ௧௮௦ - ௮௧ 'பிறப்பே மூப்பேசாவேயவலவாற்றுக்கவலைக்கையாறென்ன'

பேதைமை செய்கை யவாவே பற்றாக்
கரும வீட்டமிவை காரண மாகும்
துன்பத் தோற்றம் பற்றே காரணம்
இன்பம் வீடே பற்றிலி காரணம்
ஒன்றிய வுரையே வாய்மைநான் காவது
உருவு நுகர்ச்சி குறிப்பே பாவனை
உள்ள வறிவிவை யைங்கந்த மாவன

---

அதற்குக்காரணம் பற்றினமையே, என்கிற நான்குரைகளும் நான்கு வாய்மைகளாகும், "பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம், பிறவா ருறுவது பெரும்பே ரின்பம், பற்றின் வருவது முன்னது பின்னது அற்றோ ருறுவது" (உ · ௬௪ - எ) என்று முன்பும் வந்திருத்தல்காண்க. இவற்றை ஸத்திய சதுஷ்டயமென்பர் நீலகேசியுரையாசிரியர், இந்நான்கினுள் துக்கநிவாரண மார்க்கம் எட்டுவகைப்படும், அஃது அஷ்டாங்கமார்க்கமென்றும் விசுத்தி மார்க்கமென்றும் பழுதிலாவாழ்க்கை யென்றும் கூறப்படும். இவ்வெட்டாவன — நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுள்ளத்தோர் தலைப்பாடு என்பன, "பழித்திட்ட பழுதில வாழ்க்கை யெட்டையும் பாரித்து" (சிவ. சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன் மதம், ௩க), "நற்காட்சி நல்லெண்ணம் நல்வாய்மை நல்வாழ்க்கை, நற்செய்கை யோடைந்து நாடு", "நன்முயற்சி நன்மாக் கடைப்பிடி நல்லோர்தம்பால், செல்கையுடனெட்டெனத்துந் தேறு" (பரமத்திமிரபானு) என வருவனவற்றாலறிக. இவ்வெட்டும் ஸம்யக் திருஷ்டி, ஸம்யக் ஸங்கற்பம், ஸம்யக் வாக்கு, ஸம்யக்கருமம், ஸம்யக் ஆஜீவம், ஸம்யக் வியாயாமம், ஸம்யக்ஸ்மிருதி, ஸம்யக் ஸமாதியென்று பெயர்பெறுமென்றும், இவைகளே ஜனனமரண துக்கத்தை மாற்றுதற்குரிய வழியென்றும் அசுவகோஷபோதிஸத்துவரால் வடமொழியிற் செய்யப்பட்டுள்ள புத்தசரித்திரத்தின் கடு - ஆம் வாக்கத்தால் தெரிகின்றன.

கஅகூ நுகர்ச்சி - வேதனை ககூ0 உள்ளவறிவு - விஞ்ஞானம்

கஅகூ - கூ0 உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானமென்னும் இவ்வைந்தும் பஞ்சஸ்கந்தமெனப்படும் (சிவ. சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், ௬) அவற்றுள் உருவக்கந்தம், பூதவுரு உபாதாயவுருவென இருவகைப்படும். பூதவுரு - பிருதுவி, அப்பு, தேயு, வாயு என்னும் நான்குமாம், உபாதாயவுரு - வலி, இரதம், வன்னம், கந்தமென்னு நான்குமாம், வேதனை - குசலவேதனை (சுகவறிவு), அகுசல வேதனை (துக்கவறிவு), குசலா குசலவேதனை (சுகதுக்கவறிவு) என்னு மூன்றுமாம். குறிப்பு - மெய் வாய் கண் மூக்குச் செவியென்னுமைந்தும் மனமொன்றும் ஆகிய ஆறுமாம் பாவனையாவது - மனோவாக்குக் காயங்களினால் உண்டாகும் நல்வினைபத்தும் தீவினைபத்தும் ஆகிய இருபதுமாம் "எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞான, மொட்டிய குறிப்போ ராறு செய்கையு மிருப தாகக், கட்டிய

(பி - ம்.) கஅரு 'காரணமாகும்' கஅகூ 'குறிப்பினை, யுள்ளமறிவினை'

அறுவகை வழக்கு மறுவின்று கிளப்பிற்
றொகையே தொடர்ச்சி தன்மை மிகுத்துரை
இயைந்துரை யென்ற நான்கினு மியைந்த
உண்மை வழக்கு மின்மை வழக்கும்
௧௪௫ உள்ளது சார்ந்த வுண்மை வழக்கும்
இல்லது சார்ந்த வின்மை வழக்கும்
உள்ளது சார்ந்த வின்மை வழக்கும்
இல்லது சார்ந்த வுண்மை வழக்குமெனச்
சொல்லிய தொகைத்திற முடம்பு நீர் நாடு

பஞ்ச கந்தங் கணத்தினிற் பங்கமாகும், தொட்டநாற் பத்து மூன்றுஞ் சுத்த நூற்றுணிவுதானே" (சிவ. சித். பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், ௩0, மேற்) என்று வருதல் காண்க. இன்னும் இவற்றினிலக்கணங்களை, "ஒங்குருவம் வேதனை யுள்ளக்குறிப்புப் பாவனையே, தாங்குணாவென்றைந் தாங்கந்தம்" எ-ம், "உருவமுடல் பூத முபாதாய மென்னு, மிருவிதத்தி னுளுமெழு மென்" எ-ம், "வேதனை துன்பின்ப மிவற்றின் விரவலுமென், றோதவொரு மூன்றாமென் றோர்" எ-ம், "பொறிவிதமோ ரைந்தும் பொறியைப் பொருந்தி, அறிமனமுங் குறிப்பென் றுய" எ-ம், "வாக்கு மன மாக்கையிவை பாவனையென் றேமதியா, யாக்குமிவை தாமறம்பா வம்" எ-ம், "இந்நால் வகையினுமேயந் தையமற வெண்ணுமெண்ணம், விஞ்ஞான மென்றே விளம்பு" எ-ம், "இந்தவித மைந்துஞ்சந் தானத் தெழுந்தழிந்து, பந்தமென வேநீதான் பார்" எ-ம், "அறக்கெடுத்த லேபரம முத்தியிவை யைந்து, மறக்கெடுமா றுங்கூறு வாம்" எ-ம் வரும் திருவாக்காலும் (பரமதத் திமிரபானு) அறிந்துகொள்க. இந்தப் பஞ்சஸ்கந்தக்கூட்டமே உயிரென்பர், அது, "கவையொப்பப் பானை விரலாற் றடவி, மிசைப்பப் படிநைப் பிடியென் றதுபோலவையப் படிகந் தங்களைத் தொக்கு, நவையைப் புரிந்தல் லுயிரா மெனவும்" (நீல. புத்த. ௩0) என்னும் பாட்டால் நன்குணரத்தப் படுகின்றது. இவைகளைத் திரிபிடகங் குறிப்பென்றும், அது வடமொழியில் ஸமஜ்ஞாஸ்கந்தமென்று பெயர் பெறுமென்றும் கூறுவாரும், இரண்டொன்றிற்கு வேறு இலக்கணம் கூறுவாருமுளர்.

௧௪௩-அ அறுவகை வழக்காவன தொகை, தொடர்ச்சி, தன்மை மிகுத்துரை, இயைந்துரை யென்ற நான்கொடுஞ்சேர்ந்த உண்மை வழக்கு முதலிய ஆறுமாம். இயைந்துரையைத் தொகையிலடக்கி மூன்றென்பாரு முளர்.

௧௪௯. தொகைத்திறமாவது: உடம்பும் நீரும் நாடுமென்க, என்றது பலதாதுக்களின்கூட்டம் உடம்பென்றும் பலதுளிகளின்கூட்டம் நீரென்றும் பலவூர்களின்கூட்டம் நாடென்றும் வழங்கப்படுமாறு போலப் பஞ்சஸ்கந்தங்களின்கூட்டமே ஆன்மாவென்று வழங்கப்படுவது தொகையென்ற

(௧௭-ம்) ௧௪௫-அ 'சார்ந்தவுண்மைவழக்கு, மில்லது சார்ந்த வின்மை சார்ந்தவின்மை வழக்கும்'

தொடர்ச்சி வித்து முளைதா னென்றிந்
நிகழ்ச்சியி லற்றை நெல்லென வழங்குதல்
இயல்பு மிகுத்துரை யீறுடைத் தென்றும்
தோன்றிற் றென்று மூத்த தென்று
மூன்றி னொன்றி னியல்புமிகுத் துரைத்தல்
இயைந்துரை யென்ப தெழுத்துப் பல்கூட்டச்
சொல்லெனத் தோற்றும் பல்நாட் கூடிய
எல்லையைத் திங்க ளென்று வழங்குதல்

---

வாறு, இனி இத்தொகையினை உண்மைவழக்கு இன்மைவழக்கு என்பவற்றோடு சேர்த்து 'சுவருமரமும் ஆக்கையும் கற்றையுங்கூடின சமுதாயத்தை வீடென்று வழங்குமாறுபோலவும் பலவூருங்கூடின சமுதாயத்தை நாடென்றும் பற்றென்றும் வழங்குமாறுபோலவும் பஞ்சஸ்கந்தக் கூட்டத்தை ஆன்மாவென்று வழங்குவது கற்பஞானமெனக்கொள்க' என்றும், 'மரம் கற்றை முதலியவற்றைப் பிரித்தால் வீடில்லையானாற் போலவும் ஊர்களைப் பிரித்தாற் பற்றும் நாடுமில்லையானாற் போலவும் ஐந்து ஸ்கந்தங்களையும் பிரித்துணர்ந்தக்கால் ஆன்மா இல்லையாமெனக் கொள்க' (சிவ சித்தி. பரபக்கம், உரை) என்றும் விளங்க அவற்றிற்கு உதாரணங்காட்டினாருமுளர்; "ஒருவனென் றேதப்பட்டா னுருவாதி யைந்துங் கூடி, வருவதொன் றுரைத்த தொகையுண்மை வழக்கதாகு, முருவமங் காதியாய வைந்தையு மொருவ னின்று, தருவது தொகையினின்மை வழக்கதாஞ் சாற்றுங் காலே" (சிவ சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன் மதம், ௭)

௨௦௦ - ௨௦௧. தொடர்ச்சியாவது - வித்திலிருந்து முளையும் முளையிலிருந்து தாளுந்தோன்றி நிகழ்ந்து நெல்லென்று வழங்குமாறுபோல எல்லாம் காரணகாரிய சம்பந்தமாகவுள்ளதென்பது, "காரண காரியத்தின் றொடர்ச்சியாய்க் கால மூன்றின், சேர்வுறத் தோன்றுங் கெட்டு மென்கை தொடர்ச்சி யுண்மை, யோர்தரி னொருவனேயெக் காலத்து முள்ளா னென்று, தேர்வது தொடர்ச்சி யின்மை வழக்கதாஞ் செப்புங் காலே" (சிவ சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன் மதம், ௮) என்று இத்தொடர்ச்சியை உண்மை வழக்கு இன்மைவழக்கென்பவற்றோடு சார்த்தி அவற்றிற்கு இலக்கணங் கூறியிருத்தல் காண்க.

௨௦௨ - ௪. இயல்பு மிகுத்துரை - தன்மைமிகுத்துரை. தன்மை மிகுத்துரையாவது - ஒரு பொருளினுடைய இறப்புபிறப்பு மூப்பு என்பவற்றுள் ஒன்றனியல்பை மிகுத்துச் சொல்லுதல். இதனை உண்மை வழக்கு இன்மை வழக்கென்பனவற்றோடு சார்த்தி, "தோற்றிய பொருள்க ளெல்லா நாசமாமென்று சொல்லு, மாற்றமுன் னுரைத்தன் மற்றை மிகுத்துரை வழக்கி னுண்மை, போற்றிய பொருள்கண் கட்குப் போனது போனமுதிர்ந்து, வேற்றுமைப்பட்ட தென்கை மிகுத்துரை யில்வழக்கே" (சிவ சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன் மதம், ௯) என்று முறையே அவற்றிற்கு இலக்கணம் கூறியிருத்தல் காண்க

௨௦௫ - ௭ தொகைக்கும் இயைந்துரைக்கும் வேற்றுமையாதோ

(பி - ம்) ௨௦௧ 'நிகழ்ச்சியிலற்றை'

செய்வா னொடுகோட் பாடிலை யென்றும்
எய்துகா ரணத்தாங் காரிய மென்றும்
அதுவு மன்றத லாததுமன்றென்றும
விதிமுறை தொகையினுல் விரிந்த நான்கும
௨௩௫ வினவிடை நான்குள
துணிந்து சொல்லல் கூறிட்டு மொழிதல்
வினவின் விடுத்தல் வாய்வா ளாமையெனத்
தோனறியது கெடுமோ கெடாதோ வென்றூற்
கேடுண் டென்ற றுணிந்துசொல லாகும்
௨௪௦ செத்தான் பிறபபா னோபிற வானோ
என்று செப்பிற்
பற்றிறந தானோ வன்மக னோவெனல்
மிகக்கூ றிட்டு மொழிதலென விளமபுவர்

௨௩௩. செயவான் - கருத்தா. இவ்வடியாற் கூறபபட்டது புரிவின்மை நயததாற் போநத பயனெனக.

௨௩௨ - ௩. இவவடிகளாற் கூறப்பட்ட இரண்டும் இயலபுநயத்தாற் போந்த பயன்களெனக்கொள்க, இஙஙனஙகொளளாமல இநத இரணடு பயனையும் பிரித்து முன்னதை முனனதனோடு கூட்டினும் பொருந்தும.

௨௩௪. விரிநத: முற்று நானகும விரிததனவெனக, நான்கும - நான்கு பயன்களும்.

௨௩௫ வினக்களுக்குரிய விடைகளென்க

௨௩௬. கூறிட்டுமொழிதல - பகுததுச் சொல்லல்

௨௩௭ வாய்வாளாமை - பேசாதிருததல ; ஆசிரியர் நச்சினார்க்கினியர், "அறுவகைபபட்ட பாாபபனப பக்கமும" (தொல் புறத் ௨௦) என்னுஞ் சூத்திரததில், 'நாலிரு வழக்கிற் றாபதப பககமும' என்பதனுரையில், தவஞ்செய்வோாககு உரியனவாக எடுததுக காட்டிய, 'ஊணசையினமை, நீரநசையினமை, வெபபமபொறுத்தல, தட்பம பொறுததல, இடம வரையறுததல், ஆசனமவரையறுததல, இடையிட்டு மொழிதல, வாய்வாளாமை' என்னும் எட்டினுள் இது வநதிருததல காணக.

௨௩௬ - ௭ துணிநதுசொலலல, கூறிட்டுமொழிதல, வினவின விடுத்தல், வாயவாளாமையென நானகுவிடைகளுள்ளன.

௨௩௮ - ௯. தோனறியது - உணடான பொருள், தோன்றிய பொருள். கெடுமென்பது ஒருதலையாதலின், ஈணடுக்கேடுணடென்றல் துணிநது சொல்லலாயிறறு, துணிநது சொலலலெனனும விடையின் இயலபு கூறப்பட்டது.

௨௪௦ - ௪௩. கூறிட்டுமொழிதலென்னும் விடையின் இயல்பு கூறபபட்டது

(பி - ம்) ௨௩௩. 'தொடாபாடிலை யெனறும்' ௨௩௨ - ௩, 'காணததாங்காரியமெனறுமதுவு மன்ற தாாதுவு மனறே' ௨௩௪ - ௫. 'முறை தொகை வினவிடை நான்குள்' ௨௩௯ 'உண்டென்னிற்றுணிந்து'

வினவின் விடுத்தன் முட்டைமுந் திற்றே
பனைமுந் திற்றே வெனக்கட் டுரைசெய்
என்றூ லெம்முட் டைக கெபபனை யென்றல்
வாய்வா ளாமை யாகா யபமூப்
பழைதோ புதிதோ வென் று புகல்வான்
உரைகரு மாற்ற முரையா திருததல்
கட்டும வீடு மதன்கா ரணத்த
தொட்டித தருதற் குரியோ ரில்லை
யாமே யுரைத்த பொருள்கட் கெல்லாம்
காமம வெகுளி மயக்கங் காரணம்

---

உ௪௪ - ௬. இநதவடிகளால வினவின விடுததலென்னும விடையின இயலபு கூறபபட்டது. உ௪அ. பழைது - பழையது

உ௪எ - ௯. இநதவடிகளால வாயவாளாமையெனனும் விடையின தியலபு கூறபபட்டது.

உ௩௫ - ௪௯ இவவடிகளிற் கூறிய விடைவகை நானகும தொல்காப்பிய உரையிற கூறபபட்டுளளன ; கிளவி ௬ ௩௩

உ௫௦ கட்டு - பந்தம 'அதன் காரணததது' என்பதனைக்கட்டினேடும வீட்டினேடும தனிததனியே கூட்டுக.

உ௫௩. காமமுதலிய மூனறும முககுற்றமெனபபடும.

உ௫உ - ௩ மேறகூறிய பொருளகளெல்லாவறறிறகும காமம வெகுளி மயககமெனனும இமமூனறுங காரணமாகும ; "காமம வெகுளி மயகக மிவைமூனற, னாமங கெடககெடு நோய" (குறள், ௩௬௦) என று வநதிருததல காணக

இனி, எலலாவறறிறகும காரணமாகிய காமவெகுளி மயககஙகளை முறையே நீககுதறகுரிய பாவனைகள் கூறுவார.

மைததிரீபாவனை கருணாபாவனை முதிதபாவனை அசுபபாவனை உபேக்ஷாபாவனையெனப பாவனை ஐநதுவகைபபடும, அவற்றுள,

௧ மைத்திரீபாவனை: ஒருதுறவி வசதியான ஓரிடததையடைநது தகக ஆசனததிலிருநத பினபு பினவருமாறு தியானிததலாம 'உததமமான பிறபபினையுடைய பிராணிகளெலலாம களிபபுறறு வாழ்வனவாகுக; அவையெலலாம துககம வியாதி துராசையெனனும இவைகளினினறும் விடுபடடனவாகுக, எலலா மனிதாகளும எலலாததேவாகளும நரகவாதையினுற பீடிக்கபபடுகிற யாவரும ஸநதோஷமுடையவாகளாக ஆகுக, அவர்கள துக்கம வியாதி துராசையென்னும இவற்றினினறும் விடுபட்டவா

(பி - ம்.) உ௪௪. 'வினவினவிடுதது விரிககுஙகாலை முட்டை' உ௪௫ - ௬. 'கட்டுரையென்றால' உ௪அ - ௯. 'புகலவானுக்கு' உ௫உ. 'பொருளகளெலலாம'

அநித்தர் துக்க மநான்மா வசுசியெனத

களாக ஆகுக' மைத்ரம் ஸ்நேகம் அன்பு என்பன ஒரு பொருட் சொற்கள்; மைத்திரமென்பது குரோதத்திற்கு மாறானது; அவ்விரண்டும் ஓரிடத்து நிகழா, மைத்திரமென்பது தருஷ்ணையென்னு மாசையன்று, அவித்தை அல்லது மோகம் காரணமாக தருஷ்ணை பிறக்கும்; அதனால் துராசை பிறக்கும். மைத்திரமென்னும் ஸ்நேகத்திலிருந்து துராசை யுண்டாகாது ஒருவனுக்குத் தன் துணைவன் விஷயமாக உண்டாகும் அன்புதான் மைத்திரமென்பது

உ கருணாபாவனை: 'வறியவர்கள் வறுமை நீங்கிச் செல்வமுடையவர்களாக ஆகுக' என்று பாவித்தல் கருணையாவது இரக்கமுள்ள எண்ணம். அஃது, ஒருபிராணி துன்பமுறுவதைக் காணின், மனக்கலக்கத்தையும் அத்துன்பத்தை நிவர்த்தி பண்ணவேண்டுமென்பதையும் ஒருவருக்கு உண்டாக்கும்

௩. முதிதபாவனை: 'ஆக்கமுடையவர்களுடைய நல்ல அதிர்ஷ்டமானது எப்பொழுதும் நீங்காதிருத்தல் வேண்டும், ஒவ்வொருவரும் தத்தமக்கு அமைந்துள்ள நல்வினைப்பயனை அடைக' என்று பாவித்தல் முதிதையென்பதற்குச் சந்தோஷமென்பது பொருள், ஆனால் அஃது உலகப்பொருள்களையுடைமையால் உண்டாகுங்களிப்பன்று, அது மைத்திரி, கருணையென்னும் இரண்டுபாவனைகளுக்கும் சம்பந்தமானது முற்கூறிய மூன்றுவகைப் பாவனைகளுள் ஏதாவதொன்றை அப்பியசிக்குந் துறவி, தான் கருதிய பாவனையை முதலில் சிலமக்களிடத்தும் அப்பால் ஒருதெருவில் வாழ்பவர்களிடத்தும் அப்பால் ஓரூராரிடத்தும் அப்பால் ஒரு தேயத்தாரிடத்தும் முறையே செலுத்திப் பயிலுதல் நலம்

௪. அசுபபாவனை: அசுபமென்பதற்குப்பொருள் அமங்கலம்; நல்ல அதிர்ஷ்டமென்பதன் எதிர்மொழியாயிருப்பதோடு மகிழ்ச்சியின்மை வெறுப்பு என்பனவற்றையுண்டாக்குவதாகவுமுள்ளது. இதைப் பயிலும் ஒரு துறவி, சரீரமானது முப்பத்திரண்டு குற்றத்தாலாக்கப்பட்டதென்றும் சாணியின் குழியில் தோன்றி வளரும் புழுக்களைப்போலக் கருப்பப்பையில் உண்டாகின்றதென்றும் மலங்கழிக்குமிடத்தைப்போல அசுத்தத்தின் கொள்கலனாயிருப்பதென்றும் அருவருப்பான கசிவு அதிலுள்ள நவத்துவாரங்களின் வழியே ஓயாமற் பெருகுகின்றதென்றும் ஜலதாரையைப்போல் வெறுத்தற்குரிய நாற்றத்தை அது வெளிப்படுத்துகின்றதென்றும் பாவித்தல் 'சரீரத்தின் கால அளவை ஒரு நிமிஷமே, மின்னலையும் நுரையையும் நீரிற் போகட்ட உப்பையும் காய்ந்த புலலிற் பற்றிய நெருப்பையும் கடலின் அலையையும் ஆகாயத்திற் சஞ்சரிக்கிற ஜுவாலையையும் புன்னுனியிற்பட்ட பனித்துளியையும் போலப் பிறந்தபோதே அது நாசமாம்' என்று சரீரத்தின் நிலையின்மையைப் பாவித்தலும் அசுபபாவனையின்பாற்படும்

௫. உபேக்ஷாபாவனை எல்லாவுயிர்களையும் சமமாகப் பாவித்தலும் விருப்புவெறுப்பின்றி யிருத்தலுமாம். இது, மற்ற நான்கு பாவனைகளைக் காட்டிலும் மிகவுயர்ந்தது, அருகத்துக்களால் அனுஷ்டிக்கப்படுவது, இது சமசித்தத்துவமென்றும் கூறப்படும்

(பி - ம்.) உ௫௩ - ௪ 'காரண மனிதக்கர் கசயாறபாசுமெயென'

௨௫௫ தனித்துய பார்த்துப பற்றுறுத திடுதல்
மைததிரி கருணை முதிதையென றறிநது
திருநதுநல லுணர்வாற் செற்றமற றிடுக
சுருதி சிநதனை பாவனை தரிசனை
கருதி யுயததுு மயககங கடிக

---

மைததிரி, கருணை, முதிதம, உபேகைஷயெனனும நானகு பாவனைகளும உயாவுபற்றிய பிரஹமவிகாரபாவனையெனறு கூறபபடும; இவை மஹாப பிரஹ்மாககளால அனுஷடிககபபடுவன

௨௫௫ பாாததது - அசுபபாவனை பண்ணி பறறு - காமம

௨௫௪ - ௫. அசுபபாவனையாற காமததையொழிககவெனறவாறு. உடம்பினை அநித்தியம துககம அநானமா அசுசியெனறு பாவித்தல் அசுபபாவனையெனபபடுவதனற் ஸ்ரீலக்ஷணபாவனையெனறுங கூறபபடும. இதனைச சிவஞானசித்தியார், பரபககம சௌதநிராநதிகனமதம, ௨ - ஆம் திருவிருத்தத்துரையிறகாணக இவவசுபபாவனை, "நனகென நாறுமி தெனறிவ் வுடம்பு நயககினற தாயி, னொனபது வாயிலகடோறு முணணின் றழுககுச சொரியத, தினபதொா நாயு மிழுபபத திசைதொறுஞ சீபபிலகு போழதி, னினபநன் றுறற மிதனக ணெவவகையாற்கொள வாமே" எனவும, "உறுபபுக்கடாமுடன கூடி யொனறுயிரைநத பெருமபை, மறைபபில விழைவிறகுச சாாவாய மககுவதேலிவ வுறுபபுக, குறைததன போல வழுகிக குன்றிநது குறைநது சொரிய, வெறுபபிற் கிடநத பொழுதின வேணடப படுவது முணடோ" எனவும, "எனதெனச சிநதித்த லானமற றிவவுடம பினபததுக காணமற, றினையபயத புனகததைப போலச சிறியவு மூததவு மாகி, வனைபப புழுககுந தமாவி காணவும வாழவும படட, வினைய வுடம்பினைப பாவியாதெனன தெனனலு மாமோ" எனவும வருங குண்டலகேசிச் செயயுடகளாலுமுணாததபபடடது, "வினையின வநதது வினைககு விளைவாயது, மிககோ யிதனைப புறமறிப பாாாய" (சீ : ௧௧௩ - ௨௧), "எனபுந தடியு முதிரமும யாககையென . காயநதபசி யெருவை கவாநதுணணுதையும" (௯ ௧0௭ - ௧௭) என இநநூலுளளே வநதன அசுபபாவனையினபாறபடும

௨௫௬ - ௭ மைததிரீபாவனை முதலிய மூனறுலும கோபததைப போககுக

௨௫௮ சுருதி - ஞானநூறபொருளைக கேடடல சிநதனை - சிநதனை, சிநதிததல பாவனை - பாவனை, பாவிததல, இது தெளிதலெனறுங கூறப்படும தரிசனை - அறிதல, மேறகூறிய பாவனையைநதனுள ஈணடுககூறிய சுருதி முதலியன உபேகஷாபாவனையினபாற்படும.

௨௫௯ உயததுு - ஆராயநது

௨௫௮ - ௯ உபேகஷாபாவனையால மயக்கததைப போககுகவெனறவாறு

(பி - ம்) ௨௫௫ 'தமமிறபாாததது' ௨௫௬ - ௮ 'மயிரிறறிரிதிதையு பிகையென றிருதருறற செறறமறறிடுக சுருபசிநதனைபாவனை' ௨௫௮ - ௯ 'பாவனைதெசசனை கருதியுயதலுமயககு'

இருநால வகையான் மனத்திரு ணீங்கென்று
முன்பின் மலையா மங்கல மொழியின்
ஞான தீப நன்கனங் காட்டத்
தவததிறம பூண்டு தருமங் கேட்டுப
பவததிற மறுகெனப பாவைநோற் றனளென்

௩௰ -பவத்திறமறுகெனப் பாவைநோற்ற காதை முற்றிற்று.

---

௨௬௦ இருநாலவகையெனறது, மேறகூறிய சுருதிமுதலிய நானகினை யும். மனத்திருள - மயககம, 'இருநாலவகையான மனததிரு ணீஙகு' என றது அனுவாதம்.

௨௬௧. முன்பினமலையா - பூாவோததர விரோதமிலலாத, மணி ௨௮ : ௧௦௦, ௩௰ : ௬.

௨௬௧ - ௨ மொழியினுற காட்டவென்க.

௨௬௪ பவததிறம் - பிறபபின் வகைகள பாவை - மணிமேகலை

௧ - ௨௬௪. உணாநதோள வணஙகிச சென்று அடைநதபின மொழி வோள் காட்டப பாவைகேட்டுப பூணடு நோறறனளெனக

(பி - ம்.) ௨௬௦ - ௬௨. 'இருணீங்கனனமொழியினறீபநனகனக'

**மணிமேகலை முற்றுப்பெற்றது.**



*

# மணிமேகலைப்பாட்டு

## முதற்குறிப்பு அகராதி


| காதை. | பாட்டு. | | பக்கம். |
|---|---|---|---|
| ௨௮ | அணியிழையாதாரம் | ... | ௨௯௩ |
| ௮ | அநதிமாலைநீங்கிய | ... | ௬௮ |
| ௨௰ | அரசனாணையினாயிழை | ... | ௨௧௭ |
| ௨௫ | அரசனுரிமையோடு | ... | ௨௭௮ |
| ௧௰ | அறவோனாசனத்து | ... | ௧௰௭ |
| ௯ | ஆங்கதுகண்டவாயிழை | ... | ௧௰௧ |
| ௧௮ | ஆங்கதுகேட்டாங்கு | ... | ௧௮௬ |
| ௧௨ | ஆங்கவாதம்முடன் | ... | ௧௩௪ |
| ௧௪ | ஆங்கவற்கொருநாள் | ... | ௧௫௨ |
| ௨௮ | ஆங்குத்தாயரோடு | ... | ௩௨௬ |
| பதி. | இளங்கதிர் ஞாயிறெள்ளும் | .. | ௮ |
| ௫ | இளங்கோன்கண்ட | .. | ௫௪ |
| ௨௯ | இறைஞ்சியவிளங்கொடி | ... | ௩௪௬ |
| ௧௫ | இன்னுங்கேளாயிளங்கொடி | ... | ௧௬௩ |
| ௧௬ | ஈங்கிவள் செய்தி | ... | ௧௬௯ |
| ௮ | ஈங்கிவளின்னணம் | .. | ௯௬ |
| ௧ | உலகநதிரியா | ... | ௧௧ |
| ௨௨ | கடவுண்மண்டிலம் | ... | ௨௪௰ |
| ௨௧ | கடவுளெய்தியநெடுநிலை | ... | ௨௨௮ |
| ௩௰ | தானநதாங்கிச் | ... | ௩௬௫ |
| ௨௭ | நவையறுநன்பொருள் | ... | ௩௰௩ |
| ௨ | நாவலோங்கிய | | ௧௧ |
| ௧௭ | பத்தினிப்பெண்டிர் | . | ௧௭௮ |
| ௪ | பரிதியஞ்செல்லவன் | ... | ௪௨ |
| ௧௧ | மணிமேகலாதெய்வம் | ... | ௧௧௭ |
| ௭ | மணிமேகலைதனை | .. | ௮௫ |
| ௨௪ | மன்னகுமரனை | ... | ௨௬௫ |
| ௨௩ | மன்னவனருளால் | ... | ௨௫௩ |
| ௧௩ | மாபெரும்பாத்திரம் | . | ௧௪௨ |
| ௧௯ | முதியாடிருந்தடி | ... | ௨௰௨ |
| ௩ | வயநதமாலைக்கு | ... | ௨௭ |

# மணிமேகலைப் பிரயோகவிளக்கம்.

---

பழைய நூல்களின் உரைகளிலும் உரையாசிரியர்களால் மணிமேகலையிலிருந்து எடுத்துக் காட்டப்பட்ட மூலங்களுள் இதுவரையிற் கிடைத்தவை வருமாறு —

## இலக்கணக்கொத்து உரை

| சூத்திர எண் | | மணிமேகலை |
|---|---|---|
| கூசு | "மன்னன்குமரன்" | .. ச : கூரு, உச க. |

---

## இலக்கண விளக்கவுரை.

| | | |
|---|---|---|
| எக | "எட்டி குமர னிருந்தோன் றன்னை" | .. ச . ருஅ |
| ,, | "எட்டிப்பூ" | . உஉ . ககரு |
| உசச. | "மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ" | கரு சரு. |
| ,, | "முதுமறை யந்தணர் முன்னிய துரைமோ" | கரு . ருகூ |

---

## சிலப்பதிகாரம்,

### அடியார்க்குநல்லாருரை

| பக்கம் | உரைப்பாயிரம். | |
|---|---|---|
| அ | "நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்" | .. கக : அO. |
| கூ | "நாடகக் காப்பியம்" | .. ,, |

பதிகம்.

| | | |
|---|---|---|
| கக | "இறும்பூது சான்ற" | உO . ருரு. |

ச — அந்திமாலைச் சிறப்புச்செய்காதை.

| | | |
|---|---|---|
| கஉகூ | "எறிகெடுத் திரங்கி" | ரு . ஙகூ |

ரு — இந்திரவிழவூரெடுத்தகாதை

| | | |
|---|---|---|
| கசுO. | "வசித்தொழி லுதவ மாதிரங் கொழுப்ப" | .. கச ருஎ |

சு — கடலாடுகாதை.

| | | |
|---|---|---|
| கககூச. | "சுரியற் றுடி பெடுகாணு குநரும்" | ங . ககசு-உரு. |

கூ — கனாத்திறமுரைத்தகாதை.

| | | |
|---|---|---|
| உருO | "கரந்துரு வெய்திய கடவு ளாளரும்" | ச . கரு |
| ,, | "தேவருமக்களும் நாளினும்" | ... க . சுசு - எ |

கO — நாடுகாண்காதை

| | | |
|---|---|---|
| உசுக. | "நாலேழ் நாளினும்" | க அ |
| உஎக. | "இலவந் திகை யாங்குளர்" | ங சரு - சு. |

கசு — கொலைக்களக்காதை

| | | |
|---|---|---|
| சஉசு. | "நினக்கிவன் மகனு... காரிகை" | .. உக : உகூ-ஙஉ. |

கஎ — ஆய்ச்சியர்குரவை

| | | |
|---|---|---|
| சருக | "முந்தை முதல்வி யடிபிழைத் தாயென" | ... கக : கரு |

ககூ — ஊர்சூழ்வரி.

| | | |
|---|---|---|
| சஎஎ. | "ஊழ்வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது" | சு : கருஉ. |

---

புத்தவாத. உஅ, சுடு. "தீவினை ..பிரமருமாகி" { உச · கஉ௫ ௫௯, ௫0 : சுசு - அ0

மேற்கூறிய உரையாசிரியர்களுட் சிலரும் பிறரும் மணிமேகலையின் மூலவாக்கியங்களையே தமது உரைநடையாகவும் தழுவியெழுதிப் பாராட்டியிருக்கின்றனர் —

## பரிமேலழகர்

குறள், உ0 - ஆம் அதிகாரத்தின் அவதாரிகை - 'பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல்லென வாக்கினகண் நிகழும்பாவம் நான்கனுள்' மணிமேகலை, உச கஉஎ - அ, ௫0 . சுஅ - சு - "பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில், சொல்லெனச் சொல்லிற் றோற்றுவ நான்கும்"

உ0அ - ஆம் திருக்குறளின் விசேடவுரை - 'தன் காலம் வருந்துணையும் புலனாகாது உயிரைப் பற்றிநின்று அது வந்துழி உருப்பதாய தீவினை' மணிமேகலை உசு ௫உ - "உம்மை வினைவந் துருத்தலொழியாது"

௫சுஉ - ஆம் திருக்குறளின் விசேடவுரை - 'பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களாற் றுன்பமுற்று', ௫எ0 - ஆம் திருக்குறளின் விசேடவுரை - 'பிறப்புப் பிணிமூப்பு இறப்புக்கள்' மணி ௫0 கூடு - ௧0௫ "பிறப்பென படுவது கருமப் பெற்றியி, னுறப்புண ருள்ளஞ் சார்பொடு கதிகளிற், காரண காரிய வுருக்களிற் றோன்றல், பிணியெனப் படுவது சார்பிற் பிறிதாய், யியற்கையிற் றிரிந்துடம் பிடுமையைப் புரிதல், மூப்பென மொழிவ தந்தக் தளவும், தாக்குநிலை யாமையிற் றளர்ந்தா றிடுதல், சாக்கா டென்பது தருவுருத் தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்", மணி. ௫0 ககடு - அ - "தோற்றஞ் சார்பின் மூப்புப்பிணி சாக்கா, டவல மாற்றுக் கவலைகை யாறெனத், தவலில் துன்பந் தலைவருமென்ப", மணி ௫0. க௫0 - ௫உ - "பிறப்பு மீளும் பிறப்புப்பிணி மூப்புச், சாக்காடவல மாற்றுக் கவலை, கையா றென்றிக் கடையில் துன்பம்", மணி. ௫0 கசடு - சு - "நான்காங் கண்டம் பிறப்பே பிணியே, மூப்பே சாவென மொழிந்திடு துன்பம்", மணி ௫0, கசஎ - அ - "பிறப்பே பிணியே மூப்பே சாவே, அவல மாற்றுக் கவலை கையாறுகள்"

## அடியார்க்கு நல்லார்

சிலப் க உஎ, தீது - பிறர்நெஞ்சு புகுதல்' மணி உஉ. சசு - "பெண்டி ராயிற் பிறர்நெஞ்சுபுகார்"

சிலப். கடு க - க0 "பசியும் பிணியும் பகையும்" மணி. க எ0

## தெய்வச்சிலையார்

தொல் சொல் சூ க௫ 'செப்பு நான்குவகைப்படும், துணிந்து கூறலாவது தோன்றியது கெடுமோ என்றவழிக் கெடுமென்றல் .. .. வாய்வாளாமையாவது ஆகாயப்பூ நன்றோ தீதோ என்றாற் குரையாடாமை" மணி ௫0 உ௫டு - சக

## வேறு உரையாசிரியர்

தொல். சொல் சூ கடு. 'குமமாயத்திறக்குப்பயறு' மணி உஎ கஅடு.

## நச்சினார்க்கினியர்

சீவக கசுஉடு. 'மணிமேகலையிற் கூறிய கலைகள்' மணி. உ கஅ-௫க

## மயிலைநாதர்

நன். சூ. உகசு 'பயற்றுக்குமாயம்' மணி உஎ கஅடு

மணிமேகலையில் வந்துள்ள

# வேறு கதைகள்.

அடி எண். பதிகம்

க - அ சம்புத்தீவத்தெய்வமாகிய சம்புவென்பவள், பூமிதேவிக்கு அரக்கரால் வரும் துயரத்தைப் போக்குதற்கு நாவல்மரத்தின்கீழ்நின்று தவஞ்செய்தது.

கO - கஉ காந்தனென்னுஞ் சோழனொருவனுடைய வேண்டுகோளால் அகத்தியமுனிவர், தமது கமண்டலத்திருந்த காவிரியைப் பெருகச்செய்தது

உசு - ௩க சம்பாபதி புகாரநகரத்திற்குக் காவிரிப்பூம்பட்டினமென்று பெயரளித்தது.

## க - ஆவது காதை

க - சு அகத்தியமுனிவர் கட்டளையின்படி, தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியனென்னுஞ் சோழனொருவன் காவிரிப்பூம் பட்டினத்தில் இந்திரனுக்கு விழாச்செய்தது

## உ - ஆவது காதை

சுகூ - ருரு கண்ணகி மதுரையம்பதியை அழித்தது.

## ரு - ஆவது காதை

ருங - ச. சூரியனுடையகிரணத்தாற் சிறையிழந்த சம்பாதி காவிரிப் பூம்பட்டினத்தைச்சார்ந்த ஒருவனத்தில் இருந்தமையால் அவ்வனம், சம்பாதிவனமென்று பெயர்பெற்றதென்பது.

ருரு - சு காவிரியின் தந்தையாகிய கவேரமுனிவர் இருந்தமையால், காவிரிப்பூம்பட்டினத்தைச்சார்ந்த ஒருவனம் கவேரவன மென்று பெயர்பெற்றதென்பது.

௱உங - ச பிரத்தியுமனன் பேடிக்கோலம்பூண்டு வாணாசுரனுடையநகர வீதியிற்சென்று ஆடியது

கசுகூ - எ அருச்சுனன் பேடிவடிவங்கொண்டு விராடநகரஞ்சென்றது

## ச - ஆவது காதை

௱Oஎ - அ நிகாற்பெருவளத்தான் முதுமைவேடம்பூண்டு வழக்குத் தீர்த்தது.

## கக - ஆவது காதை

அங - கூரு வற்கடகாலமொன்றில் உணவுகிடையாமையால் கௌசிக முனிவர் நாயூனைக்கவர்ந்து தின்னத்தொடங்கியபொழுது இந்திரன்கட்டளையால் மழைபெய்ததென்பது

## கங - ஆவது காதை

கூங அசலமுனிவர் பசுவின் புதல்வரென்பது

௯௪ சிருங்கிமுனிவர் சமீகமுனிவருக்குப் பசுவினிடம் பிறந்தவ ரென்பது

சுச விரிஞ்சிமுனிவர் புலியின் புதல்வரென்பது

௬௫ கேசகம்பளரென்பவர் நரியின் புதல்வரென்பது.

௧௪ - ௬. முனிவரிருவர் பிரமதேவருடைய முன்னிலையில் தெய்வ கணிகை யொருத்திபால் தோன்றினரென்பது.

## ௧௫ - வது காதை

௯௧ - ௯ பிரச்சோதனனுற்ற சிறைவைக்கப்பட்ட உதயணனைச் சிறை மீட்டற்கு யூகியென்பவன் வேறுவடிவங்கொண்டு சென்றது

## ௧௭ - ஆவது காதை

௯ - ௧௨ அணைகட்டுதற்பொருட்டு வானரங்கள் மலைகளைக்கொணர்ந்து கடலிற் போகட்டது

## ௧௮ - ஆவது காதை

௯௦ - ௯௧ அகலிகையை விரும்பிய இந்திரன் கௌதமமுனிவருடைய சாபத்தால் ஆயிரங்கண்பெற்றது

௯௨ - ௬ அக்கினிதேவன் முனிவரெழுவர்களுடைய மனைவியரை விரும்பியதை அவன்மனைவி அறிந்து, அம்மங்கையர் வேடத்தைத் தனித்தனியே ஒவ்வொருகாலத்துப்பூண்டு, அவன்வேட்கையைத்தணித்தது

## ௧௯ - ஆவது காதை

௫௧ - ௨ திருமால் வாமனவடிவங்கொண்டு மாவலிபாலிரந்து பின்பு பேருருவெடுத்து அடியிற் படியை அடக்கியது

## ௨௨ - ஆவது காதை

௨௫. பரசுராமர் அரசர்களுடைய பரம்பரையை வேரறுத்தது.

௨௧௦ மனுவென்னுஞ் சோழராசன், தன்மகன்மேலே தேர்க்காலைச் செலுத்தி முறைசெய்தது

## ௨௩ - ஆவது காதை

௧௦௫ - ௧௧ கார்க்கடந்தையொருத்தியின் வரைவிலொழுக்கத்தால், அவளுடைய மகன் மரணமுற்றது

௧௧௨ - ௮. வேடனொருவன், அறிவில்லாமல், சூல்முதிர்ந்தமானொன்றை எய்து, அதன்வயிற்றினின்றும் நழுவிய குட்டியைக்கண்டு உயிர் நீத்தது

## ௨௪ - ஆவது காதை

௭ - ௧௯ தேவகணிகையர் நூற்றிருபத்தெண்மர் காவிரிப்பூம்பட்டினத்தில் மானிடக்கணிகையர் மரபில் முன்பு பிறந்தார்களென்பது

## ௨௮ - ஆவது காதை

௧௫ - ௫௪. கற்பின்மிக்க நீலியென்பவளுடைய சாபத்தால், கோவலன் கொலையுண்டிறந்தானென்பது

௭௭ - ௯௦ சேரன்செங்குட்டுவன், கண்ணகியின் படிமம் சமைத்தற்கு வடநாட்டரசர்களை வென்று இமயமலையிலிருந்து கல் கொணர்ந்தது.

# புத்ததேவனுடைய பெயர்கள்.

சூ - சூடாமணிநிகணடு
தி - திவாகரம
நா - நாமலிஙகாநுசாஸனம
பி - பிஙகலம
ம - மணிமேகலை
வே - வேறுநூலகள

[இபபெயரகளுள ஒருபொருட் பலபெயராய் வருவனவுமுள.]

அகளஙகமூாததி, சூ
அகளஙகன, தி.
அணணல, சூ தி
அதவயவாதி, நா
அநநதலோசனன, தி.
அாககபநது, நா
அரசுநிழலிருநதோன, சூ
அருஙகலைநாயகன, தி
அருணெறிகாககுஞசெலவன, தி
அருளறமபூணடோன, ம
அறததலைமுதலவன, ம
அறமபகாநதோன, வே
அறவாழியாளவோன, ம
அறவியஙகிழவோன, ம
அறவோன, ம
அறிவன, பி
ஆதி, சூ. தி.
ஆதிதேவன, சூ
ஆதிபுஙகவன, பி
ஆதிமுதலவன, ம.
ஆதிமுனிவன, ம
ஆரியன, ம
இயலகுணன, ம
உாகாதுயாமொழிபபோன, ம
உலோகஜித, நா
எணணிலகணணுடையோன, சூ
எணபிறககொழியவிருநதோன, ம
ஏகதேவன, தி ம
ஒருவன, ம
கணபிறககளிககுஙகணணோன, ம.
கநதன, வே
கலைகட்கெலலாம்நாதன், சூ
காமறகடநதோன, ம
கௌதமன, நா.
சாககியமுனி, நா
சாககியன, சூ
சாககியஸிஹமன, நா.
சாநதன, சூ தி பி
சாஸதா, நா.
சினநதவிாநதோன், சூ
சினன, சூ தி பி
சினேநதிரன, ம.
செலவன, சூ.
சைனன, சூ தி
சௌததோதனி, நா.
தசபலன, நா.
ததாகதன, சூ நா
தயாவீரன, ம
தாமராஜன், சூ நா
தருமதலைவன, ம
தருமன, பி.
தனனுயிாககிரஙகான, ம.
தீநெறிககடுமபகைகடநதோன், ம.
தீமொழிககடைத்தசெவியோன, ம
துறககம்வேணடாததொலலோன, [ம.
நரகாதுயாகெடநடபபோன, ம
நலலறமபகாநதோன, வே
நறறவமூாததி, தி
நாதன, ம
பகவன, சூ தி பி ம
பகவான, நா
பஞசதாரைவிட்டவுணாககூட்டிய
பெருமான, சூ தி
பாதுககதுககன, வே.
பாாமிசைநடநதோன, பி
பாரினமிசையோன, தி.
பிடகன, பி
பிணிபபறுமாதவன, ம
பிறாககறமருளுமபெரியோன், ம

## மறுப்புக்கள்

---

புத்தர், பரதுக்க துக்கியாகிப் பிறர்க்கே உறுதிக்குழந்தாராயினும், ஈசனுண்டென்றாவது ஆன்மாக்களுண்டென்றாவது யாதொன்றும் விளங்கக்கூறாமையாற் பெரியோர்கள், அவருடைய கொள்கைகளை எடுத்தெடுத்துக் கூறிப் பல்வகையாக மறுத்து உரைப்பாராயினர், அம்மறுப்புக்களுட் சில வருமாறு,—

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

அருளிச்செய்த

## தேவாரங்கள்

---

திருச்சிற்றம்பலம்

**கோயில்**

பட்டைத் துவராடைப் படிமங் கொண்டாடு
முட்டைக் கட்டுரை மொழிவ கேளாதே
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
நட்டப் பெருமானை நாளுந் தொழுவோமே.

வெற்றரையுழல்வார்துவராடையவேடத்தாரவர்களுரைகொள்ளன்மின்
மற்றவருலகினவலம்மவைமாற்றகில்லார்
கற்றவர்தொழுதேத்துசிற்றம்பலங்காதலாற்கழற்சேவடிகைதொழ
உற்றவருலகினுறுதிகொளவல்லவரே.

**திருநெல்வாயில்**

குண்டர் மண்டுவர் கூறை மூடர்சொற்
பண்ட மாகவை யாத பண்பினர்
விண்ட யங்குநெல் வாயிலார் நஞ்சை
உண்ட கண்டரெம் முச்சி யாரே

**திருக்கழிப்பாலை**

செய்ய நுண்டுவ ராடையி னாரொடு
மெய்யின் மாசு பிறங்கிய வீறிலாக்
கையர் கேண்மையை நீக்கு கழிப் பாலையெம்
ஐயன் சேவடி யேயடைந் துய்ம்மினே

# அரும்பத முதலியவற்றின் அகராதி


அ - அழகு, 37
அஃது, 69
அக்கபாதன் - நையாயிகமதாசாரியன், 309
அக்கூத்து, 21 330
அந்ததாரேவார் 130
அகத்தியர் - ஒரு தெய்வமுனிவர் தமது கமண்டலத்திலிருந்து காவிரியைத் தந்தனன்றி அரசனுடைய வேண்டுகோளால் பூமியிற் பெருகச் செய்தார் அவ்வரசன் பரசுராமருக்கு அஞ்சித் தம்பால் அடைக்கலம் புகுந்தபொழுது அவனைப் பாதுகாத்தவர், தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியனைக் கொண்டு காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழா எடுப்பித்தோர், 2, 149, 242
அகதிகள்-ஆதாரமற்றவர்கள், 151, 343.
அகநகர் - உள்நகர் 19, 256, 258
அகநகாசற்றம், 284
அகநாடகம், 21
அகநானூறு - எட்டுத்தொகையுள் ஏழாவது தொகைநூல் இதைத் தொகுத்தான் உப்பூரி குடிகிழார் மகனுவான உருத்திரசன்மன், தொகுப்பித்தான் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி. இந்நூல் அகமெனவும் அகப்பாட்டு எனவும் வழங்கப்படும், 14, 28, 31, 41, 60, 65, 254, 274
அகநிஷ்டலோகம், 8
அகம், 195, 255, 264
அகமலியுவகை, 168
அகல், 75
அகல்யை, 191.
அகல்வாய ஞாலம், 203
அகலம், 99, 201
அகலிருவானம், 210.
அகவயின், 5, 20, 109, 111, 113, 165, 205, 209, 227, 275
அகவரை, 81
அகவிதழ், 228.
அகவை, 74, 122, 137, 163-4
அகழி, 64
அகறல், 29, 41
அகன் சுரை, 131, 177
அகன் பெருந்தீவு, 290
அகன் மனையரங்கம், 87
அகிஞ்சநயாயதனலோகம், 3
அகில், 96, 177, 305, 327
அகுசலவேதனை - துக்கவறிவு, இது பஞ்சஸ்கந்தங்களுள் ஒன்றாகிய வேதனையின் பகுதி மூன்றனுள் ஒன்று, 381
அகைமலர் - மலர்ந்த மலர், 275
அங்கநாடு - துசசயனென்னும் அரசனுடையது, இதன் இராசதானி கச்சயநகரம், 29, 93, 113
அங்கம் ஆறு-வேதத்தின் அவயவங்களான வியாகரணம், சோதிடம், நிருத்தம், சந்தஸ், சிக்ஷை, கல்பம் என்னும் ஆறு நூல்கள், 310
அங்கஹீனர், 343
அங்காகமம் - சைனாகமம் மூன்றனுள் ஒன்று, இது பன்னிரண்டு வகைப்படுமென்பர், 316
அங்காடிவீதி, 94
அங்கி - அக்கினி, 194, 319-20
அங்குசம், 45, 204, 306
அங்கோத்தர நிகாயம் - ஸுத்த பிடகத்தின் பேருறுப்பினுள்

ஒன்று இங்கிற் பிரத்தியக்ஷப்பிர மாணத்தின் இலக்கணம் கூறப் பட்டுள்ளதென்பர், 299.
அச்சமென்னும் மெய்ப்பாடு, 111
அச்சுவவாரியர் - குதிரைவீரர், 331
அச்சுவினி, 122
அசத்து, 362
அசரீரி, 172
அசலன் - பசுவயிற்றிற்பிறந்த ஒரு முனிவன், 147
அசனனுவுள்ளவுபயத்தனம் விகலம், 361
அசனனு, 361
அசனிவேகம் - கட்டியங்காரனுடைய பட்டத்து யானை, 45
அசாதாரணம், 356
அசித்தம் நான்குவகை, 355-6
அசிதகேசகம்பளர் - ஒருமுனிவர், 147
அசுசிபாவனை, 383
அசுபபாவனை, 387 - 9
அசும்பு - சிறுதிவலை சேறு, 96
அசரதத்தச்சன், 84, 236
அசுரர் பலவகையர், 82
அசுவகோஷ போதிஸத்துவர் - புத்த சரித்தத்தை வடமொழியிற் காப்பியமாகச் செய்தவர், 111, 268, 381
அசைநிலை (ஐ, ஓ), 34
அசோகமரம், 41, 267
அசோதரம் - இரவிவன்மனென்னும் அரசனுடைய நகரம், 93 104
அஞ்சலி, 144, 154
அஞ்சனம், 200
அஞ்சிலோதி, 97, 255
அஞ்செங்கழுநீர், 210
அஞ்செஞ்சாயல், 69
அஞ்செவி, 59
அஞ்சொல், 62
அஞ்ஞானம், 106
அஞர் - துன்பம், 139.
அட்டமிதிதி - பட்டினி இருத்தற் குரிய தினங்களுளொன்றென பர் சைனர், அட்டமியில் பகலி லுண்ணலாகாதென்பர் தரும நூலுடையார், 35
அட்டிற்சாலை - மடைப்பள்ளி, 218
அடர் - தகடு, 163, 281
அடர்க்குறுமாக்கள், 145, 166
அடர்ப்பொன்பட்டை, 163
அடலருமுந்நீர், 179
அடிக்குங்கோலம், 256
அடிகள், 34, 141, 230
அடிசில், 230.
அடித்தொழில், 247
அடித்தோழி - முச்சற்றோழி, 294
அடித்தொடலாகிய சூளுறவு, 201
அடிபிழைத்தல், 206
அடிமணை, 204
அடியார்க்கு நல்லார் - சிலப்பதிகார உரையாசிரியர், 22, 30, 64, 109, 117, 133, 150, 200, 205, 208, 213, 328, 330, 332
அடிப்பணையாகிய நாவாய், 120
அடிவிளக்கல், 271.
அடுதொழில், 176.
அடை 197,
அடைக்கலம் - சரண், 366
அடைகரை, 96, 103, 168 17[illegible] 230, 278, 301
அடையாளமாலை - சோழபரம்பரை யார்க்குரிய ஆத்திமாலை போல்வது, 46
அண்டலை, 308
அண்ணத்தொடாதல், 370
அண்ணல், 298
அணைந்தநல், 130
அண்மைவிளி, 242, 255
அணங்கு - தெய்வம், 31, 179
அணங்கு கா பேயர், 78
அணி - அழகு ஆபரணம், 40, 49
அணிகலம், 94, 195
அணிமாதியோக சித்திகள் எட்டு 238
அணிபலும் அணிந்தன்று, 100
அணுக்கள் ஐந்து, 313
அணுக்கள்செறிந்த உலகம், 129
அணுக்கள் நான்கு, 312
அணுகலணுகல், 225.
அத்தம் - அரியவழி, 145
அத்தமிக்குஞ்சூரியன், 271
அத்தி - அஸ்திகாயம், இஃது ஐந்து வகைப்படும், நிகண்டவாத நூல் வழக்கு, 318.

அதிபதி - காந்தார நாட்டுள்ள பூருவ தேசத்தரசன், நீலபதி கணவன் இராகுலனுடைய தந்தை இவனது இராசதானி இடவயமென்பது, தன் மைந்தனும் துறவு பூண்டோனுமான பிரமதருமனென்பவனது கட்டளையால் அந்நகரை நீங்கிப் பின் அதன் வடக்கேயுள்ள அவந்திநகரை இராசதானியாகக் கொண்டான், 102-4, 278
அதிமல்லன் - கங்கவம்சத்தைச் சார்ந்த ஓரரசன், 207
அத்துவைதவாதிகள், 234
அதபலோகம், 3
அதர் - வழி, 145.
அதன்மாத்திகாயம், 318
அதிசயம், 221
அதுமீத்தவதை, 294
அதிமதுரம், 155
அதிராசமூலவேந்தன், 206
அந்தக்கேணி - உள்ளே மறைந்த நீரையுடைய கிணறு, கரப்புநீர்க்கேணியென்றும் கூறப்படும் இதனை, 'பிரச்சன்னகூபம்' என்பர் வடநூலார், 211 - 2
அந்தகாரம், 179
அந்தணர், 58, 65, 142, 145, 147, 243
அந்தணர் வீதி, 331
அந்தணரிருவர், 149.
அந்தணருவாதத், 146
அந்தணாளன், 35, 247
அந்தணீர், 34
அந்தப்புரம், 257 - 8
அந்தம் - மரணம், 376
அந்தரசாரிகள் - சாரணர், பௌத்தரில் வித்திபெற்றோர், 332
அந்தரஞ்செல்லும் மந்திரம், 182
அந்தரஞ்செல்லுவோர், 225, 260, 298
அந்தரத்தீவகம், 290
அந்தரத்தீவு, 5, 83
அந்தரந்திரியச் செய்யும் மந்திரம், 115
அந்தரம், 87, 116, 172, 224, 275, 292.
அந்தரி - துர்க்கை, இவளுக்கு விந்தமலையில் ஓராலயம் உண்டு, 225
அந்திக்காலம், 203
அந்திமாலை, 66, 274
அந்தியென்னும் பசலைமெய்யாட்டி, 66
அந்தில் - அசை, அவ்விடம், 92, 132, 150, 165
அந்திவருணனை, 65
அந்தீந்தண்கதிர், 67
அந்தீந்தண்ணீர், 111
அந்நுவயம் - சேர்க்கை, 305, 352
அந்யதாசித்தம், 355
அந்வயஞ் சாதித்தல், 352
அநந்தஞானி - மற்கலி தேரன் பெயர், 312
அநந்வயம், 351, 362
அநாகாமி, 81
அநான்மவாதிகள் - ஆன்மாவென்று ஒரு பொருளில்லையென்று சொல்லுவோர், 355, 375
அநான்மா, 388
அநித்தம், 233, 276, 317, 351, 353, 358
அநித்தவாதி, 354
அநித்தியம், 354
அநிருத்தன் - பிரத்தியும்னன்மகன், 67
அநுமான், 225
அநுமானம், 305, 309
அநுமானவளவையில் மற்ற அளவைகள் அடங்குமென்றல், 350
அநுமானவிருத்தம், 354
அநுமானாபாசம், 365.
அநுமேயம், 305
அநைகாந்திகம், 355 - 6
அநோமதரிசி - பழைய புத்தர்களுள் ஒருவர், 360
அப்பவாணிகர், 329
அப்பிரகலோகம், 3
அப்பிரசித்த சம்பந்தம், 354
அப்பிரசித்த விசேடணம், 354
அப்பிரசித்த விசேடியம், 354-5
அப்பிரசித்தவுபயம், 354
அப்பிரமாண சுபலோகம், 3
அப்பிரமாணாபலோகம், 3

